


# ॥ श्री सूर्यशतकम् ॥

(मयूरकविप्रणीतम्)

# ஸ்ரீ ஸூர்ய சதகம்

(மயூரகவி இயற்றியது)

(ஸம்ஸ்க்ருத-தமிழ் மூலமும் விளக்கவுரையும்)

ஸ்ரீ

सर्वरोगनिवारक

# ॥ श्री सूर्यशतकम् ॥

(मयूरकविप्रणीतम्)

# ஸ்ரீ ஸூர்ய சதகம்

(மயூரகவி இயற்றியது)

(ஸம்ஸ்க்ருத-தமிழ் மூலமும் விளக்கவுரையும்)

"நவரத்னமாலா" M.K.**வெங்கடராமன்,** M.A.,




பதிப்பகத்தார்

**லிப்கோ பப்ளிஷர்ஸ் (பி) லிட்**

புதிய எண். 36, வடக்கு சாலை, மேற்கு சி.ஐ.டி. நகர், சென்னை-600 035.
தொலைபேசி: 2434 1538, 2433 6467
E-mail: info@lifcobooks.com • Website: www.lifcobooks.com

**கிளைகள்**

எண். 17/1, நந்திகோயில் தெரு,
தெப்பகுளம்,
**திருச்சி-620 002**
போன்: 0431-2717726

எண். 50-51,
கிழக்கு சாரங்கபாணி தெரு,
**கும்பகோணம்-612 001**
போன்: 0435-2424467 / 96777 34567

**புத்தக விற்பனையாளர்கள்**

**சாய் உமாலக்ஸ் வென்சுர்ஸ்**
புதிய எண். 5, பழைய எண். 2,
தெற்கு தண்டபாணி தெரு,
தி.நகர், சென்னை-600 017
போன்: 044-2434 8324

**ஐஸ்வர்யாஸ் டிரேடர்ஸ்**
சீனிவாஸா நகர்,
191, திருஞான சம்பந்தர் தெரு,
மடிப்பாக்கம், சென்னை-600 091
போன்: 99401 33256

**ஹோட்டல் ராயல் பார்க்**
செம்மா மடம்,
ராமநாதபுரம் ஹைவே,
ராமேஸ்வரம்-623 526
போன்: 04573-221680

**விலை ரூ. 60/-**

நூல் விளக்கக் குறிப்பு

நூலின் பெயர் : ஸ்ரீ ஸூர்ய சதகம் (மயூரகவி இயற்றியது) (ஸம்ஸ்க்ருத-தமிழ் மூலமும் விளக்கவுரையும்)

ஆசிரியரின் பெயர் : "நவரத்னமாலா" M.K.வெங்கடராமன், M.A.,

உரிமை : பதிப்பகத்தாருக்கு

பொருள் : துதிப்பாடல்

மொழி : தமிழ்

பதிப்பு : முதற் பதிப்பு - 2010

மறு அச்சு : 2015

நூலின் அளவு : டெம்மி 1 X 8

தாள் : 60 ஜி.எஸ்.எம்.

அச்செழுத்து : 12 புள்ளி

மொத்த பக்கங்கள் : 136 பக்கங்கள்

வெளியீடு : லிப்கோ பப்ளிஷர்ஸ் (பி.) லிட்.,
புதிய எண். 36, வடக்கு சாலை
மேற்கு சி.ஐ.டி. நகர்,
சென்னை-600 035

அச்சு : சங்கர் பிரிண்டர்ஸ் (பி) லிட்.
சென்னை-600 042

நூலின் விலை : **ரூ. 60/-**

# முன்னுரை

''மண்தோன்றா, கல்தோன்றிய காலத்திலிருந்து'' ஸ்ரீ ஸூர்ய வழிபாடு, புனித பாரத தேசம் மட்டுமல்லாது, இதர தேசங்களிலும் புழக்கத்திற்கு வந்திருக்கிறது. மனிதர்கள் மட்டும் அல்லாத எல்லா ஜீவராசிகளுக்கும் ஸூர்யனின் ஸான்னித்யம் அத்யாவசியமாகிறது. வேதங்களில் ஸூர்ய வழிபாட்டிற்கு தனி மகத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. மூன்று வேதங்களின் ஸாரமாகக் கருதப்படுகிற, ஸ்ரீ காயத்ரீ மஹா மந்த்ரத்திற்கு ஸ்ரீ ஸூர்ய பகவானே (ஸவிதா என்ற ப்ரசித்தமான பெயரில்) முக்கிய உபாஸனா தெய்வம். இத்தகைய காரணங்களினால் ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதர்கள், ஷண்மதங்களில் ஒன்றாக ''ஸௌரம்'' என்ற பெயரில், இதர முக்கிய தெய்வங்களுக்கு இணையாக ஸ்ரீ ஸூர்ய பகவானுக்கு ஒரு ஸ்தானம் அளித்திருக்கிறார்.

மேலும் மும்மூர்த்திகளின் ஸ்வரூபமே ஸ்ரீ ஸூர்ய பகவான். அனைவருக்கும் ஸ்ரீ ஸூர்ய பகவான் ப்ரத்யக்ஷமான தெய்வம். நாஸ்திகர்கள் கூட ஸ்ரீ ஸூர்ய பகவானின் மகத்துவத்தை மறுக்க முடியாது. இந்த தெய்வத்தைத் தேடி எவரும் எந்த க்ஷேத்ரத்திற்கும், ஆலயத்திற்கும் நாடிப்போகத் தேவையில்லை. அனுதினமும் நாம் இருக்கும் இடத்திலேயே அவரை தரிசனம் செய்துவிடலாம்.

''ஆரோக்யம் பாஸ்கராத் இச்சேத்'' என்பது வடமொழிப் பழமொழி. த்ருடகாத்ரமான சரீரம், நோயற்ற வாழ்வு வேண்டுமானால், அதற்கு ப்ரத்யேகமான அனுக்ரஹ சக்தி படைத்த கடவுள் ஸ்ரீ ஸூர்ய பகவான்தான். ''நமஸ்கார ப்ரியோ பானு:'' என்பது இன்னொரு வடமொழிப் பொன்மொழி. தைத்திரீய ஆரண்யகத்தில் காணப்படும் ப்ரத்யேகமான மந்த்ரங்களைச் சொல்லி, அனுவாகத்திற்கு அனுவாகமோ அல்லது ''பஞ்சாதி''க்குப் பஞ்சாதியோ (சரியான பதம் -

பஞ்சாஶத்), விசேஷமாக ஞாயிற்றுக்கிழமைகளில் ஸூர்ய நமஸ்காரம் அனுஷ்டித்து வருவது என்பது தொன்றுதொட்டு வழக்கத்தில் இருக்கும் ஸம்ப்ரதாயம். ''லகு ஸூர்ய நமஸ்காரம்'' என்று தினந்தோறும் சுருக்கமாகச் செய்யும் ''த்ரிசகல்பம்'' என்ற பத்ததியும் வழக்கத்தில் உண்டு.

ஸ்ரீ ஸூர்ய பகவானைப் பற்றிய ஸ்தோத்திரங்கள் அநேகம் இருக்கின்றன. அவற்றில் ''ஆதித்யஹ்ருதயம்'' ப்ரஸித்தமானது. மயூரகவியினால் இயற்றப்பட்ட ''ஸூர்ய சதகம்'' தனித்தன்மை வாய்ந்தது. இதனை இயற்றியவர் மயூரகவி என்ற மஹாகவி. இவரைப் பற்றிய சரித்திர வரலாறு, வாழ்ந்த காலம் முதலியவைகள் பற்றி போதுமான ஆதாரச் சான்றுகள் இல்லை. அப்படி கிடைக்கும் சில சான்றுகளும் ஆராய்ச்சியாளர்களின் சர்ச்சைக்கு உட்பட்டிருக்கிறது. பக்தியில் மட்டும் நாட்டம் கொண்டவர்களுக்கு இந்த விவரங்கள் தேவை இல்லை. காளிதாஸன் கூறியபடி சரித்திர புருஷர்கள், மஹான்கள், மஹாகவிகள் போன்றோர் ''யஶ: ஶரீரிண:'' அதாவது அவர்கள் பூத உடலை நீக்கிய பிறகும் அவர்களது ''புகழ்'' ரூபமான சரீரம், அழியாமல், தொடர்ந்து அமரத்துவம் வாய்ந்தவைகள். அந்த வகையில் மயூரகவியும், அவரது படைப்பான ''ஸூர்ய சதகமும்'' அமரத்துவம் வாய்ந்தவைகள். ஆயினும் இவர் சுமார் 7-வது நூற்றாண்டு (கி.பி) வாழ்ந்தார் என்ற பொதுவான அபிப்ராயம் நிலவுகிறது. மேலும், இவர், கனோஜை ஆண்ட ஹர்ஷவர்த்தனச் சக்ரவர்த்தியின் சபையை அலங்கரித்த கவிச்ரேஷ்டர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார் என்றும் அறியப்படுகிறது.

இவரைப் பற்றிய கர்ணபரம்பரையான விஷயங்கள் சில கூறப்படுகின்றன. ஸம்ஸ்க்ருதத்தில் பேர்போன வசன காவியமான ''காதம்பரி''யை இயற்றிய பாணகவியின் மாமனார் இவர் என்று கூறப்படுகிறது. மேலும், இவர் தொழுநோயினால் பீடிக்கப்பட்டு, அதன் நிவாரணத்திற்காக இந்த ''ஸூர்ய சதகம்'' இயற்றி குணம் பெற்றார் என்றும் கூறப்படுகிறது. இதுவே இந்த நூலின் மகத்துவத்துக்கு முக்கிய சான்று.

இப்பொழுதும் கேரளதேசத்தில் இந்த ''ஸுர்ய சதகத்தில்'' இருக்கும் 101 சுலோகங்களையும் படனம் செய்து, ஒவ்வொன்றிற்கும் ஒரு நமஸ்காரமாக அனுஷ்டிக்கிறார்கள் என்று கூறப்படுகிறது. தமிழ் நாட்டிலும், இந்த நூல் பல்லவர்கள் ஆண்ட காலத்தில் பரவலாகப் புழக்கத்தில் இருந்து வந்தது என்று அக்காலத்திய கல்வெட்டுகளின் மூலம் தெரியவருகிறது என்று தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். நடமாடும் தெய்வமாக விளங்கிய ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி, ஸ்ரீபரமாசார்யாள் அவர்கள் இந்த நூலைப் பாராயணம் செய்வதை, பல பக்தர்களுக்கு பரிவுரை கூறியுள்ளார்கள் என்றும், பல பக்தர்கள் நிதர்சனமான பலன்களைப் பெற்றிருக்கிறார்கள் என்றும் தெரியவருகிறது. மேலும், பல வியாதிகளுக்கு நிவாரணமாக பலருக்கு இந்நூல் பயன்பட்டிருக்கிறது என்ற காரணத்தால், இது ''ஸர்வரோகநிவாரக ஸுர்யசதகம்'' என்றும் வழங்கப்படுகிறது.

இந்த நூல் 100 சுலோகங்களும், பலச்ருதியாக 101-வது சுலோகமும் கொண்டது. ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் ஒரு வித்தியாசமான ப்ரார்த்தனை காணப்படுகிறது. அதாவது ''ஸ்ரீ ஸுர்ய பகவான் **உங்களுக்கு** க்ஷேமங்களைக் கொடுக்கட்டும், **உங்களுக்கு** ஐசுவர்யங்கள் நல்கட்டும், **உங்களுடைய** பாபங்களையும், கஷ்டங்களையும் அழிக்கட்டும்'', என்று இவ்வாறெல்லாம் படன சீலர்களை முன்னிட்டே கவி ப்ரார்த்தனை செய்கிறாரே தவிர, **தனக்கு** எந்த விருப்பமும் நிறைவேற வேண்டும் என்று ப்ரார்த்திக்கவே இல்லை. இவ்விதம் அவருடைய தன்னலம் அற்ற பண்பாடு பளிச்சிடுகிறது.

இந்த க்ரந்தம் கடினமான சொற்கோவைகளைக் கொண்டு ''பனஸ பாகம்'' என்ற வகையைச் சார்ந்தது. அதாவது, பலாப்பழம் உரித்து சுளைகளை எடுப்பது கடினமான காரியம், ஆனால் சுளைகளைச் சுவைத்தால் தேனாக இனிக்கும். மேலும் இந்நூல் ''கௌடீ'' என்ற கடினமான காவிய நடையைக் கொண்டது. பலவிதமான சொல் அணிகளும், பொருள் அணிகளும், இதனை மிகத்தரம் வாய்ந்த கவிதை நூலாகவும் பரிமளிக்கச் செய்கிறது. அதன் காரணமாகவே பல ''ஆலங்காரிக விமர்சகர்கள்'' இதன் பல

சுலோகங்களை மேற்கோள்களாகக் கையாண்டிருக்கிறார்கள். முக்கியமாக சிலேடை அணியை வெகு லாகவமாக பல இடங்களில் கவி ப்ரயோகித்திருக்கிறார். யமகம்,ப்ராஸம், அனுப்ராஸம் என்ற சப்தாலங்காரங்கள் பெருமளவில் கையாளப் பட்டிருக்கின்றன. சுருக்கமாகச் சொல்லப் போனால், இந்த க்ரந்த கர்த்தா தனது கவித்திறன் அனைத்தையும் அர்ப்பணித்து, ஒரு மகிமை பொருந்திய ஸ்தோத்திரமாகவும் சமைத்திருக்கிறார். இதில் கவிஞர் பெரும்பாலும் கையாண்டு இருக்கும் யாப்பு அணியின் பெயர் ''ஸ்ரக்தரா'' என்பதாகும். ''மலர் மாலை'' என்பது இந்த சொல்லின் பொருள். இதற்கு ஏற்ப, இந்த ''பாமாலை'' நூல் ஸ்ரீ ஸூர்ய பகவானுக்கு ஒரு ''பூமாலை'' யாகவும் தொடுக்கப்பட்டிருக் கிறது என்பது ஒரு விசேஷமான கவிநயம். இவவித காரணங்களி னால், இந்த நூலை ப்ராசீனமான பதவுரைகளாலேயோ, அல்லது பொழிப்புரைகளாலேயோ ''கவிஹ்ருதயத்தை'' பரிபூரணமாக ப்ரதிபலிக்க முடியாது. உண்மையில் இது ஒரு சவாலான காரியம். அதனால்தான், ஒரு ''விளக்கவுரையாக'' இதனைத் தமிழாக்கம் செய்யத் துணிந்தேன். எனது எளிய வசன நடையை வாசகர்கள் பெரிதும் வரவேற்பார்கள் என்று எண்ணுகிறேன்.

இந்த சுலோகங்கள் ஒவ்வொன்றிற்கும் பொதுவான பலச்ருதி (101-வது சுலோகத்தில் கூறியபடி) உண்டு. ஆயினும் சில சுலோகங்களுக்கு ப்ரத்யேகமான விசேஷமான பலச்ருதி களும் உண்டு. அவைகள் அங்கங்கே தேவையான இடங்களில், குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

இந்நூலைப் பயன்படுத்தும் வாசக அன்பர்கள் அனைவருக்கும், மூலக்ரந்தகர்த்தா கூறியபடி, திடமான தேஹ ஆரோக்கியம், கவிதாசக்தி, நற்புத்தி, நீண்ட ஆயுள், இஹ-பர சுகங்கள், பாப நிவ்ருத்தி, நீங்காத செல்வம், ஸத்ஸந்தானம் முதலான அனைத்து ச்ரேயஸ்ஸுகளும் கிட்டவேண்டும் என்று ஸ்ரீ ஸூர்ய பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

- ''நவரத்னமாலா'' **M.K. வெங்கடராமன்**

# பொருளடக்கம்

## II. ஸூர்யரத குதிரைகளின் வர்ணனை (44-49)



## III. அருணதேவனின் வர்ணனை (50-61)

## V. ஸூர்ய மண்டல வர்ணனை (73-80)



## VI. ஸ்ரீ ஸூர்ய பகவானின் நேரிடை வர்ணனை (81-100)

॥ ओं ॥

श्री महागणपतये नमः

श्रीसूर्यनारायणस्वामिने नमः

श्रीमयूरमहाकविप्रणीतं

# सूर्यशतकम्

## I. ஸூர்ய கிரணங்களின் வர்ணனை (1-43)

**1. செம்மைக் கிரணங்களே செல்வங்களை அருள்க! அருள்க!**

जम्भारातीभ-कुम्भोद्भवमिव दधतः सान्द्रसिन्दूररेणुं
रक्ताः सिक्ता इवौघैरूदयगिरितटी-धातुधाराद्रवस्य ।
आयान्त्या तुल्यकालं कमलवनरुचेवारुणा वो विभूत्यै
भूयासुर्भासयन्तो भुवनमभिनवा भानवो भानवीयाः ॥ १ ॥

ஜம்ப$^4$ராதீப$^4$ கும்பே$^4$ாத்$^3$ப$^4$வமிவ,
    த$^3$த$^4$த: ஸாந்த்$^3$ர ஸிந்து$^3$ரரேணும்,
ரக்தா: ஸிக்தா இவௌகை$^4$ருத$^3$ய-கி$^3$ரிதடீ
    த$^4$ாதுத$^4$ாரா த்$^3$ரவஸ்ய ।
ஆயாந்த்யா துல்ய காலம் கமலவன ருசேவாருணா,
    வோ விபூ$^4$த்யை,
பூ$^4$யா ஸுர் ப$^4$ாஸயந்தோ,
    பு$^4$வனமபி$^4$நவா ப$^4$ாநவோ ப$^4$ாநவீயா: ॥ 1 ॥

கீழ்த்திசையில் ஸூர்யதேவனின் புத்தம்புதிய ஒளிக் கிரணங்கள் உதயகிரியின் உச்சியிலிருந்து (விடியற் காலையில், ஸூர்யோதயத்தின் போது) வெளிப்போந்து உலகை பிரகாசப் படுத்துகின்றன. கிரணங்கள் செந்நிறத்துடன் பலவாறாக காட்சி யளிக்கின்றன.

கீழ்த்திசையின் லோகபாலகனாக இருப்பது தேவேந்திரன். அவன் ''ஜம்பன்'' என்ற அசுரனை மாய்த்தவன். அவனுடைய பட்டத்து யானை ஐராவதம். அதன் மஸ்தகங்களில் செந்தூரப் பரிமளப் பொடிகள் அடர்த்தியாகத் தூவப்பட்டிருக்கின்றன. ஸூர்ய தேவனின் ஒளிக்கிரணங்கள் அந்த செந்தூரப்பொடித் துகள்களைத் தாங்கிக் கொண்டு அகிலத்திற்கு வருகை தந்து கொண்டிருப்பது போல் ஒரு தோற்றம் ஏற்படுகிது.

உதயகிரியில் காவிக்கட்டியின் தாதுக்கள் நீரில் கலந்து பெருக்கெடுத்து தாரைகளாக, நீர்வீழ்ச்சிகளாக மாறுகின்றன. அந்த தாரைகளில் மூழ்கி நனைந்து வருபவைகள் போன்று ஸூர்ய கிரணங்கள் சிவப்பாகக் காட்சியளிக்கின்றன.

அதே சமயம் தாமரைகள் பூத்துக்குலுங்கும் காடுகளில் உட் புகுந்து, அவற்றின் இளம் சிவப்பு வண்ணத்தையும் அள்ளிக் கொண்டு வருவதுபோல் ஸூர்யகிரணங்கள் மிளிர்கின்றன.

இப்படிப்பட்ட தன்மைகளைக் கொண்ட ஸூர்யதேவனின் கிரணப்படலங்கள் உங்களுக்குச் செல்வங்களை நல்குவதாக அமையட்டும்.

**விசேஷக்குறிப்பு :**

இந்த சுலோகம் முதற்கொண்டு 43-வது சுலோகம் வரை ஸூர்ய கிரணங்களின் வர்ணனைகள் / துதிகள் இருக்கின்றன. **ஸூர்ய பகவானின் ஒரு அம்சத்தைத் துதித்தாலும் அது முழு ஸூர்ய பகவானையே துதித்ததாகக் கொள்ள வேண்டும்.**

**இச்சுலோகத்தின் ப்ரத்யேக பலச்ருதி :**

ஸமஸ்த ஐசுவரியங்களும், வைபவங்களும் கிட்டும்.

**2. ஒளிக்கதிர்களே மங்களங்களை நல்குக! நல்குக!**

भक्तिप्रह्वाय दातुं मुकुलपुटकुटीकोटरक्रोडलीनां
लक्ष्मीमाक्रष्टुकामा इव कमलवनोद्धाटनं कुर्वते ये ।
कालाकारान्धकारानन-पतितजगत्साध्वस-ध्वंसकल्याः
कल्याणं वः क्रियासुः किसलयरुचयस्ते करा भास्करस्य ॥ २ ॥

ப$^4$க்தி ப்ரஹ்வாய தா$^3$தும் முகுலபுட
குடீ கோடரக்ரோட$^3$ லீனாம்,
லக்ஷ்மீ மாக்ரஷ்டு காமா இவ
கமலவனோத்$^3$க$^4$ாடனம் குர்வதே யே ।
காலாகாராந்த$^4$காராநந
பதித ஜகத் ஸாத்$^4$வஸ த்$^4$வம்ஸ கல்யா:,
கல்யாணம் வ: க்ரியாஸு:
கிஸலய ருசயஸ் தே கரா ப$^4$ாஸ்கரஸ்ய ॥ 2 ॥

ஸ்ரீலக்ஷ்மீ தேவியானவள் எவருக்கும் சுலபமாக கிட்டிவிடக் கூடியவள் அல்ல. அவள் தாமரை மலர் மொக்குகளின் குகைகளுக்கும் உள்ளே (ரஹஸியமாக) மறைந்திருக்கிறாள். பக்தியுடன் வணங்கியிருக்கும் தனது பக்தனுக்கு அவள் ப்ரசன்னமாக வேண்டும் என்பதற்காக ஸூர்யதேவன் தனது கைகளைக் கொண்டு (கிரணங்களைக்கொண்டு) அவள் உறைந்திருக்கும் தாமரைக்காடுகளிலிருந்து அவளை வெளிக் கொணர வேண்டும் என்று எண்ணி அந்த தாமரை மொக்குகளை இதழ்கள் விரிந்து மலர்ந்து விடும்படி செய்கிறார்.

ஸூர்யதேவன் உலகிற்கு மேலும் ஒரு உதவி செய்கிறார். யமதேவனின் கருப்பு வண்ணத்தைப் போன்று இருக்கும் இருளின் வாயினுள் விழுந்துவிட்டு, பயத்துடன் நடுங்கி யிருக்கும் அகிலத்தின் பீதியை அந்த ஸூர்ய கிரணங்கள் ஒழித்துக்கட்டிவிடுகின்றன.

இத்துணை மகத்துவங்கள் கொண்ட ஸூர்யகிரணங்கள், இளந்தளிரின் ஒளிபோன்றிருப்பவைகள், உங்களுக்கு அனைத்து மங்களங்களையும் அளித்து அருளட்டும்.

**விசேஷ பலச்ருதி :**

அனைத்து மங்களங்களும் பெறப்பெறும்.

**3. ஆதவனே! உம்முடைய வெங்கதிர்கள் அடியார்களைக் காப்பதாக!**

गर्भेष्वम्भोरुहाणां शिखरिषु च शिताग्रेषु तुल्यं पतन्तः
प्रारम्भे वासरस्य व्युपरतिसमये चैकरूपास्तथैव ।
निष्पर्यायं प्रवृत्तास्त्रिभुवनभवनप्राङ्गणे पान्तु युष्मा-
नूष्माणं संतताध्वश्रमजमिव भृशं बिभ्रतो ब्रध्नपादाः ॥ ३ ॥

க$^{3}$ர்பே$^{4}$ஷ்வம் பே$^{4}$ா ருஹாணாம் ஶிக$^{2}$ரிஷு
ச ஶிதாக்$^{3}$ரேஷு துல்யம் பதந்த:,
ப்ராரம்பே$^{4}$ வாஸரஸ்ய வ்யுபரதி-
ஸமயே சைக ரூபாஸ்த தை$^{2}$வ।
நிஷ்பர்யாயம் ப்ரவ்ருத்தாஸ்த்ரி-
பு$^{4}$வன ப$^{4}$வன ப்ராங்க$^{3}$ணே பாந்து யுஷ்மான்,
ஊஷ்மாணம் ஸந்ததாத்$^{4}$வ-
ஶ்ரமஜமி $^{4}$வப்ருஶம் $^{3}$பிப்$^{4}$ரதோ $^{3}$ப்ரத்$^{4}$ன பாதா$^{3}$: ॥ 3 ॥

வெகு, வெகுதூரம் இடையறாத ஸஞ்சாரம் செய்து கொண்டிருப்பதால் ஆதவனின் கதிர்கள் களைப்பின் காரணமாக வெகுவாக வெண்மையைத் தாங்கியிருக்கின்றன. மூன்று புவனங்களுமே அவை தங்கு தடையின்றி உலவிவரும் முற்றமாகும். அவை தாமரை மலர்களின் உள்ளேயும் இருக்கும். மலைகளின் சிகரங்களிலும் சரிசமமாக பதிந்திருக்கும். அதே விதம் உதய காலத்திலும், அஸ்தமன காலத்திலும் ஒரே சீராகவே

இருக்கும். இத்தகைய கதிரவனின் ஒளிக்கதிர்கள் அடியார்களாகிய உங்கள் அனைவரையும் ரக்ஷிக்கட்டும்!

**4. ஆதவனின் கிரணங்களே உயிரினங்களின் போர்வைகள்!**

प्रभ्रश्यत्युत्तरीयत्विषि तमसि समुद्वीक्ष्य वीतावृतीन्प्रा-
ग्जन्तूंस्तन्तून्यथा यानतनु वितनुते तिग्मरोचिर्मरीचीन् ।
ते सान्द्रीभूय सद्यः क्रमविशद-दशाशादशाली-विशालं
शश्वत्संपादयन्तोऽम्बरममलमलं मङ्गलं वो दिशन्तु ॥ ४ ॥

ப்ரப்[4]ரஶ்யத்யுத்தரீய த்விஷி தமஸி
ஸமுத்[3]வீக்ஷ்ய வீதாவ்ருதீன் ப்ராக்,
ஜந்தூன் தந்தூன் யத[2]ாயாநதநு விதநுதே
திக்[3]மரோசிர்மரீ சீன் ।
தே ஸாந்த்[3]ரீபூ[4]ய ஸத்[3]ய: க்ரமவிஶத[3]த[3]ஶாஶா-
த[3]சாலீ விசாலம்,
ஶஶ்வத் ஸம்பாதயந்தோ(அ)ம்ப[3]ரமமலமலம்
மங்கலம் வோ தி[4]ஶந்து ॥ 4 ॥

இரவின் போது இருள்படலம் உயிரினங்களுக்கு ஒரு போர்வை போன்றிருந்தது. ஆனால் பகல் வந்ததும் அந்தப் போர்வை (இருள்படலம்) விலகிப்போய்விட்டது. இதனைக் கண்ட ஸூர்யதேவன் அந்த உயிரினங்களுக்கு தகுந்த போர்வையை அளிக்க எண்ணினார். அதன் பொருட்டு அவர் தனது கிரணங்களைப் பரப்பி, அவற்றையே நூல்களாக ஆக்கி, அவைகளை நெருக்கமாக வேய்ந்து ஒரு தூய்மையான வெண்மையான ஆடையாக உலகுக்கு அளிக்கிறார். இவ்விதம் உயிரினங்களின் மீது கருணை கொண்ட ஸூர்யதேவனின் கிரணங்கள் அடியார்களாகிய உங்களுக்கு மங்களங்களை அருளட்டும்.

**5. வெங்கதிரோனின் ஒளிக்கற்றைகள் சத்ருக்களை அழிப்பதாக!**

न्यक्कुर्वन्नोषधीशे मुषितरुचि शुचेवौषधीः प्रोषिताभा
भास्वद्ग्रावोद्गतेन प्रथममिव कृताभ्युद्गतिः पावकेन ।
पक्षच्छेदव्रणासृक्स्रुत इव दृषदो दर्शयन्प्रातरद्रे-
राताम्रस्तीव्रभानोरनभिमतनुदे स्ताद्गभस्त्युद्गमो वः ॥५॥

ந்யக்குர்வன் ஒஷதீ4ஶே முஷித ருசி-
ஶுசேவௌஷதீ4: ப்ரோஷிதாப4ா,
ப4ாஸ்வத்3க்3ராவோத்3 க3தேன
ப்ரத2மமிவ க்ருதாப்4யுத்க3தி: பாவகேன ।
பக்ஷச்சேத3 வ்ரணா ஸ்ருக் ஸ்ருத
இவ த்3ருஷதோ3 த3ர்ஶயன் ப்ராதரத்3ரே:,
ஆதாம்ரஸ்தீவ்ர ப4ானோ:
அநபி4மதநுதே3 ஸ்தாத் க3ப4ஸ்த்யுத்3க3மோ வ: ॥ 5 ॥

ஸூர்யன் உதயமாகிறார். கிரணங்கள் மேலெழுகின்றன. சந்திரன் ஒளி இழக்கிறான். ஓஷதிகளின் தலைவன் சந்திரன் ஆனதால், அவைகளும் ஒளி இழக்கின்றன. சோகத்திலும் வாடுகின்றன. ஸூர்யகாந்தக்கற்கள் தீச்சுடர்களை எழுப்பு கின்றன. அது ஸூர்யதேவனுக்கு முன்னின்று முதல் வரவேற்பு ஆரத்தி அளிப்பது போல இருக்கிறது. மலைகளின் பாறைகளின் மீது படரும் கிரணங்கள் அவற்றை செந்நிறமாக்குகின்றன. அப்பொழுது மலைகளின் இறக்கைகள் அறுபட்டு ரத்தம் சிந்துவது போல் சிவந்து இருக்கிறது. (ஒரு காலத்தில் மலைகள் இறக்கைகளுடன் வானத்தில் பறக்கும் இயல்பு கொண்டவைகளாக இருந்தன என்றும் அந்த இறக்கைகளை தேவேந்திரன் தன் வஜ்ராயுதத்தால் சிதைத்தான் என்றும் புராணங்களின் கூற்று.) இத்தகைய ஸூர்ய கிரணங்கள் உங்கள் சத்ருக்களை (வெறுக்கப்பட்டவர்களை) அகற்றுவதாக இருக்கட்டும்!

**6. கடுமையான ரோகங்களை நீக்குபவராக கருணை மிகுந்த ஸூர்யன்**

शीर्णघ्राणाङ्घ्रिपाणी-न्व्रणिभिरपघनै-र्घर्घराव्यक्तघोषान्
दीर्घाघ्रातानघौघैः पुनरपि घटयत्येक उल्लाघयन् यः ।
घर्मांशोस्तस्य वोऽन्तर्द्विगुणघन-घृणानिघ्न-निर्विघ्नवृत्ते-
र्दत्तार्घाः सिद्धसंघैर्विदधतु घृणयः शीघ्रमंहोविघातम्   ॥ ६ ॥

ஶீர்ண க்4ராணாங்க்4ரி பாணீன் வ்ரணி பி4ரபக4நை:
க4ர்க4ராவ்யக்த கே4ாஷான்,
தீ3ர்க4ாக்4 ராதாநகெ4ளகை4:
புனரபி க4டயத்யேக உல்லாக4யன் ய:।
க4ர்மாம்ஶோ: தஸ்ய வோஃந்தர் த்3விகு3ண க4னக்4ருணா
நிக்4ன நிர்விக்4ன வ்ருத்தே:,
த3த்தார்க4ா: ஸித்3த ஸங்கை4: வித3த4து
க்4ருணய: ஶீக்4ரமம்ஹோ விக4ாதம் ॥   6 ॥

குஷ்டம், ச்லேஷ்மம், க்ஷயம் போன்ற கொடிய கர்ம வியாதிகளினால் பீடிக்கப்பட்ட ரோகிகளின் நிலை பரிதாபமானது. அவர்களுடைய நாசிகள், கால்கள், கைகள் முதலான அவயவங்கள் சிதைந்து, காயங்களுடன் இருக்கின்றன. கர், கர் என்ற ஒலிகள் மாத்திரம் அவர்களிட மிருந்து வருவதால், அவர்கள் என்ன சொல்ல வருகிறார்கள் என்று எவருக்கும் புரிவதில்லை. பெரு மூச்சுகள் இறைச்சலுடன் வெளிவருகின்றன. அவர்களுடைய பாபங்கள் தடைகளாக இருந்தாலும், ஸூர்யதேவனின் உள்ளத்தில் கருணை இரட்டிப்பாகப் பெருகுகிறது. அவர் அந்த அடியார்களின் ரோகங்களை அகற்றி அவயவங்களை மறுபடியும் சரியாக இயங்கவைக்கிறார். கருணையுள்ளம் கொண்ட இந்த ஸூர்ய தேவனை ஸித்தபுருஷர்கள் அர்க்யம் முதலான பூஜைகளால் ஆராதிக்கிறார்கள். இத்தகைய மேன்மைகளைக் கொண்ட ஸூர்யதேவனின் கிரணங்கள் சீக்கிரமாகவே உங்களுடைய பாபங்களை அழிக்கட்டும்.

**விசேஷ பலச்ருதி**

குஷ்டம், ச்லேஷ்மம், க்ஷயம், கை கால் முடக்கம், மூச்சுத் திணறல் முதலான ஸகல ரோகங்களும் நிவாரணமாகும். இதன் காரணமாக இந்த நூலே "ஸர்வரோக நிவாரக ஸூர்ய சதகம் எனப்படுகிறது.

**7. ஸர்வ வ்யாபகஸ்வரூபி ஸூர்யன் கஷ்டங்களை போக்கிவிடட்டும்!**

बिभ्राणा वामनत्वं प्रथममथ तथैवांशव: प्रांशवो व:
क्रान्ताकाशान्तरालास्तदनु दशदिश: पूरयन्तस्ततोऽपि ।
ध्वान्तादाच्छिद्य देवद्विष इव बलितो विश्वमाश्वश्नुवाना:
कृच्छ्राण्युच्छ्राय-हेलोपहसित-हरयो हारिदश्वा हरन्तु ॥ ७ ॥

பி³ப்⁴ராணா வாமனத்வம் ப்ரத²மமத²
தைதை²வாம்ஶவ: ப்ராம்ஶவோ வ:,
க்ராந்தாகாஶா ந்தராலா: தது³நு த³ஶதி³ஶ: பூரய-
ந்தஸ்ததோ (அ) பி ।
த்வாந்தா³ தாச்சி² த்³ய-தே³வத்³விஷ இவ
ப³லிதோ விஶ்வமாஶ்வஶ்நுவானா:,
க்ருச்ச்²ராண்யுச்²ச்ராய ஹேலோபஹஸித ஹரய:
ஹாரித³ஶ்வா ஹரந்து ॥ 7 ॥

தேவர்களின் எதிரியான பலிச்சக்ரவர்த்தியிடமிருந்து அவனுடைய ராஜ்யத்தைப் பிடுங்கியது போல, இருளைப் போக்கடிக்கின்றன ஸூர்யதேவனின் ஒளிக்கிரணங்கள். நாராயணன் முதலில் வாமனனாக சிறிய வடிவம் எடுத்து பிறகு த்ரிவிக்ரமனாக உயர்ந்து, ஆகாசத்தில் ஊடுருவி, வியாபித்ததைப் போல், ஸூர்ய கிரணங்கள் முதலில் சிறியதாகத் தோன்றி, பிறகு மேன்மேலும் வளர்ந்து பெருகி, ஆகாயவெளியில் வியாபித்து பத்துத் திக்குகளிலும் பரவி, ஒளிவெள்ளத்தால் அகிலங்களில்

நிறைந்துவிடுகின்றன. உயரத்திலும், வியாபகத்திலும் ஒரு விளையாட்டுப்போட்டி வைத்தால் ஸூர்யதேவனின் கிரணங்கள் நாராயணனையும் மிஞ்சிவிடுகின்றன! அப்படிப் பட்ட ஆதவனின் கிரணங்கள் உங்களுடைய கஷ்டங்கள் அனைத்தையும் போக்கி விடட்டும்!

**8. அருணோதய ஸூர்யனின் ஒளிக்கிரணங்கள் சுகத்தை நல்கட்டும்!**

उद्गाढेनारुणिम्ना विदधति बहुलं येऽरुणस्यारुणत्वं
मूर्धोद्धूतौ खलीन-क्षतरुधिर-रुचो ये रथाश्वाननेषु ।
शैलानां शेखरत्वं श्रितशिखरिशिखास्तन्वते ये दिशन्तु
प्रेङ्खन्तः खे खरांशोः खचित-दिनमुखास्ते मयूखाः सुखं वः॥
८ ॥

**உத்³கா³டே⁴ நாருணிம்னா வித³த⁴தி**
**ப³ஹுலம் யே(அ)ருணஸ்யா-ருணத்வம்,**
**மூர்த்தே⁴āத்³தூ⁴தௌ க²லீன க்ஷத ருதி⁴ரருசோ**
**யே ரத²ாஸ்வாநநேஷு।**
**ஶைலானாம் ஶேக²ரத்வம் ஶ்ரிதஶிக²ரி**
**ஶிக²ாஸ்தந்வதே யே தி³ஶந்து,**
**ப்ரேங்க²ந்த: கே² க²ரா ம்ஶோ:**
**க²சிததி³நமுக²ாஸ்தே மயூக²ாஸ் ஸுக²ம் வ: ॥ 8॥**

ஸூர்யதேவனின் தேர்ப்பாகன் அருணதேவன். அவன் இயல்பாகவே சிவந்த நிறத்தினன். ஸூர்ய கிரணங்கள் (உதய காலத்தில்) இன்னும் அதிகமான செந்நிறம் கொண்டவைகள். ஆகையால், அந்த கிரணங்கள் அருணதேவனின் தேகத்தில் படரும்போது, அவனுடைய நிறத்தை இன்னும் சிவப்பாக்கு கின்றன. அருணன் ஸாரத்தியம் செய்யும்போது குதிரைகளின் கடிவாளங் களைப் பற்றி இழுத்ததிலினால் அவற்றின் வாய்களில் புண்கள் ஏற்பட்டு அவை ஸூர்ய கிரணங்களைப் போல் சிவந்து

விடுகின்றன. ஸூர்ய கிரணங்கள் மலைச்சிகரங்களின் மீது படியும்போது, அந்த மலைகள் (ரத்னக்) கிரீடங்களை அணிந்திருப்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகின்றன. பகலின் தோற்றமான உதயகாலத்தில், கிரணங்கள் ஆகாயத்தில் பரவி நிற்கின்றன. பகலவனின் அந்த கிரணங்கள் உங்களுக்கு சுகத்தை நல்கட்டும்!

**9. இக-பர சுகங்களுக்கு ஸூர்யனே காரணம்**

दत्तानन्दा: प्रजानां समुचितसमयाकृष्टसृष्टैः पयोभिः
पूर्वाह्णे-विप्रकीर्णा दिशि दिशि विरमत्यह्नि संहारभाज: ।
दीप्तांशोर्दीर्घ-दु:ख-प्रभव-भव-भयोदन्वदुत्तारनावो
गावो व: पावनानां परमपरिमितां प्रीतिमुत्पादयन्तु ॥ ९ ॥

த³த்தாநந்தா³: ப்ரஜாநாம் ஸமுசித
ஸமயாக்ருஷ்ட ஸ்ருஷ்டை: பயோபி⁴:,
பூர்வாஹ்நே விப்ரகீர்ணா
தி³ஶிதி³ஶி விரமத்யஹ்நி ஸம்ஹார ப⁴ாஜ: ।
தீ³ப்தாம்ஶோ: தீ³ர்க⁴து³:க²-
ப்ரப⁴வ ப⁴வ ப⁴யோ த³ந்வது³த்தாரநாவோ,
கா³வோவ: பாவனாநாம் பரம்
அபரிமிதாம் ப்ரீதிமுத்பாத³யந்து ॥ 9 ॥

ஸூர்யதேவன் (வேனில் காலத்தில்) நீரை இழுத்து (சேமித்து) பிறகு உரியகாலத்தில் (மாரிக்காலத்தில்) அதனை மழையாக பொழிவித்து மக்களுக்கு மகிழ்ச்சியை அளிக்கிறார். (உலகியல் இயக்கத்திற்கு) அவர் பகல் காலத்தில் தனது கிரணங்களை எல்லா திக்குகளிலும் பரவ விடுகிறார். பிறகு பகற்கால முடிவில் அந்த கிரணங்களை 'தன்னிடத்திலேயே லயப்படுத்திக் கொள்கிறார். (உள்வாங்கிக் கொள்கிறார்). நீண்டதொரு துக்கத்தை ஏற்படுத்தும் ஸம்ஸாரம் என்ற பெருங்கடல் பயங்கரமானது. அதனைக் கடப்பதற்கு அவர் ஒரு

தோணியாக இருக்கிறார். அப்படிப்பட்ட பாஸ்கரனின் மிகப்புனிதமான கதிர்கள் உங்களுக்கு எல்லையில்லாத ஆனந்தத்தை அருளட்டும்!

**10. தாமரைகளை மலரச் செய்யும் ஆதவன் ஞான போதத்தையும் மலரச் செய்கிறார்.**

बन्धध्वंसैकहेतुं शिरसि नति-रसाबद्ध-संध्याञ्जलीनां
लोकानां ये प्रबोधं विदधति विपुलाम्भोज-खण्डाशयेव ।
युष्माकं ते स्वचित्त-प्रथित-पृथुतर-प्रार्थना-कल्पवृक्षाः
कल्पन्तां निर्विकल्पं दिनकरकिरणाः केतवः कल्मषस्य ॥
१० ॥

ப3ந்த4 த்வம்ஸைகஹேதும் ஶிரஸி நதிரஸா-
ப3த்3த4 ஸந்த்4யா ஞ்ஜலீனாம்,
லோகானாம் யே ப்ரபோ3த4ம் வித3த4தி விபுலாம்-
பே4ாஜ க2ண்டா3ஶயேவ ।
யுஷ்மாகம் தே ஸ்வசித்த ப்ரதி2த
ப்ருது2தர ப்ரார்த2னா கல்ப வ்ருக்ஷா:,
கல்பந்தாம் நிர்விகல்பம் தி3னகரகிரணா:
கேதவ: கல்மஷஸ்ய ॥ 10॥

அடியார்கள் (கூட்டமாக) தங்கள் சிரங்களின் மீது விடியற் காலையில் கைகளைக் கூப்பி மிகுந்த பக்தியுடன் அஞ்ஜலி புடமாக ஸூர்யதேவனை வணங்குகிறார்கள். அப்பொழுது அந்த மக்களின் அஞ்ஜலிபுடக்குவியல் ஒரு விசாலமான தாமரைத் தடாகம் போல் ஒரு காட்சி அளிக்கிறது. ஸூர்யதேவனின் கிரணங்கள் அப்பொழுது அந்தத் தாமரைகளை மலரச் செய்கிறது. (''ப்ரபோதம்'' என்ற சொல்லுக்கு மலரச்செய்தல், ஞான போதத்தை அளித்தல் என்ற இரண்டு பொருள்கள் உண்டு.) அதாவது ஸூர்யதேவன் அந்த அடியார்களுக்கு ஞான

போதத்தையும் அளிக்கிறார். அதன் மூலம் ஸம்ஸாரபந்தம் அறவே ஒழிக்கப்பட்டுவிடுகிறது. அந்த ஸ்ரீ ஸூர்ய பகவானின் கிரணங்களை உங்கள் சித்தங்களில் தியானித்தால், அவைகள் கற்பக மரங்களைப்போல் எல்லாவிதமான அனைத்து வேண்டு கோளையும் நல்கவல்லவன என்பதில் சிறிதும் ஐயப்பாடு இல்லை. அப்படிப்பட்ட ஸூர்ய கிரணங்கள் உங்களுடைய பாபங்கள் அனைத்தையும் அழிப்பதாக அமையட்டும்!

### 11. புருஷார்த்தங்களை வாரிவழங்கும் தேவன்

धारा रायो धनायापदि सपदि करालम्बभूता: प्रपाते
तत्त्वालोकैक-दीपास्त्रिदशपतिपुरप्रस्थितौ वीथ्य एव ।
निर्वाणोद्योगि-योगिप्रगम-निजतनु-द्वारि वेत्रायमाणा-
स्त्रायन्तां तीव्रभानोर्दिवसमुखसुखा रश्मय: कल्मषाद्व: ॥ ११ ॥

த$^{4}$ாரா ராயோ த$^{4}$னாயாபதி$^{3}$ ஸபதி$^{3}$
கராலம்ப$^{3}$பூதா: ப்ரபாதே,
தத்வாலோகைக தீ$^{3}$பா: த்ரித$^{3}$ஶபதிபுர
ப்ரஸ்தி$^{2}$தௌ வீத்$^{2}$ய ஏவ ।
நிர்வாணோத்$^{3}$யோகி$^{3}$ யோகி$^{3}$
ப்ரக$^{3}$ம நிஜதநுத்வாரி வேத்ராயமாணா:,
த்ராயந்தாம் தீவ்ர ப$^{4}$ாநோ: தி$^{3}$வஸ
முக$^{2}$ஸுக$^{2}$ா: ரஶ்மய: கல்மஷா$^{3}$த்வ: ॥ 11 ॥

ஸூர்யனின் கிரணங்கள் கொடிய வெப்பத்தை அளிப்பதால் அவர் ''தீவ்ரபானு'' (வெய்யோன்) என்று கூறப்படுகிறார். ஆனாலும் அவைகள் அடியார்களுக்கு பல நன்மைகளைப் பயக்கக் கூடியவைகள். பகலின் ஆரம்பப்பொழுதில் அவைகள் சுகங்களை அளிக்கின்றன. (வறுமை என்ற) கஷ்டகாலங்களில் அவைகள் செல்வத்தைப் பொழியும் தாரைகள் (மழைத்தாரைகளைப்போல). (வாழ்க்கையில்) வீழ்ச்சி சமயங்களில் உடனேயே கைகொடுத்து

தூக்கிவிடும் கருணை கொண்டவைகள். ஸ்வர்கலோக பட்டண மாகிய அமராவதிக்குச் செல்லப் புறப்பட்ட புண்யசீலர்களுக்கு அவைகளே வழிகாட்டும் பாதைகள். அவைகளே பரமார்த்த தத்துவத்தை வெளிச்சம்போட்டு காண்பிக்கும் ஒளி தீபங்கள். மோக்ஷம் என்ற பேரின்பப் பொருளை விரும்பும் யோகியர்களை ஸூர்யமண்டலத்தின் வழியாகச் செல்வதற்கு வழிகாட்டும், வாயிற் காப்பாளனின் பிரம்புத்தடிகள். அனைத்து பாபங்களையும் அழிக்கும் தன்மை படைத்த இத்தகைய ஸூர்யகிரணங்கள் அடியார்களாகிய உங்களைக் காப்பாற்றியருளட்டும்!

**12. ஸ்ரீ ஸூர்ய பகவானின் அருட்கிரணங்கள் உங்கள் விருப்பங்களை நிறைவேற்றட்டும்!**

प्राचि प्रागाचरन्त्योऽनतिचिरमचले चारुचूडामणित्वं
मुञ्चन्त्यो रोचनाम्भः प्रचुरमिव दिशामुच्चकैश्चर्चनाय ।
चाटूत्कैश्चक्रनाम्नां चतुरमविचलैर्लोचनैरर्च्यमाना-
श्चेष्टन्तां चिन्तितानामुचितम-चरमाश्चण्डरोचीरुचो वः ॥ १२ ॥

ப்ராசி ப்ராகா[3]சரந்த்யோ (அ) நதி சிரமசலே
சாரு சூடாமணித்வம்,
முஞ்ந்சந்த்யோ ரோசனாம்ப[4]:
ப்ரசுரமிவ திஶாம் உச்சகை: சர்சனாய ।
சாடூத்கைஶ்சக்ர நாம்னாம் சதுரமவிசலை:
லோசனைரர்ச்யமானா:,
சேஷ்டந்தாம் சிந்திதானாம்
உசிதமசரமா: சண்டரோசீருசோ வ: ॥ 12 ॥

ஸூர்யதேவன் கீழ்த்திசையில் இருக்கும் உதயாசலத்தில் உதிக்கும்போது அவர் சிறிது நேரம் அந்த மலையின் சிகரத்தில் அழகான சிரோமணியாகத் திகழ்கிறார். அஷ்டதிக்குகளுக்கும் அவருடைய கிரணங்கள் பரவுகின்றன. அப்பொழுது அந்த

திக்தேவதைகளுக்கு கோரோசனம் கலந்த சந்தனப்பூச்சு திரவியத்தை இந்த கிரணங்கள் அமோகமாக சொரிவது போலத் தோன்றுகிறது. (சக்ரவாகபக்ஷிகள் இரவில் இணை பிரிந்து வருந்துகின்றன என்று இலக்கியங்களின் கூற்று). ஸூர்யோதயம் ஆனவுடன் சக்ரவாகப் பறவைகள் மகிழ்ச்சி அடைகின்றன. அவைகள் ஸூர்யகிரணங்களை கண்கொட்டாத தங்கள் நன்றிப்பார்வைகளால் ஆராதனை செய்வது போலவும், தங்கள் இனிய குரல்களால் வெகு அழகாக பாராட்டுவதைப் போலவும் ஒரு தோற்றம் ஏற்படுகிறது. இத்தகைய சிறந்த மகிமைகளைக் கொண்ட வெய்யோனின் அருட்கிரணங்கள் நீங்கள் நினைக்கும் அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றட்டும்!

**13. ஒன்று முதல் பத்துவரையிலான எண்ணிக்கை களுடன் அற்புதத் தொடர்பு கொண்ட ஆதவன் மங்களங்களைச் சொரியட்டும்!**

एकं ज्योतिर्दृशौ द्वे त्रिजगति गदितान्यब्जजास्यैश्चतुर्भि-
भूतानां पञ्चमं यान्यलमृतुषु तथा षट्सु नानाविधानि ।
युष्माकं तानि सप्तत्रिदशमुनिनुतान्यष्टदिग्भाञ्जि भानो-
र्यान्ति प्राह्णे नवत्वं दश दधतु शिवं दीधितीनां शतानि ॥ १३ ॥

ஏகம் ஜ்யோதி: த்³ரு ஶௌத்³வே
த்ரிஜக²தி க³தி³தான்யப்³ஜ ஜாஸ்யை: சதுர்பி⁴:,
பூ⁴தானாம் பஞ்சமம் யான்யலம்
ருதுஷு தத²ா ஷட்ஸு நாநாவித⁴ாநி ।
யுஷ்மாகம் தாநி ஸப்தத்ரித³ஶமுனிநுதா-
ன்யஷ்ட தி³க்³ப⁴ாஞ்ஜி ப⁴ாநோ:,
யாந்தி ப்ராஹ்ணே நவத்வம் த³ஶ
த³த⁴து ஶிவம் தீ³தி⁴தீனாம் ஶதாநி ॥ 13 ॥

(இந்த சுலோகத்தில் ஒன்று முதல் பத்து வரையிலான எண்ணிக்கைகளுடன் ஸூர்யனின் தொடர்பை சமத்காரமாக கவி இணைக்கிறார்.)

உலகில் ஒன்றேதான் ஒளி. அதுதான் ஸூர்யன். அவரே ஜகத்திற்கு இரண்டு கண்களாக இருக்கிறார். மூன்று உலகங்களிலும், ப்ரஹ்மதேவனின் நான்கு முகங்களினின்றும் தோன்றிய வேதங்களால் துதிக்கப்படுகிறார். ஐந்து பஞ்சமஹாபூதங்களில் ஒன்றான ''தேஜஸ்''ஸாக இருக்கிறார். ஆறு ருதுக்களிலும் பலவாறாக, வெகுவாகப் பாராட்டப்படுகிறார். ஏழு தேவரிஷிகள் (ஸப்தரிஷிகள்) அவரை வணங்குகிறார்கள். அவருடைய கிரணங்கள் எட்டு திக்குகளிலும் வியாபித்திருக்கின்றன. முற்பகலில் அவர் புதுமையாக (''நவ''மாக அதாவது ''ஒன்பதாக'') இருக்கிறார். அவருடைய கிரணங்களோ பத்து நூறுகளாக (அதாவது ஆயிரக்கணக்காக) இருக்கின்றன. இத்தகைய சிறப்புகளைக் கொண்ட பகலவனின் கதிர்கள் உங்களுக்கு மங்களங்களை அருளட்டும்!

### 14. வெவ்வேறு பருவங்களில் ஸூர்ய கிரணங்களின் நிலைப்பாடுகள்

आवृत्तिभ्रान्तविश्वा: श्रममिव दधत: शोषिण: स्वोष्मणेव
ग्रीष्मे दावाग्नितप्ता इव रसमसकृद्ये धरित्र्या धयन्ति ।
ते प्रावृष्यात्तपानातिशयरुज इवोद्वान्ततोया हिमर्तौ
मार्तण्डस्याप्रचण्डाश्चिरमशुभभिदेऽभीशवो वो भवन्तु ॥ १४ ॥

ஆவ்ருத்தி ப்[4]ராந்த விஶ்வா: ஶ்ரமமிவ
த[3]த[4]த: ஶோஷிண: ஸ்வோஷ்மணேவ,
க்[3]ரீஷ்மே தா[3]வாக்நி தப்தா இவ
ரஸமஸக்ரத்[3]யே த[4]ரித்ர்யா த[4]யந்தி।

தே ப்ராவ்ருஷ்யாத்த பாநாதிஶய ருஜ
இவோத்[3]வாந்த தோயா ஹிமர்தௌ,
மார்தண்டஸ்யாப்ரசண்டா: சிர-
மஶுப[4]பி[4]தே[3](அ) பீ[4]ஶவோ வோ ப[4]வந்து ॥ 14 ॥

ஸூர்ய கிரணங்கள் அகிலங்கள் முழுவதிலும் சுற்றிச்சுற்றி ஸஞ்சாரம் செய்து கொண்டிருந்ததால், பிரயாணக் களைப்பு அவைகளுக்கு ஏற்பட்டதுபோல் தோன்றுகிறது. அவைகள் தங்களுடைய வெப்பத்தினாலேயே உலர்ந்து சுண்டிப் போய் விட்டனவோ என்றும் தோன்றுகிறது. வேனில் காலத்தில் காட்டுத்தீயினால் சுட்டெரிக்கப்பட்டு விட்டனவோ என்றும் தோன்றுகிறது. அவைகள் (தாகம் மேலிட்டு) பூமியினிடமிருந்து, கோடைக்காலத்தில், நீரை பல தடவைகள் உறிஞ்சிக் கொண்டே யிருந்தன. அளவுக்கு மீறி அவைகள் தண்ணீரைக் குடித்து விட்டதால், வயிற்றுவலி ஏற்பட்டு, மாரிக்காலத்தில் அந்த நீரை வாந்தியாக கக்கிவிட்டனவோ என்றும் தோன்றுகிறது. ஆனால் குளிர்காலத்தில்தான், மார்த்தாண்டனின் கிரணங்கள் கடுமை நீங்கி இருக்கின்றன போலும்! இப்படிப்பட்ட வர்ணனைகளைக் கொண்ட வெய்யோனின் கதிர்கள் எப்பொழுதும் உங்களுடைய அசுபங்களை அழித்துக்கொண்டிருக்கட்டும்!

## 15. திசைப்பாவையர்களின் கண்களைக் கவர்ந்த கிரணங்கள்!

तन्वाना दिग्वधूनां समधिक-मधुरालोक-रम्यामवस्था-
मारूढप्रौढि-लेशोत्कलित-कपिलिमालंकृति: केवलैव ।
उज्जृम्भाम्भोज-नेत्रद्युतिनि दिनमुखे किंचिदुद्भिद्यमाना
श्मश्रुश्रेणीव भासां दिशतु दशशती शर्म घर्मत्विषो व: ॥ १५ ॥

தந்வானா தி[3]க்[3]வதூ[4]னாம் ஸமதி[4]க
மது[4]ராலோக ரம்யாம் அவஸ்த[2]ாம்,
ஆரூட்[4]ப்ரௌடி[4] லேஶோத்கலித
கபிலிமாலங்க்ருதி: கேவ லைவ ।

உஜ்ஜ்ரும்ப4ாம்பே4ாஜ நேத்ர த்3யுதிநி
    தி3நமுகே2 கிம்சிது3த்3பி4 த்3யமாநா,
ஶ்மஶ்ருஶ்ரேணீவ ப4ாஸாம் தி3ஶது
    த3ஶஶதீ ஶர்ம க4ர்ம த்விஷோ வ: ॥ 15 ॥

ஆதவனின் கதிர்களைக்கண்டு திசைப்பாவையர்கள் பெருமகிழ்ச்சியடைகிறார்கள். அவர்கள் அந்த கிரணங்களை மிக மிக இனிமையான பார்வைகளால் நோக்குவதால் அவைகள் மனோரம்யமான நிலையை அடைந்துவிடுகின்றன. இளம் கதிர்களாக இருந்த அந்த கிரணங்கள் வளர்ச்சியடைந்து, சிறிது பழுப்பு நிறத்தை அடைகின்றன. அந்த பழுப்பு நிறம் ஒன்றினாலேயே அவைகள் அரிதார ஒப்பனை அலங்காரம் செய்து கொண்டுவிட்டன போலும்! பகல் என்ற ஆடவனின் திருமுகம் அன்றலர்ந்த தாமரைகளை தனது ஒளிபொருந்திய கண்களாகக் கொண்டிருக்கிறது. (யௌவனப் பிராயத்தில் சிறு ரோமங்கள் முகத்தில் தோன்றுவதுபோல) சற்று வளர்ச்சியடைந்த கிரணங்கள் பகலவனின் திருமுகத்தில் அரும்பும் சிறு ரோமங்கள் (அரும்பு மீசை) போல் இருக்கின்றன. வெய்யோனின் இப்படிப் பட்ட கிரணங்கள், ஆயிரக்கணக்கில் இருப்பவைகள், உங்களுக்கு க்ஷேமத்தை அருளட்டும்!

### 16. மும்மூர்த்திகளும் போற்றும் கடவுள்!

मौलीन्दोर्मैष मोषीद्द्युतिमिति वृषभाङ्केन य: शङ्किनेव
    प्रत्यग्रोद्धाटिताम्भोरुह-कुहरगुहा-सुस्थितेनेव धात्रा ।
कृष्णेन ध्वान्तकृष्ण-स्वतनुपरिभवत्रस्नुनेव स्तुतोऽलं
    त्राणाय स्तात्तनीयानपि तिमिररिपो: स त्विषामुद्गमो व: ॥ १६ ॥

மௌலீந்தோ3ர் மைஷமோஷீ த்3யுதிமிதி
    வ்ருஷப4ாங்கேந யஶ் ஶங்கினேவ,
ப்ரத்யக்3ரோ த்3க4ாடிதாம்பே4ாருஹ
    குஹர கு3ஹா ஸுஸ்தி2தேனேவ த4ாத்ரா ।

**க்ருஷ்ணேன த்$^{4}$வாந்த க்ருஷ்ண ஸ்வதுநு**
**பரிப$^{4}$வ த்ரஸ்நுனேவ ஸ்துதோ(அ)லம் ,**
**த்ராணாய ஸ்தாத் தநீயானபி**
**திமிரரிபோ: ஸ த்விஷாம் உத்$^{3}$க$^{3}$மோ வ: ॥ 16 ॥**

மும்மூர்த்திகளும் ஸூர்யதேவனை ஸ்தோத்திரம் செய்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் ஒரு காரணம் உண்டு. சந்திரகலையை சிரஸ்ஸில் சூடியிருக்கும் பரமசிவனுக்கு அந்த சந்திரகலையின் காந்தி மங்கிப் போய்விடுமோ என்ற கவலை! ப்ரஹ்மதேவன் அன்றலர்ந்த தாமரையின் கர்ணிகையில் சௌக்கியமாக வீற்றிருப்பதனால், அதன் இதழ்கள் கருகி, மலர் வாடிப்போய்விட்டால், தனது சௌக்கியம் கெட்டுவிடுமோ என்று அவருக்குப் பயம்! விஷ்ணுவுக்கு இருளைப் போன்றிருக்கும் தனது கரிய மேனியில் அலாதி பிரியம். இருளை அழித்துவிடும் ஆதவன் தனது கரியவண்ணத்தைப் போக்கிவிடுவாரோ என்று அவருக்கு ஒரு சங்கை! உதயகாலத்தில் ஸூர்யனின் கதிர்கள் சிறிதளவிலேதான் இருக்கும். ஆனாலும் பெருமை வாய்ந்த ஸூர்யதேவனின் அந்த இளம் கதிர்கள் உங்களை ரக்ஷிப்பதாக அமையட்டும்!

## 17. இருளைப் போக்கி, அகிலங்களை ஒளிபெறச் செய்யும் தேவன்

विस्तीर्णं व्योम दीर्घाः सपदि दश दिशो व्यस्तवेलाम्भसोऽब्धीन्
कुर्वद्भिर्दृश्यनाना-नग-नगर-नगाभोगपृथ्वीं च पृथ्वीम् ।
पद्मिन्युच्छ्वास्यते यैरुषसि जगदपि ध्वंसयित्वा तमिस्रा-
मुस्रा विस्रंसयन्तु द्रुतमनभिमतं ते सहस्रत्विषो वः ॥ १७ ॥

விஸ்தீர்ணம் வ்யோமதீ$^{3}$ர்க$^{4}$ா: ஸபதி$^{3}$த$^{3}$ஶ தி$^{3}$ஶோ
வ்யஸ்தவேலாம்-ப$^{4}$ஸோ (அ) ப்$^{3}$தீ$^{4}$ன்,
குர்வத்$^{3}$பி$^{4}$ர்த்$^{3}$ருஶ்ய நானா நக$^{3}$ நக$^{2}$ர
நகா$^{3}$பே$^{4}$ாக ப்ரித்$^{2}$வீம் ச ப்ரித்$^{3}$வீம் ।

பத்[3]மின்யுச்ச்[2]வாஸ்யதே யைருஷஸி
ஜக[3]த்[3]பி த்[4]வம்ஸயித்வா தமிஸ்ரா,
முஸ்ரா விஸ்ரம்ஸயந்து த்[3]ருதமநபி[4]மதம் தே
ஸஹஸ்ரத்விஷோ வ: ॥ 17 ॥

ஆயிரம் ஆயிரம் கிரணங்களைப் படைத்த ஸூர்ய தேவனின் ஒளிக்கதிர்கள் பத்து திக்குகளிலும் பரவி, உடனுக்குடன் ஆகாயவெளியை விஸ்தீர்ணமாக்குகின்றன. அதனால் கடல்கள், நீர்ப்பரப்பு, கரைகள் எல்லாம் வெட்ட வெளிச்சமாகக் காணப்படுகின்றன. நகரங்கள், மலைகள், காடுகள் முதலியவைகளின் பரந்த காட்சிகள் காணப்படுவதால் பூமண்டலமே விஸ்தாரமாக செய்யப்பட்டுவிடுகிறது. விடியற் காலையில் இருள்படலம் அறவே ஒழிக்கப்பட்டுவிடுகிறது. (உயிரினங்கள் அனைத்தும்) விழிப்படையச் செய்யப்படுகின்றன. தாமரைப் பொய்கைகளும் மலர்ச்சி பெறுகின்றன. இத்தகைய சிறப்புகளைக் கொண்ட பகலவனின் ஒளிக்கதிர்கள், உங்கள் விருப்பங்களுக்கு மாறான நிகழ்வுகளை போக்கடிக் கட்டும்!

**18. மூன்று உலகங்களுக்கும் ஸூர்யன் ஒருவனே அணையா விளக்கு!**

अस्त-व्यस्तत्वशून्यो निजरुचिर-निशानश्वर: कर्तुमीशो
विश्वं वेश्मेव दीप: प्रतिहततिमिरं य: प्रदेशस्थितोऽपि ।
दिक्कालापेक्षयासौ त्रिभुवनमटतस्तिग्मभानोर्नवाख्यां
यात: शातक्रतव्यां दिशि दिशतु शिवं सोऽर्चिषामुद्गमो व: ॥
॥ १८ ॥

அஸ்தவ்யஸ்தத்வ ஶூன்யோ நிஜ
ருசிர நிஶா நஶ்வர: கர்துமீஶோ,
விஶ்வம் வேஶ்மேவ தீ[3]ப: ப்ரதிஹத
திமிரம் ய: ப்ரதே[3]சஸ்தி[2]தோபி।

தி$^{3}$க்காலாபேக்ஷயா (அ) ஸௌத்ரிபு$^{4}$வ-

னமடத: திக்$^{3}$ம ப$^{4}$ாநோர் நவாக்$^{2}$யாம்,

யாத: ஶாத க்ரதவ்யாம் தி$^{3}$ஶிதி$^{3}$ஶது

ஶிவம் ஸோ (அ)ர்சிஷாமுத்க$^{3}$மோ வ: ॥ 18॥

தீபஒளிக்கும் ஸூர்யனுக்கும் சில ஒற்றுமைகள் உண்டு. ஓரிடத்தில் இருந்து கொண்டே இரண்டும் எல்லா இடங்களுக்கும் வெளிச்சத்தைப் பரப்புகின்றன. அதாவது, தீபம் வீட்டில் ஓர் இடத்தில் இருந்தாலும், வீடு முழுவதற்கும் வெளிச்சம் அளிக்கிறது. அதே போல் ஸூர்யன் ஆகாயத்தில் ஓர் இடத்தில் இருந்தாலும் அகிலம் முழுவதற்கும் ஒளியூட்டுகிறார். இரண்டும் இருட்டை நாசம் செய்கின்றன. ஆனாலும், சில வேற்றுமைகளும் உண்டு. தீபம் அணைந்துவிட்டால் அது இல்லாமல் போய்விடும் வாய்ப்பு உண்டு. ஆனால் ஸூர்யனுக்கு அந்த நிலை இல்லை. இரவு போய் பகல் வந்துவிட்டால், தீபம் அணைந்து போய்விடுகிறது, அல்லது ஒளியிழந்து போய் விடுகிறது. ஆனால் ஸூர்யன் இரவுகள் வந்துபோனாலும், அவருக்கு அழிவு இல்லை. தீபத்திற்கு எண்ணெய், திரி போன்றவைகள் தேவைப்படு கின்றன. ஆனால் ஸூர்யனுக்கு ஒளி அவரிடத்திலேயே, எப்பொழுதும் குடிகொண்டிருக்கிறது. திக்குகள், காலம் ஆகியவைகள் ஸூர்யனால் அபேக்ஷிக்கப்படுவ தில்லை. வாஸ்தவத்தில் அவரைக்கொண்டுதான் இவைகளே நிர்ணயம் செய்யப்படுகின்றன. தினந்தோறும் அவர் மூன்று உலகங் களையும் சுற்றிச்சுற்றி வந்தாலும், இந்திரனுக்குரிய கீழ்த்திசையில் தினம் தினமும் உதிக்கும்போது, புதுப்புது பொலிவோடுதான் காணப்படுகிறார். இப்படிப்பட்ட ஸூர்ய கிரணங்கள் உங்களுக்கு மங்களங்களை நல்கட்டும்!

**19. ஸூர்ய ஸஞ்சாரத்திற்கு எல்லைகள் உண்டு. அதற்கு காரணங்களும் உண்டு**

मा गान्म्लानिं मृणालीमृदुरिति दययेवाप्रविष्टोऽहिलोकं
लोकालोकस्य पार्श्वं प्रतपति न परं यस्तदाख्यार्थमेव ।
ऊर्ध्वं ब्रह्माण्ड-खण्ड-स्फुटन-भय-परित्यक्तदैर्ध्यो द्युसीम्नि
स्वेच्छावश्यावकाशावधिरवतु स वस्तापनो रोचिरोघः ॥ १९ ॥

மா கா³ன்ம்லானிம் ம்ருணாலீம்ருது³ரிதி
த³யயேவாப்ரவிஷ்டோ (அ) ஹி-லோகம்,
லோகாலோகஸ்ய பார்ஶ்வம்
ப்ரதபதி ந பரம் யஸ்ததா³க்²யார் த²மேவ ।
ஊர்த்⁴வம் ப்³ரஹ்மாண்ட³ க²ண்ட³ ஸ்பு²டன
ப⁴யபரித்யக்த தை³ர்க்⁴யோ த்³யுஸீம்நி,
ஸ்வேச்ச²ாவஶ்யாவகாஶா வதி⁴ரவது ஸ
வஸ்தாபநோ ரோசிரோக⁴: ॥ 19 ॥

ஸூர்ய பகவான் ப்ரஹ்மாண்டத்திற்கு மேலாகவும், பாதாள லோகத்தினுள்ளும், லோகாலோக பர்வதத்திற்கு அப்பாலும் ஸஞ்சாரம் செய்வதில்லை. இதன் காரணங்களை மயூரகவி, சமத்காரத்துடன் அற்புதமாக விளக்குகிறார். பாதாள லோகத்தில் நாகர்கள் வசிக்கிறார்கள். அவர்களுடைய சரீரங்கள், தாமரைத் தண்டுகளைப் போல மிருதுவானவைகள். ஆகையால் தனது கிரணங்களின் வெப்பத்தை அவைகள் தாங்கமுடியாதவைகள் என்று எண்ணிய ஸூர்யன் கருணையுள்ளம் கொண்டு, அந்த பாதாள லோகத்தில் பிரவேசிப்பதில்லை. லோகாலோக பர்வதம் ஒளிப்பிரபஞ்சத்தையும் இருள் பிரபஞ்சத்தையும் பிரித்து வைப்பதற்காக பகவானால் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. அதன் காரணமாகவே அதற்கு 'லோகாலோக' பர்வதம் என்ற பெயர் பெற்றது. இந்த மரபுப் பெயரை பேணிக்காப்பதற்காகவே, ஸூர்யன் அந்த மலைக்கு அப்பால் செல்வதில்லை. தான்

வளர்ந்து கொண்டே போனால் ப்ரஹ்மாண்டத்தின் கூரை வெடித்துச் சிதறிவிடுமோ என்ற பயத்தினால், அவர் ப்ரஹ்மாண்டத்தைத் தாண்டி எல்லை மீறுவதில்லை. ஆனாலும் தான் சுதந்திரமாக ஸஞ்சாரம் செய்வதற்கு வேண்டுமான அளவு ஆகாயவெளியில் இடம் இருக்கிறது என்று எண்ணியேதான் ஸூர்யன் தனது கிரணங்களை அளவுக்கு மேல் நீட்டிக் கொள்வதில்லை. இப்படிப்பட்ட சிறப்பு பண்பாடுகளைக் கொண்ட வெய்யோனின் கதிர்கள் உங்களை ரக்ஷிக்கட்டும்!

**20. காண்பதற்கு இனிய ஸூர்யோதய காட்சிகள்!**

अश्याम: काल एको न भवति भुवनान्तोऽपि वीतेऽन्धकारे
सद्य: प्रालेयपादो न विलयमचलश्चन्द्रमा अप्युपैति ।
बन्ध: सिद्धाञ्जलीनां न हि कुमुदवनस्यापि यत्रोज्जिहाने
तत्प्रात: प्रेक्षणीयं दिशतु दिनपतेर्धाम कामाधिकं व: ॥ २० ॥

அய்யாம: கால ஏகோ ந ப[4]வதி
புவனாந்தோ (அ) பி வீதே (அ) ந்த[4]காரே,
ஸத்[3]ய: ப்ராலேய பாதோ[3] ந விலயமசல
ச்சந்த்[3]ரமா அப்யுபைதி ।
ப[3]ந்த[4]: ஸித்[3]த[4]ா ஞ்ஜலீனாம் ந ஹி குமுத[3]வன
ஸ்யாபி யத்ரோஜ்ஜிஹானே,
தத்ப்ராத: ப்ரேக்ஷணீயம் தி[3]யது
தி[3]னபதேர்த[4]ாம காமாதி[4]கம் வ: ॥ 20 ॥

ஸூர்யன் உதயமானால் இருட்டின் நீக்கம் பகலுக்கு மாத்திரம் இல்லை; அது அகில புவனங்களுக்குமே ஆகும். அப்பொழுது, பனிமலை மட்டிலும் உடனே உருகிக் குன்றிப் போவதில்லை; சந்திரனும் ஒளி குன்றிப்போ கிறான். அப்பொழுது சித்தபுருஷர்கள் மட்டும் கைகுவித்து அஞ்ஜலி செய்கிறார்கள் என்பதில்லை; குமுத மலர்களும் கூம்பிக்குறுகி, அஞ்ஜலிபுட

மாக இருக்கின்றன. இவ்வாறெல்லாம் கண்ணுக்கு விருந்தாக இருக்கும் அற்புதக் காட்சிகள் விடியலில், ஸூரியோதயம் ஆகும் வேளையில் காணக்கிடைக்கின்றன. இப்படிப்பட்ட சிறப்புகளைக் கொண்ட ஸூர்யனின் விடியல் ஒளி உங்கள் விருப்பங் களுக்குமேல் அதிகமாகவே நலன்களைச் சொரியட்டும்!

**21. மூவுலகங்களுக்கும், வித்தியாசமான, ஒரே கண் ஸூர்யன்**

यत्कान्तिं पङ्कजानां न हरति कुरुते प्रत्युताधिक्यरम्यां
नो धत्ते तारकाभां तिरयति नितरामाशु यन्नित्यमेव ।
कर्तुं नालं निमेषं दिवसमपि परं यत्तदेकं त्रिलोक्या:
चक्षु: सामान्यचक्षुर्विसदृशमघभिद्भास्वतस्तान्महो व: ॥ २१ ॥

யத் காந்திம் பங்கஜானாம் ந ஹரதி
குருதே ப்ரத்யுதாதி[4]க்யரம்யாம்;
நோ த[4]த்தே தாரக[4]ாபாம் திரயதி நிதராம்
ஆஶு யந்நித்யமேவ ।
கர்த்தும் நாலம் நிமேஷம் தி[3]வஸமபி பரம் யத்
த தே[3]கம் த்ரிலோக்யா:,
சக்ஷு: ஸாமான்ய சக்ஷுர் விஸத்[3]ருஶமக[4]-
பித்[3] ப[4]ாஸ்வதஸ்தான் மஹோ வ: ॥ 21 ॥

ஸூர்யதேவன் புவனங்களுக்கெல்லாம் ஒரு கண்ணாக கருதப்படுகிறார். ஆனாலும் ஜீவன்களின் சாதாரண கண் களுக்கும் இந்த கண்ணுக்கும் பல வித்தியாசங்கள் உண்டு. சாதாரண கண்களை தாமரைமலருடன் ஒப்பிடுவார்கள். அப்பொழுது தாமரைகள் தங்கள் ஏகபோக உரிமைப் பொலிவை இழந்து விடுகின்றன. ஆனால் ஸூர்யதேவன் என்ற கண் அவ்வாறு தாமரைகளின் பொலிவை அபகரிப்பதில்லை. ஆனால், மாறாக அவற்றிற்கு மேலும் அதிகமான சோபையைக்

கூட்டிக் கொடுக்கிறது. கண்களுக்கு பிரகாசம் ''தாரகைகளி னால் (விழிகளினால்). அந்த பிரகாசம் ''தாரகை''களின் (நக்ஷத்திரங்களின்) ஒளியை விரைவாக (உதயமான உடனேயே) எப்பொழுதும் அறவே அகற்றி விடுகிறது. (அதாவது ஸூர்யனுக்கு நக்ஷத்திரங்களின் உதவி தேவையில்லை). கண்கள் இமைகளை மூடி மூடித்திறக்கின்றன. அதனால் ''நிமிஷங்கள்'' தோன்றுகின்றன. ஆனால் ஸூர்யதேவன் என்ற கண் நிமிஷங்களைத் தோற்றுவிப்பதுடன் நின்று விடுவதில்லை. (பெரும் அளவிலான) பகல்களையே தோற்றுவிக்கிறது. அப்படிப்பட்ட கதிரவனின், மூவுலகங்களுக்கும் ஒரே கண்ணாக விளங்கும் பாஸ்கரனின், தேஜோ ஒளி உங்கள் பாபங்கள் அனைத்தையும் அழிப்பதாக இருக்கட்டும்.

**ப்ரத்யேக பலச்ருதி :** கண் பார்வை தீக்ஷண்யம் அடையும். கண் நோய்கள் நீங்கும்.

## 22. அஷ்டதிக்கஜங்களுக்கு பரிவு புரியும் ஸூர்யதேவன்!

क्ष्मां क्षेपीय: क्षपाम्भ: शिशिर-तर-जल-स्पर्श-तर्षादृतेव
द्रागाशा नेतुमाशाद्विरदकरसर: पुष्कराणीव बोधम् ।
प्रात: प्रोल्लङ्घ्य विष्णो: पदमपि घृणयेवातिवेगाद्दवीय-
स्युद्दाम द्योतमाना दहतु दिनपतेर्दुर्निमित्तं द्युतिर्व: ॥ २२ ॥

க்ஷமாம் க்ஷேபீய: க்ஷபாம்ப$^4$: ஶிஶிர
தர ஜலஸ்பா்ஶ தா்ஷா த்$^3$ருதேவ,
த்$^3$ராகா$^3$ஶா நேதுமா ஶாத்$^3$விரத$^3$கர
ஸர: புஷ்கராணீவ போ$^3$த$^4$ம் ।
ப்ராத: ப்ரோல்லங்க்$^4$ய விஷ்ணோ:
பத$^3$மபி க்$^4$ருணயேவாதி வேகா$^3$த்$^3$தவீய-
ஸ்யுத்$^3$தா$^3$ம த்$^3$யோதமானா த$^3$ஹது
தி$^3$னபதே: து$^3$ர்நிமித்தம் த்$^3$யுதிர்வ: ॥ 22 ॥

இரவில் பனிப்பொழிவினால் பூமண்டலத்தில் நீர் குளிர்ச்சியுற்றிருக்கிறது. அதனைப் பருகுவதற்கு காலையில் அஷ்டதிக்கஜங்கள் மிகுந்த ஆர்வமுடன் விரைந்து வருகின்றன. அவைகளின் துதிக்கை முனைகள் குறுகியிருப்பதால், தாமரை மலர்களை விரியும்படி செய்வதுபோல, ஸூர்யதேவன் கருணையுள்ளம் கொண்டு அந்த துதிக்கைத் தாமரைகளையும் விரிவடையச் செய்கிறார். (அதிக அளவில் நீரைப் பருக உதவுவதற்காக). அப்பொழுது, அவருடைய ஒளிக்கதிர்கள், வெகுவேகமாக, ஆகாச வெளியைக் கடந்து வெகு தூரத்திலிருக்கும் பூமியை நோக்கி விரைகின்றன. ஆகாசவெளி (அந்தரிக்ஷம்) ''விஷ்ணுபதம்'' என்பதினால் (பிறருடைய ஆளுகைத் தேசம் என்பதினால்) ஸூர்யதேவன் வெகு நேரம் அங்கு தங்கியிருக்க விருப்பமற்றவர்போல், வெகு வேகமாக அதனைத் தாண்டிச் சென்று விடுகிறார். மிக, மிக உயரத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் அந்த பகலவனின் சோதி உங்களுடைய துர்நிமித்தங்களையும் (துஷ்டங்களையும்) பொசுக்கிவிடட்டும்!

**23. ஒரு வித்தியாசமான மெழுகுவர்த்தி!**

नो कल्पापाय-वायोरदय-रय-दलत्क्ष्माधरस्यापि गम्या
गाढोद्गीर्णोज्ज्वल-श्रीरहनि न रहिता नो तमः कज्जलेन ।
प्राप्तोत्पत्तिः पतङ्गान्न पुनरुपगता मोषमुष्णत्विषो वो
वर्तिः सैवान्यरूपा सुखयतु निखिलद्वीपदीपस्य दीप्तिः ॥ २३ ॥

நோ கல்பாபாயவாயோரத[3]யரயத[3]லத்
க்ஷமாத[4]ரஸ்யாபி க[3]ம்யா,
[3]காடே[4]ாத்[3] கீ[3]ர்ண ஜ்வலஶ்ரீரஹநி
ந ரஹிதா நோ தம: கஜ்ஜலேந ।

ப்ராப்தோத் பத்தி: பதங்கா³ந்ந புனருபக³தா
மோஷமுஷ்ணத்விஷோ வோ,
வர்தி: ஸைவான்யரூபா ஸுக²யது
நிகி²லத்³வீப தீ³பஸ்ய தீ³ப்தி: ॥ 23 ॥

கதிரவன் ஒரு வித்தியாசமான மெழுகுவர்த்தி! சாதாரண மெழுகுவர்த்தியின் சுடர் ஒரு சிறு காற்று அடித்தாலும் அணைந்து விடும். ஆனால் ஸூர்யன் என்ற அந்த மெழுகுவர்த்தி எவ்வளவு பெருங்காற்று வீசினாலும் அணையாது. பிரளயகாலத்தில் எழும்பும் சூறாவளிக்காற்று, பெரிய பெரிய மலைகளையும் நிர்தாட்சிண்யமாக தவிடுபொடியாக்கிவிடும். ஆனால் அத்தகைய பெரும் வாயுவினாலும் இந்த மெழுகுவர்த்தி (ஸூர்யன்) அணையாது. பகலில் மெழுகுவர்த்தியின் ஒளி மங்கிக் காணப்படும். ஆனால் இந்த வர்த்தியோ, பகலில், ஒளிப்பெருக்கினால் தேஜோ மயமான செல்வத்துடன் திகழும். மெழுகுவர்த்தி அணையும்போது, அதன் திரி கருகி மையைப் போன்று கருத்துவிடும். ஆனால் இந்த மெழுகுவர்த்தியை இருள் என்ற மையினாலும் கருமை செய்துவிட முடியாது. மெழுகு வர்த்தியை விட்டில் பூச்சிகள் (பதங்கம்) பறந்து வந்து அதன் ஜ்வாலையை அணைத்துவிடும். ஆனால் ஸூர்ய கிரணங்கள் ''பதங்கன்'' என்றே பெயர் கொண்ட ஸூர்யனிடமிருந்து தோன்றுவதால் இப்படிப்பட்ட அழிவு அவைகளுக்கு நேர்வ தில்லை. ஏழு த்வீபங்களையும் உடைய சகல ப்ரபஞ்சத்திற்கும் ஒரு வித்தியாசமான மெழுகுவர்த்தி தீபமாக ஒளிரும் வெய் யோனின் சோதி உங்களை சுகமாக வைத்திருக்கட்டும்!

**24. பரிபூரணன், உயர்ந்தோன், "ருசிகரன்"**

नि:शेषाशावपूरप्रवणगुरु-गुणश्लाघनीय-स्वरूपा
पर्याप्तं नोदयादौ दिन-गम-समयोपप्लवेऽप्युन्नतैव ।
अत्यन्तं यानभिज्ञा क्षणमपि तमसा साकमेकत्र वस्तु
ब्रघ्नस्येद्धा रुचिर्वो रुचिरिव रुचितस्याप्तये वस्तुनोऽस्तु ॥ २४ ॥

நி:ஶேஷாஶாவபூர ப்ரவணகு3ருகு3ண
ஶ்லாக4நீயஸ்வரூபா,
பர்யாப்தம் நோத3யாதெ3ள தினக3ம
ஸமயோபப்லவே (அ) ப்யுன்னதைவ।
அத்யந்தம் யாந4பிக்ஞா க்ஷணமபிதமஸா
ஸாகமேகத்ர வஸ்தும்,
ப்3ரத்4நஸ்யேத்3த4ா ருசிர்வோ
ருசிரிவ ருசிதஸ்யாப்தயே வஸ்து நோ (அ) ஸ்து ॥ 24 ॥

எல்லா திக்குகளிலும் பரவி ஒளியை நிரப்பி (எல்லா ஆசைகளையும் பூரணமாக நிறைவேற்றி) தனது திறனினாலும், ச்ரேஷ்டமான குணவிசேஷத்தினாலும் இரவி எல்லோராலும் போற்றப்படும் ஸ்வரூபத்தை உடையவர். வாழ்வின் ஆரம்பமாகட்டும், அல்லது அதன் முடிவாகட்டும் (தாழ்வு, கர்வமும் கூட) மனிதன் மனம் தொய்ந்து காணப்படுகிறான். ஆனால் ஸூர்யதேவனோ உதயகாலத்திலும் சரி, மறைவு காலத்திலும் சரி, மிக்க நிமிர்ச்சியுடன்தான் இருக்கிறார். (அதாவது உதய - அஸ்தமன காலங்களில் அவரது கிரணங்கள், மேல் நோக்கியே இருக்கின்றன என்பது த்வனி). தமஸ் என்ற தமோ குணம் மனிதனிடம் காணப்படுகிறது. ஆனால் ஸூர்யதேவனுக்கோ ''தமஸ்'' (இருள்) ஒரு கணம்கூட அறவே அறியப்படுவதே இல்லை. நிலையான வாஸஸ்தானம் மனிதனுக்குக் கிடையாது. ஆனால் ஸூர்யனோ ஒரே ஸ்தானத்தில் நிலைபெற்றிருப்பவர். இப்படிப்பட்ட ஸூர்யனின் தேஜஸ் (''ருசி'') ஷட்ரஸம் போன்ற ''ருசி''யான, மனதிற்கு இசைந்த விருப்பங்களை (''ருசி''களை) பொருள்களை பெறுவதற்கு அனுக்ரகிக் கட்டும்!

## 25. ஸூர்யனும் ஒரு பால ஸுப்ரஹ்மண்யன்தான்!

बिभ्राणः शक्तिमाशु प्रशमितबलवत्तारकौर्जित्यगुर्वीं
कुर्वाणो लीलयाधः शिखिनमपि लसच्चन्द्रकान्तावभासम् ।
आदध्यादन्धकारे रतिमतिशयिनी-मावहन्वीक्षणानां
बालो लक्ष्मीमपारामपर इव गुहोऽहर्पतेरातपो वः ॥ २५ ॥

பி[3]ப்[4]ராண: ஶக்திமாஶு ப்ரஶமித
ப[3]லவத் தாரகௌர்ஜித்ய கு[3]ர்வீம்,
குர்வாணோ லீலயாத[4]: ஶிகி[2]நமபி
லஸச்சந்த்[3]ர காந்தாவப[4]ாஸம் ।
ஆத[3] த்யாத[3]ந்த[4]காரே ரதிமதிஶயிநீம்
ஆவஹன் வீக்ஷணாநாம்,
பா[3]லோ லக்ஷ்மீமபாராமபர இவ
கு[3]ஹோ (அ) ஹர்பதேராதபோ வ: ॥ 25 ॥

இந்த ஶ்லோகத்தில் கவிஞர் சிலேடையணியை உத்தியாகக் கொண்டு மூல சுலோகத்தின் அதே வார்த்தைகளால் உதய ஸூர்யனும் பால ஸுப்ரஹ்மண்யனும் ஒற்றுமை கொண்டிருக்கிறார்கள் என்று ஸாதிக்கிறார்.

உதய ஸூர்யனின் சார்பான விளக்கவுரை, இப்படி அமைகிறது. நக்ஷத்திரங்களின் ஒளியை விரைவாக, பலவந்தமாக, அடக்கி ஒடுக்கி வெற்றிகொண்ட சக்தியின் பெருமையை கொண்டிருக்கிறார். சந்திரகாந்தக்கல் (நிலவொளியின்போது) ஒளியுடன் பிரகாசிக்கக்கூடியது. அக்னியும் இயல்பாகவே ப்ரகாசம் கொண்டது. உதய ஸூர்யனின் ஒளி இவ்விரண்டையும் விளையாட்டாகவே (அனாயாசமாக) கீழ்மைப்படுத்திவிடுகிறது. சக்ரவாகப் பக்ஷிகள் இருட்டில் (இரவு நேரத்தில்) கண்கள் தெரியாமல் தனது துணைவியைப் பிரிந்து வருத்தத்தில் ஆழ்ந்

திருக்கும். இளஞ்ஸூர்யன் தோன்றியதும் அவைகளின் கண்களுக்கு மிகப்பெரிய மகிழ்ச்சி ஏற்படும். இவ்விதம் பாலஸூர்யன் இன்னொரு குகப்பெருமானைப் போன்று விளங்குகிறார். இப்படிப்பட்ட இளஞ்ஸூர்யனின், பகலின் அதிபதியின், இளம் வெயில் உங்களுக்கு அபரிமிதமான செல்வத்தை நல்கட்டும்!

பாலமுருகனின் பக்ஷத்தில் பொருள் இவ்வாறு அமைகிறது. முருகப்பெருமான் சக்தி என்ற வேலாயுதத்தை ஏந்தியிருக்கிறார். மிக பலசாலியான தாரகாசுரனின் வீரத்தை நொடியில் அழித்து, பெரும் புகழ் ஈட்டியது அந்த வேலாயுதம். ஒளிமிக்க அழகிய கண்களைத் தோகையாகக் கொண்ட மயிலை விளையாட்டாக அவன் கீழே வைத்துள்ளான். (மயில் அவனுக்கு ஒரு கேளிக்கைக் கான வாகனம் என்பது கருத்து.) அந்தகன் என்ற ஒரு பெயர் கொண்ட யமனை சத்துருவாகக் கொண்ட பரமேசுவரனின் (மூன்று) கண்களுக்கும் அதிசயமான மகிழ்ச்சியை பால முருகன் அளிக்கிறான். இப்படிப்பட்ட பாலஸுப்ரஹ்மண்யனைப் போன்றே இன்னொரு குகனாக விளங்கும் ஸூர்யதேவன் தன் இளம் வெயிலினால் உங்களுக்கு அபரிமிதமான லக்ஷ்மீகரத்தை அருளட்டும்!

**ப்ரத்யேக குறிப்பு**

வேதத்தில், தைத்திரீய ஆரண்யகத்தில் ஸூர்ய நாராயணனே, ஓம்கார ஸ்வரூபியான ஸுப்ரமண்யனாக விளங்குகிறார் என்று கூறப்பட்டுள்ளது. அந்த மந்த்ரமாவது - ''ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்ரஹ்மண்யோம், ஸுப்ரஹ் மண்யோம்'' என்பதாகும்.

**ப்ரத்யேக பலச்ருதி**

முருகப்பெருமானின் அனுக்ரஹமும், லக்ஷ்மீ கடாக்ஷமும் சித்திக்கும்.

**26. ப்ரபஞ்சத்தை ஒரு சித்திரக்காட்சியாக அளிக்கும், ஒரு வண்ண ஓவியன்!**

ज्योत्स्नांशाकर्ष-पाण्डुद्युति तिमिरमषी-शेष-कल्माषमीष-
ज्जृम्भोद्भूतेन पिङ्गं सरसिज-रजसा संध्यया शोणशोचिः ।
प्रात:प्रारम्भकाले सकलमपि जगच्चित्रमुन्मीलयन्ती
कान्तिस्तीक्ष्णत्विषोऽक्ष्णां मुदमुपनयतात्तूलिकेवातुलां वः ॥
॥ २६ ॥

ஜ்யோத்ஸ்நாம்ஶாகர்ஷ பாண்டு
த்[3]யுதி திமிரமஷீ ஶேஷ கல்மாஷ மீஷஜ்,
ஜ்ரும்பே[4]த்[3]பூ[4]தேன பிங்க[3]ம்
ஸரஸிஜ ரஜஸா ஸந்த்[4]யயா ஶோண ஶோசி: ।
ப்ராத: ப்ராரம்ப[4] காலே ஸகலமபி
ஜக[3]த் சித்ரமுன்மீலயந்தீ,
காந்திஸ்தீக்ஷ்ணத்விஷோ (அ) க்ஷ்ணாம்
முத[3]முபநயதாத் தூலிகே வாதுலாம் வ: ॥ 26 ॥

ஒரு சித்திரக்கலைஞன் பலவித வண்ணங்களைக் கொண்டு தூரிகைகளினால் ஒரு கண்காட்சி ஓவியத்தைப் படைக்கிறான். அதனைப் போன்றே கதிரவனும் பிரபஞ்சத்தையே ஒரு ஓவியக்காட்சியாக அளிக்கிறார். அந்த ஓவியத்திற்கு வெண்மை, கருமை, மஞ்சள், சிவப்பு என்ற வண்ணங்கள் தேவைப்படுகின்றன. அவைகளைப் பகலவன் எப்படிப் பெறுகிறார்? சந்திரனின் நிலவொளியிலிருந்து வெண்மை நிறத்தைக் கைப்பற்றிக் கொள்கிறார். இரவு மிச்சமாக விட்டுப்போயிருந்த இருளின் கருமை, அவருக்கு கருப்பு வர்ணமாக உதவுகிறது. தாமரைகள் சற்றே மலர்ந்த நிலையில் இருக்கும்போது, கர்ணிகையில் இருக்கும் மகரந்தப்பொடி, ஆதவனுக்கு மஞ்சள் நிறமாகப் பயன்படுகிறது. உஷத்காலத்தின் காலை ஸந்த்யை

சிவப்பு வண்ணத்தை அளிக்கிறது. கிரணங்களே இந்த ஓவியனின் தூரிகைகள். (அதிசயமான) இந்த சாதனைப் பொருள்களைக் கொண்டு வெய்யோன் உலகமனைத்தையும் ஒரு ஓவியக்கண்காட்சியாக அளிக்கிறார். அப்படிப்பட்ட ஸூர்ய பகவானின் சோதி உங்கள் கண்களுக்கு ஒப்பற்ற மகிழ்ச்சியை அளிக்கட்டும்!

**இச்சுலோகத்தின் ப்ரத்யேகமான பலச்ருதி**

மங்கிய கண் பார்வை, கண்நோய்கள், கட்புலன் கோளாறுகள் முதலானவைகளின் நிவாரணம் சித்திக்கும்.

**27. மக்களை வியக்க வைக்கும் பல கற்பனைக் காட்சிகள்!**

आयान्ती किं सुमेरोः सरणिररुणिता पद्मरागैः परागै-
राहोस्वित्स्वस्य माहारजनविरचिता वैजयन्ती रथस्य ।
माञ्जिष्ठी प्रष्ठवाहावलि-विधुत-शिरश्चामराली नु लोकै-
राशङ्क्यालोकितैवं सवितुरघनुदे स्तात्प्रभातप्रभा वः ॥ २७

ஆயாந்தீ கிம் ஸுமேரோ: ஸரணி-
ரருணிதா பாத்[3]மராகை[3]: பராகை[3]:,
ஆஹோஸ்வித் ஸ்வஸ்ய மாஹாரஜந
விரசிதா வைஜயந்தீ ரதஸ்ய ।
மாஞ்ஜிஷ்டீ[2] ப்ரஷ்ட[2] வாஹாவலி-
விது[4]த ஶிர: சாமராலீ நு லோகை:,
ஆஶங்க்யாலோகிதைவம் ஸவிது-
ரக[4]நுதே[3] ஸ்தாத் ப்ரப[4]ாத ப்ரப[4]ா வ: ॥ 27 ॥

பானுவைக் காணும் மக்களின் மனங்களில்தான் எத்தனைக் கற்பனைக்காட்சிகளை அவர் உண்டு பண்ணுகிறார்! தங்கமலையான ஸுமேரு பர்வதத்தில் தோன்றி, அங்கு இருக்கும் சிகப்பான

பத்மராகக் கற்களின் புழுதிகளை அள்ளிக்கொண்டு வரும் அருவி நீர்வீழ்ச்சியா? அல்லது தனது ரதத்தின் உச்சியின் மீது படர்ந்திருக்கும் செம்பட்டு பதாகைக் கொடியா? அல்லது ரதத்தில் பூட்டியிருக்கும் உயர்ஜாதிக் குதிரைகளின் அசைந்தாடும் சிரங்களில் திகழும் சாமரக்குஞ்சங்களின் பழுப்பு நிற அணிவரிசைகளா? இப்படியெல்லாம் உலக மக்கள் உதயஸூர்யனைப் பார்த்து பலவாறு ஊஹங்களை கற்பனை செய்யும் ''ஸவிதா'' என்றறியப்படும் ஸூர்யனின் இளம்காலை சோதி உங்கள் பாபங்களை அகற்றுவதாக இருக்கட்டும்!

## 28. வேண்டிய விருப்பங்களை ஓயாது பூர்த்தி செய்வார் ஆதவன்!

ध्वान्तध्वंसं विधत्ते न तपति रुचिमन्नातिरूपं व्यनक्ति
न्यक्त्वं नीत्वापि नक्तं न वितरतितरां तावदह्नस्त्विषं यः ।
स प्रातर्मा विरंसीदसकलपटिमा पूरयन्युष्मदाशा-
माशा-काशा-वकाशा-वतरणतरुणप्रक्रमोऽर्कप्रकाशः ॥ २८ ॥

த்[4]வாந்த த்[3]வம்ஸம் வித[4]த்தே ந தபதி
ருசிமந்நாதிரூபம் வ்யநக்தி,
ந்யக்த்வம் நீத்வாபி நக்தம் ந விதரதிதராம்
தாவத[3] ஹ்நஸ் த்விஷம் ய: ।
ஸ ப்ராதர் மாவிரம்ஸீத[3] ஸகலபடிமா
பூரயந்யு-ஷ்மதா[3]ஶாம்,
ஆசாகாஶா வகாஶாவதரண
தருண ப்ரக்மோ (அ) ர்க ப்ரகாஶ: ॥ 28 ॥

ஸூர்யன் இருளை த்வம்சம் செய்து அழிக்கிறார். காலையில் உதயமாகும்போது அதிகமான உஷ்ணத்தைக் கொடுப்பதில்லை. அவர் இரவுக்கு பகைவன் என்பது தெளிவு. அதனால் அதனை அவர் திரஸ்கரிக்கிறார். ஆனாலும் அவர் அதனைத் தோன்றாமல்

செய்வதில்லை. (அதாவது இரவுகள் மீண்டும் மீண்டும் தோன்றுவதை அவர் தடுப்பதில்லை என்பது கருத்து). பகல் அவருக்கு விருப்பமானதால் அதற்கு மேலும் மேலும் வெளிச் சத்தை அளிக்கிறார். அவர் திக்குகளையும், ஆகாசவெளியையும், இடையிலான அந்தரிக்ஷத்தையும் வெகு லாகவமாக ஊடுருவுகிறார். காலை நேரத்தில் தனது முழு தீக்ஷண்யத்தையும் அவர் வெளியிடுவதில்லை. இத்துணை சிறப்புகளைக் கொண்ட ஆதவனின் ப்ரகாசம் உங்களுடைய விருப்பங்கள் அனைத்தை யும் பூர்த்தி செய்வதில் ஓயாதிருக்கட்டும்!

**இச்சுலோகத்தின் ப்ரத்யேகமான பலச்ருதி :**

மனோபீஷ்டங்கள் அனைத்தும் பூரணமாகும்.

## 29. அகமும் புறமும் ரக்ஷிக்கும் கடவுள்

तीव्रं निर्वाणहेतुर्यदपि च विपुलं यत्प्रकर्षेण चाणु
प्रत्यक्षं यत्परोक्षं यदिह यदपरं नश्वरं शाश्वतं च ।
यत्सर्वस्य प्रसिद्धं जगति कतिपये योगिनो यद्विदन्ति
ज्योतिस्तद्द्विप्रकारं सवितुरवतु वो बाह्यमाभ्यन्तरं च ॥ २९ ॥

தீவ்ரம் நிர்வாண ஹேதுர் யத³பிச
விபுலம் யத்ப்ரகர்ஷேண சாணு,
ப்ரத்யக்ஷம் யத்பரோக்ஷம் யதி³ஹ
யத³பரம் நஶ்வரம் ஶாஶ்வதம் ச ।
யத் ஸர்வஸ்ய ப்ரஸித்³த⁴ம் ஜக³தி
கதிபயே யோ ³கிநோ யத்³வித³ந்தி,
ஜ்யோதிஸ்தத்³த்³வி ப்ரகாரம் ஸவிதுரவது
வோ பா³ஹ்யமா ப்⁴யந்தரம் ச ॥ 29 ॥

ஸ்ரீ ஸூர்ய பகவான் "நிர்வாணம்" என்ற மோக்ஷத்திற்கு காரண ரூபமானவர். அவர் உருவம் விசாலமானாலும்,

அணுவுக்கும் அணுவான பரமாணு ஆவார். அவர் ப்ரத்யக்ஷ தேவனாகவும் இருக்கிறார்; பரோக்ஷமான அந்தர்யாமியாகவும் இருக்கிறார். அவர் அழியக்கூடிய ''அபரம்'' என்ற ஜடப்ரக்ருதி யாகவும் இருக்கிறார்; சாச்வதமான ''பரா ப்ரக்ருதி'' என்ற ஜீவஸ்வரூபமாகவும் இருக்கிறார். உலகில் இருக்கும் பாமர மக்களுக்கு அவர் ப்ரஸித்தமான ப்ரத்யக்ஷதேவனாக இருக்கிறார். ஆனால் அவருடைய ஆன்மீக ஒளியை யோகியர்கள் சிலரே அறிகிறார்கள். இப்படி, ஸ்தூலமாகவும் ஸூக்ஷ்மமாகவும், உள்ளொளியாகவும் புறஒளியாகவும், இரண்டு விதமாகவும் இருக்கிறார். அப்படிப் பட்ட ஸவித்ருதேவன் அகமும், புறமும் ரக்ஷகனாக இருக்கட்டும்!

**ப்ரத்யேக பலச்ருதி :** ஆத்ம ஞானம் வரப்பெற்று உடல் நலமும் சிறப்புற்றிருக்கும்.

## 30. மூவுலகங்களுக்கும் தனித்தன்மைவாய்ந்த ஒரே ரத்னம்!

रत्नानां मण्डनाय प्रभवति नियतो-द्देश-लब्धावकाशं
वह्नेर्दार्वादि दग्धुं निज-जडिमतया कर्तुमानन्दमिन्दोः ।
यच्च त्रैलोक्यभूषाविधिरघदहनं ह्लादि वृष्ट्याशु तद्वो
बाहुल्योत्पाद्य-कार्याधिकतर-मवतादेकमेवार्कतेजः ॥ ३० ॥

ரத்னானாம் மண்ட3னாய ப்ரப4வதி நிய-
தோத்3தே3ஶ லப்3த4ாவகாஶம்,
வஹ்நேர் தா3ர்வாதி3 த3க்3து4ம் நிஜஜடி3மதயா
கர்துமானந்தமிந்தோ3:।
யச்ச த்ரைலோக்ய பூ4ஷாவிதி4ரக4த3ஹநம்
ஹ்லாதி3 வ்ருஷ்ட்யாஶு தத்3வோ,
பா3ஹுல்யோத்பாத்3யகார்யாதி4க-
தரமவதா தே3கமேவார்கதேஜ: ॥ 30 ॥

(நவமணிகளில் ஒன்றான) ரத்னம் ஒரு அணிகலனாக இருக்கும் தன்மை பெற்றதுதான். ஆனால் அதற்கு பல நிர்ப்பந்தங்கள் உண்டு. குறிப்பிட்ட சில இடங்களில்தான் அது கிடைக்கும். குறிப்பிட்ட சில காரியங்களில்தான் அது பயன் படும். அக்னி விறகுகளை எரிக்கமட்டும்தான் பயன்படும். சந்திரன் தனது குளிர்ச்சியினால் மட்டும் மக்களுக்கு ஆனந்தத்தை தரவல்லவன். ஆனால் மூவுலகங்களுக்கும் ஒரு அலங்காரமாகத் திகழும் ஸூர்யன் பலப்பல நன்மைகளை ஏராளமாக உண்டுபண்ணக் கூடிய திறம் படைத்தவர். (உதாரணமாக) எல்லா பாபங்களையும் சுட்டெரித்துவிடுகிறார். மழையைப் பொழிவித்து மக்களின் மனதில் இன்பத்தை அளிக்கிறார். அவருடைய ஜோதி உங்களை நன்றாக ரக்ஷிக்கட்டும்!

### 31. உயிர் காக்கும் விஷவைத்தியன்!

मीलच्चक्षु-र्विजिह्मश्रुति जडरसनं निघ्नितघ्राणवृत्ति
स्वव्यापाराक्षम-त्वक्परिमुषितमनः श्वासमात्रावशेषम् ।
विस्त्रस्ताङ्गं पतित्वा स्वपदपहरतादश्रियं वोऽर्कजन्मा
काल-व्यालावलीढं जगदगद इवोत्थापयन्प्राक्प्रतापः ॥ ३१ ॥

மீலச்சக்ஷுர்விஜிஹ்மஶ்ருதி ஜட3
ரஸநம் நிக்4நித க்4ராணவ்ருத்தி,
ஸ்வ வ்யாபாராக்ஷமத்வக்பரிமுஷித மன:
ஶ்வாஸ மாத்ராவஶேஷம்।
விஸ்ர ஸ்தாங்க3ம் பதித்வா ஸ்வபத3பஹ-
ரதாத3 ச்ரியம் வோ(அ)ர்கஜன்மா,
காலவ்யா லாவலீட4ம் ஜக3த3க3த3
இவோத்த2ாபயன் ப்ராக் ப்ரதாப: ॥ 31 ॥

இரவு காலம் என்பது ஒரு கால ஸர்ப்பம் போன்றது. அதனால் தீண்டப்பட்டவன் ஒரு சவம் போலவே அங்கங்கள்

செயலற்றிருக்கிறான். சுவாஸம் ஒன்றுதான் அப்பொழுது அவனிடம் மிஞ்சியிருக்கிறது. மற்ற அங்கங்கள், புலன்கள் இயங்குவதில்லை. (உதாரணமாக) கண்கள் மூடிக் கிடக்கின்றன. செவிகள் கேட்கும் திறன் அற்று இருக்கின்றன. நாவு ருசிக்கும் தன்மை அற்றிருக்கிறது. நாசிகள் முகரும் இயல்பை இழந் திருக்கிறது. தோல் தனது செயல்பாட்டை (தொட்டுணர்ச்சியை) இயக்க முடியாமல் மனத்தின் இயக்கத்தை முடக்கியிருக்கிறது. மனிதன் அவயவங்கள் யாவும் முடங்கிப் போன நிலையில் (படுக்கையில்) விழுந்து கிடக்கிறான். மொத்தத்தில் அவன் (அரவினால் தீண்டப்பட்டு) விஷத்தின் பிடியில் சிக்கி சவம்போல் ப்ரக்ஞை அற்றிருக்கிறான். இப்படிப்பட்ட வனை ஒரு விஷவைத்தியன் சிகிச்சை செய்து அவனை உயிர்த் தெழுப்புவதைப் போல், இளம் ஸூர்யனின் உதயம் அவனை புத்துணர்ச்சியுடன் உயிர்ப்பித்து எழச் செய்கிறது. அப்படிப்பட்ட ஸூர்ய பகவானின் உதயப்ரதாபம் உங்களுடைய செல்வமற்ற நிலையை (கேடுகளை) அறவே ஒழிக்கட்டும்!

**ப்ரத்யேகக் குறிப்பு**

இதன் தொடர்பாக வேதத்தில், தைத்திரீய ஆரண்யகத்தில் பின்வரும் வரிகள் ஒப்பு நோக்குதற்குரியது. ''யோ (அ)ஸௌ தபன் னுதேதி। ஸ ஸர்வேஷாம் பூதானாம் ப்ராணானாதா யோதேதி ।... ஸ ஸர்வேஷாம் பூதானாம் ப்ராணானாதாயாஸ்தமேதி।

பொருள் : இந்த உதய ஸூர்யன் எல்லா ஜீவன்களின் உயிர்களுடன் சேர்ந்தே உதிக்கிறார். அப்படியே அவர் அஸ்தமிக்கும்போது (அதாவது, இரவு வேளையில், துயில் காலத்தில்) ஜீவர்களின் உயிர்களையும் எடுத்துச் செல்கிறார்.

**விசேஷ பலச்ருதி**

ஸகலரோகங்களும் நிவர்த்தியாகும். ''ஸர்வரோக நிவாரக ஸூர்ய சதகம்'' என்ற பெயருக்கு இந்த சுலோகமும் ஒரு சான்றாகும்.

**32. ''ஸித்தாஞ்ஜனம்'' என்ற கண்மை போன்றவர் பாஸ்கரன்**

नि:शेषं नैशमम्भ: प्रसभ-मपनुदन्नश्रुलेशानुकारि
स्तोक-स्तोकापनीतारुण-रुचिर-चिरादस्त-दोषानुषङ्गः ।
दाता दृष्टिं प्रसन्नां त्रिभुवननयनस्याशु युष्मद्विरुद्धं
वध्याद्बध्नस्य सिद्धाञ्जनविधिरपर: प्राक्तनोऽर्चि:प्रचार: ॥ ३२ ॥

நி: ஶேஷம் நைஶமம்ப[4]: ப்ரஸப[4]-
மப நுத[3]ந் நஶ்ருலேஶாநு காரி,
ஸ்தோகஸ்தோகாபநீதாருண
ருசிரசிராத[3] ஸ்த தோ[3]ஷா நுஷங்க[3]: ।
தா[3]தா த்ருஷ்டிம் ப்ரஸந்நாம் த்ரிபு[4]வன
நயனஸ்யாஶு யுஷ்மத்[3]விருத்[3]த[4]ம்,
வத்[4]யாத்[3] ப்[3]ரத்[4]னஸ்ய ஸித்[3]த[4]ாந்ஜந விதிரபர:
ப்ராக்தனோர்சி: ப்ரசார: ॥ 32 ॥

சித்த வைத்திய முறைப்படி தயாரிக்கப்படும் கண்மை ''ஸித்தாஞ்ஜனம்'' எனப்படும். அதனை கண் இமைகளில் தடவிக் கொண்டால், கண்ணில் நீர் சொட்டுதல், கண் சிவந்திருத்தல், பார்வை மங்கியிருத்தல் போன்ற கண் கோளாறுகள் நீங்கி பார்வை ப்ரஸன்னமாகும். இதனைப் போன்றே ஆதவனும் இருக்கிறார் என்று சமத்காரமாக கவி இந்த சுலோகத்தில் நிரூபிக்கிறார்.

இரவில் பனித்திவிலைகள் தோன்றுகின்றன. அவைகள், மனிதனின் கண்ணீர் சொட்டுகள் போன்றிருக்கின்றன. ஸூர்யன் உதயமாகும்போது அவைகள் விரைவாக மிச்ச மில்லாமல் மறைந்து போய்விடுகின்றன. உஷத் காலத்தில் உதிக்கும் ஸூர்ய ஒளியை ''அருணோதயம்'' என்கிறோம். அருணன் ஸூர்ய ரதத்தின் ஸாரதியாகையால், அவன் முன்பாகவே தோன்றுகிறான்.

அதனால் அப்பொழுது ஆகாயம் செக்கச்செவேல் என்றிருக்கிறது. ஸூர்யன் சிறுகச்சிறுக மேலே எழும்போது அருணனின் அந்த சிவப்பு வண்ணம் கொஞ்சம் கொஞ்சமாக விலகிப்போய் விடுகிறது. அந்த சிவப்பு வர்ணத்திற்குக் காரணம் இரவு (தோஷா) என்ற தோஷத்தின் தொடர்பால் ஏற்பட்டது. ஸூர்யன் மூன்று புவனங்களுக்கும் கண்ணாக இருக்கிறார். ஜீவர்களுக்கும், கண்களாக இருப்பவரும் அவரே. அதனால் ஸூர்யன் உதயமானவுடன் மக்களுக்குப் பார்வை தெளிவாக ஆகிறது. இப்படி பலவிதத்திலும் பானுமான் மூவுலகங்களுக்கும் மற்றொரு ''ஸித்தாஞ்ஜனமாக'' இருக்கிறார். அப்படிப்பட்ட ஆதவனின் காலையின் சோதிப்பெருக்கம் உங்களுக்கு ஏற்படும் தீமைகளை சடுதியாகவே அழிக்கட்டும்.

**ப்ரத்யேக குறிப்பு**

ஸூர்ய பகவான் உயிரினங்களின் கண்களில் உட்புகுந் திருக்கிறார் என்று வேதவாக்யம் கூறுகிறது. ''ஆதித்ய: சக்ஷுர்பூத்வா அக்ஷிணீ ப்ராவிசத்''. மேலும் ''அக்ஷி உபநிஷத்'' என்ற ஒரு உபநிஷத்தும் ஸூர்ய பகவானைப் பற்றிய வேதபாகமாகும்.

**ப்ரத்யேக பலச்ருதி**

கண்ணில் நீர் வடிதல், கண் சிவத்தல், தெளிவான பார்வையின்மை முதலிய கண் நோய்கள், கோளாறுகள் நீங்கப்பெறும்.

## 33. ஐசுவர்ய வைபவங்களை நல்கும் கீழ்திசைக் கோமான்!

भूत्वा जम्भस्य भेत्तुः ककुभि परिभवारम्भभूः शुभ्रभानो-
बिभ्राणा बभ्रुभावं प्रसभमभिनवाम्भोज-जृम्भाप्रगल्भा ।
भूषा भूयिष्ठशोभा त्रिभुवनभवनस्यास्य वैभाकरी प्राग्-
विभ्रान्ति भ्राजमाना विभवतु विभवोद्भूतये सा विभा वः॥ ३३ ॥

பூ4த்வா ஜம்ப4ஸ்ய பே4த்து: ககுபி4
　பரிப4வாரம்ப4பூ4: ஶூப்4ரப4ாநோ:,
பி3ப்4ராணா ப4ப்4ருப4ாவம் ப்ரஸப4மபி4நவாம்பே4ாஜ
　ஜ்ரும்ப4ா ப்ரக3ல்ப4ா।
பூ4ஷா பூ4யிஷ்ட2 ஶோப4ா த்ரிபு4வ ன ப4வனஸ்யாஸ்ய
　வைப4ாகரீ ப்ராக்3,
விப்4ராந்தி ப்4ராஜ மானா விப4வது
　விப4வோத்3 பூ4தயே ஸா விப4ா வ: ॥　33 ॥

ஜம்பாசுரனை மாய்த்தவன் தேவேந்திரன். அவன் திக்பாலகனாக இருப்பது கீழ்த்திசைக்கு. அதுவே ஸூர்ய தேவனின் முதல் ஆக்ரமிப்பு ஸ்தானம். வெண்ணிறமுடன் இருக்கும் ஸூர்யன் அந்த திக்கில் உதயமாகும்போது செம்மை நிறத்தை ஏற்றுக் கொள்கிறார். (இரவில் கூம்பியிருந்த) தாமரை மலர்களை பலவந்தமாக மலரச்செய்வதில் சமர்த்தர். மூன்று உலகங்களுக்கும் சிறந்த ஒளியுடன் திகழும் ஒரு அணிகலன். ப்ரகாசமுடன் உதயமாகும் ஸூர்யனின் காலை வேளையின் ப்ரபை உங்கள் வைபவங்களின் (ஐசுவர்யங்களின்) வளர்ச்சிக்கு ஈடுபாடு கொண்டதாக விளங்கட்டும்!

**ப்ரத்யேக பலச்ருதி**

ஸகல ஐசுவர்யங்களும் வைபவங்களும் பெருகும்.

**34. இரவுக் கன்னிகை வளர்ந்த நந்தவனமரத்தின் இளம் தளிர்**

संसक्तं सिक्तमूला-दभिनव-भुवनोद्यान-कौतूहलिन्या
　यामिन्या कन्ययेवामृतकरकलशावर्जितेनामृतेन ।
अर्कालोक: क्रियाद्वो मुदमुदयशिरश्चक्रवालालवाला-
　दुद्यन्बालप्रवाल-प्रतिम-रुचिरह:पादप-प्राक्प्ररोह: ॥　३४ ॥

ஸம்ஸக்தம் ஸிக்தமூலாத்[3]பி[4]நவ
புவனோத்[3]யான கௌதூஹலின்யா,
யாமின்யா கன்யயேவாம்ருதகர-
கலஶாவர்ஜிதேநாம்ருதேன।
அர்கா-லோக: க்ரியாத்[3]வோ முத[3]முத[3]யஶிர
ச்சக்ர வாலா லவாலாது[3]த்[3]யன்,
பா[3]லப்ரவாலப்ரதிமருசிரஹ:
பாத[3]ப ப்ராக் ப்ரரோஹ: ॥ 34 ॥

இரவு என்ற ஒரு கன்னிகை உதயகிரியின் சிகரப்ரதேசத்தில் புதுமையான நந்தவனத்தை வளர்க்க விருப்பம் கொண்டு ஒரு நந்தவனத்தை பராமரிக்கிறாள். அவள் சந்திரனையே ஒரு குடமாகக் கொண்டு, அதில் அமுதமயமான நீரை நிரப்பி, நந்தவனத்தின் பாத்திகளில் நீரைப் பாய்ச்சுகிறாள். அவள் வேரில் நீர் வார்த்து வளர்த்த பகல் என்ற ஒரு மரத்தின் இளம்தளிர்தான் உதயஸூர்யன். அந்த மரம் பாத்தியில் முளைவிட்டு மேலே வளர்ந்ததாகும். இவ்விதம் ஒரு நந்தவனத்தில் வளர்க்கப்பட்ட மரத்தின் இளம் தளிர்போல் தோற்றம் அடைந்த இளம் ஸூர்ய னின் ஒளிவட்டம் உங்களுக்கு ஆனந்தத்தை அளிக்கக் கடவதாக!

**35. ஸூர்யன் ஒரு விசித்திரமான "பாடபாக்னி"**

भिन्नं भासारुणस्य क्वचिदभिनवया विद्रुमाणां त्विषेव
त्वङ्ग-न्नक्षत्र-रत्न-द्युति-निकर-करालान्तरालं क्वचिच्च ।
नान्तर्नि: शेषकृष्ण-श्रियमुदधिमिव ध्वान्तराशिं पिबन्स्ता-
दौर्व: पूर्वोऽप्यपूर्वोऽग्निरिव भवदघप्लुष्टयेऽर्कावभास: ॥ ३५ ॥

பி[4]ன்னம் ப[4]ாஸாருணஸ்ய க்வசித[3]பி[4]-
நவயா வித்[3]ருமாணாம் த்விஷேவ,
த்வங்க[3]ந்நக்ஷத்ர ரத்னத்[3]யுதி நிகர கரா-
லாந்தராலம் க்வசிச்ச।

நாந்தர் நிஶ்ஶேஷ க்ருஷ்ண ஶ்ரிய முத[3]தி[4]மிவ
த்[4]வாந்த ராஶிம் பிப[3]ன்ஸ்தாத்,
ஔர்வ: பூர்வோ (அ) ப்யபூர்வோ (அ) க்[3]நிரிவ
ப[3]வத[3]க[4] ப்லுஷ்டயே (அ) ர்காவ ப[4]ாஸ: ॥ 35 ॥

கடலின் சில இடங்களில் எரிமலைகள் ஆழ்ந்திருக்கும். அவைகள் சிற்சில சமயங்களில் வெடித்துச் சிதறும்போது அக்னிஜ்வாலைகள் கடல் நீர்பரப்பின் மீதே கொழுந்து விட்டு எரியும். அதனைக் கடல்தீ என்றும் ''பாடபாக்னி'' என்றும் கூறுவர். அதன் சீற்றம் கடலையே விழுங்க முற்பட்டுவிட்டது போல் தோற்றம் அளிக்கும். மயூரகவி இந்த சுலோகத்தில் ஸூர்யனை ''பாடபாக்னி''யுடன் உவமைப்படுத்துகிறார். (''சுனாமி''யின்போது இப்படிப்பட்ட ''பாடபாக்னி'' தோன்றியதாக பத்திரிகைகள் கூறின.)

பாடபாக்னியின் இயல்புகளில் சில. சிற்சில இடங்களில் செக்கச்செவேல் என்றிருக்கும். சில இடங்களில் அல்லது சில வேளைகளில் கருமையாகவும் இருக்கும். (இது புகை மண்டலங்களின் காரணமாக இருக்கலாம்.) இங்கே இருள்படலம் ஒரு கடலாக வர்ணிக்கப்படுகிறது. அதனை விழுங்க முற்பட்ட பாடபாக்னியாக ஸூர்யதேவன் கருதப்படுகிறார். கடலில் அங்கங்கே பவழங்கள் காணப்படுவதைப் போல இரவு என்ற கடலில் நக்ஷத்திரங்கள் காணப்படுகின்றன. ஸூர்யன் என்ற பாடபாக்னியின் செம்மை நிறத்திற்குக் காரணம் அருணனின் தொடர்பினால். கடலில் சில இடங்களில் கருமை நிறம் காணப் படுகிறது. அதற்குக் காரணம் ஆதிசேஷன் மீது, கருமை நிறம் கொண்ட மஹாவிஷ்ணு, லக்ஷ்மிதேவியுடன் பள்ளிகொண்டு இருப்பதுதான். இவ்வாறு வர்ணிக்கப்படும் இரவுக்கடலில் ஸூர்யன் ஒரு வித்தியாசமான ''பாடபாக்னி''யாகத் தோற்றம் அளிக்கிறார். அவர் பழமையானவர்தான் (''பூர்வன்''). ஆயினும் அவர் ''அபூர்வ''மானவராகவும் காட்சியளிக்கிறார். இப்படிப்பட்ட

ஸூர்யனின் ஒளிக்கற்றை உங்கள் பாபங்கள் அனைத்தையும் அழிப்பதாக அமையட்டும்!

**36. கந்தர்வர்கள், முனிவர்கள் போற்றும் பரமன்**

गन्धर्वैर्गद्यपद्य-व्यतिकरित-वचो-हृद्यमातोद्य-वाद्यै-
राद्यैर्यो नारदाद्यैर्मुनिभिरभिनुतो वेदवेद्यैर्विभिद्य ।
आसाद्यापद्यते यं पुनरपि च जगद्यौवनं सद्य उद्य-
न्नुद्द्योतो द्योतित-द्यौर्द्यतु दिवसकृतोऽसाववद्यानि वोऽद्य ॥३६ ॥

கந்த$^{4}$ர்வை: க$^{3}$த்$^{3}$ய பத்$^{3}$ய வ்யதிகரித
வசோ ஹ்ருத்$^{3}$யமாதோ த்$^{3}$ய வாத்$^{3}$யை:,
ஆத்$^{3}$யைர் யோ நாரதா$^{3}$த்$^{3}$யைர் முநிபி$^{4}$ரபி$^{3}$-
நுதோ வேத$^{3}$வேத்$^{3}$யைர் விபி$^{4}$த்$^{3}$ய ।
ஆஸாத்$^{3}$யாபத்$^{3}$யதே யம் புனரபிச
ஜக$^{3}$த்$^{3}$ யௌவனம் ஸத்$^{3}$ய உத்$^{3}$யன்-,
உத்$^{3}$யோதோ த்$^{3}$யோதித த்$^{3}$யௌர் த்$^{3}$யது
தி$^{3}$வஸக்ருதோ (அ) ஸாவவத்$^{3}$யாநி-வோ (அ) த்$^{3}$ய
॥ 36 ॥

ஸ்ரீ ஸூர்ய பகவானை கந்தர்வர்கள், பலவிதமான கத்ய, பத்ய ஸ்தோத்திரங்களினால் இனிய ஸங்கீத வாத்யங்கள் முழங்க, கானம் இசைத்துப் போற்றுகிறார்கள். வேதங்களை நன்கு கற்றறிந்த நாரதர் முதலான ஆதி முனிச்ரேஷ்டர்கள் தனித் தனியாக வந்து போற்றுகிறார்கள். மீண்டும் மீண்டும் ஸூர்ய பகவான் எழுந்தருளும்போது அவரைப் பெற்ற உலகமே அந்த நொடியிலேயே, யௌவனப் பொலிவை எய்துகிறது. பகலைத் தோற்றுவிக்கும் ஸூர்யதேவன் ஆகாச மண்டலத்தையே ஒளிப்படுத்துகிறார். அந்த உதயபானுவின் சோதி உங்களுடைய பாபங்களை அகற்றட்டும்!

**37. ஸூர்யன் தோன்றியதும், சந்திரனும், நக்ஷத்திரங்களும் மறைகின்றன**

आवानैश्चन्द्रकान्तैश्च्युततिमिरतया तानवात्तारकाणा-
मेणाङ्कालोक-लोपादुपहत-महसामोषधीनां लयेन ।
आरादुत्प्रेक्ष्यमाणा क्षणमुदय-तटान्तर्हितस्याहिमांशो-
राभा प्राभातिकी वोऽवतु न तु नितरां तावदाविर्भवन्ती ॥ ३७ ॥

ஆவானைஶ் சந்த்ரகாந்தை: ச்யுத திமிரதயா
தாநவாத்தாரகாணாம்,
ஏணாங்காலோக லோபாது[3]பஹத
மஹஸாமோஷதீ[4]னாம் லயேந ।
ஆராது[3]த்ப்ரேக்ஷ்யமாணா க்ஷணமுத[3]ய
தடாந்தர்ஹிதஸ்யாஹிமாம்ஶோ:,
ஆப[4]ா ப்ராப[4]ா திகீ வோ(அ)வது
நது நிதராம் தாவதா[3]விர்ப[4]வந்தீ ॥ 37 ॥

ஸூர்யன் உதயமானவுடன் சந்திரகாந்தக் கற்கள் உலர்ந்து, இறுகிப் போகின்றன. (சந்திரகாந்தக் கற்கள் நிலவொளியினால் நீர்த்துப் போகின்றன என்று பண்டைய மரபுக்கூற்று.) இரவு முற்றிலும் விலகிப்போய்விடுகிறது. அதனால் நக்ஷத்திரங்கள் ஒளிகுன்றி மறைந்து போகின்றன. சந்திரனின் இல்லாமையால் ஒளியிழந்து மூலிகைகள் புலப்படாமல் போகின்றன. உஷத் காலத்தில் ஸூர்யன் இன்னும் சற்று நேரத்தில் உதித்துவிடுவார் என்று மக்கள் ஊஹிக்கிறார்கள். அவர் வரவை மக்கள் மேலே அண்ணாந்து நோக்கி எதிர்பார்க்கிறார்கள். சற்று நேரத்தில் உதயாசலத்தை விட்டுப் புறப்பட்டு நன்றாக வெளித்தோற்றம் அளிக்கப்போகும் ஸூர்யனின் விடியற்காலை வெளிச்சம் உங்களை ரக்ஷிக்கட்டும்.

**38. ஸூர்ய ஒளி தாமரையின் தோழி. வறுமையை அகற்றுபவள்.**

सानौ सा नौदये नारुणित-दलपुनर्यौवनानां वनाना-
मालीमालीढपूर्वा परिहृत-कुहरोपान्तनिम्ना तनिम्ना ।
भा वोऽभावोपशान्तिं दिशतु दिनपतेर्भासमाना समाना
राजी राजीवरेणोः समसमयमुदेतीव यस्या वयस्या ॥ ३८ ॥

ஸாநௌ ஸா நௌத[3]யே நாருணித-
த[3]லபுனர் யௌவனானாம் வநானாம்,
ஆலீமாலீட[4]பூர்வா பரிஹ்ருத குஹரோ-
பாந்த நிம்னா தனிம்நா ।
பா[3]வோ (அ) பாவோபஶாந்திம்
தி[3]ஶது தி[3] நபதே: பா[3]ஸமானா ஸமானா,
ராஜீ ராஜீவரேணோ:
ஸமஸமயமுதே[3]தீவ யஸ்யா வயஸ்யா ॥ 38 ॥

ஸூர்யதேவன் (உதயமாகும் முன்) உதயாசலத்தில், அதன் தாழ்வரைத் தலப்பிரதேசங்களிலே தங்கி தயங்கி இருக்கிறார். அந்த மலைத்தடம் சிவந்து இருக்கிறது. யௌவனப் பிராயத்தை மீண்டும் அடைந்தது போல் அங்கிருக்கும் காட்டுப் பிரதேசங்கள் இருக்கின்றன. அவைகளை அவர் ஏற்கனவே கண்டு களிக்காதவர் இல்லை. (அதாவது, ஸூர்யன் உதயாசலத்தையும், அதில் உள்ள வனாந்தரங்களையும், யௌவனப் பொலிவுடன் திகழும் தாழ்வரைகளையும் விட்டுப்பிரிய மனம் இல்லாதவர் போல் இருக்கிறார்). அவர் தனது ரூபத்தை ஸூக்ஷ்மமாக்கிக் கொண்டு, மலைக்குகைகளையும், பள்ளத்தாக்குகளையும் லாகவமாக கடந்து புறப்படுகிறார். பிறகு அவர் உதயமாகும்போது, அவருடைய ஒளி என்ற நங்கையுடன் நட்பு கொண்ட தாமரை மலர்கள் என்ற

தோழிப்பெண்ணும், தன்னுடைய மகரந்தப்பொடி வரிசை களுடன், மலர்ந்து கூடவே புறப்பட்டு வருவதுபோல் தோற்றம் ஏற்படுகிறது. இப்படிப்பட்ட வர்ணனைகளுக்குரிய தினபதியின் ஒளி உங்களுடைய இல்லாமை என்ற வறுமையை அகற்றி விடட்டும்!

**39. தாமரை, கண்கள், ஆகியவற்றிற்கு அனுகூலர், புனிதம் அளிப்பவர்**

उज्जृम्भाम्भोरुहाणां प्रभवति पयसां या श्रिये नोष्णतायै
पुष्णात्यालोकमात्रं न तु दिशति दृशां दृश्यमाना विघातम् ।
पूर्वाद्रेरेव पूर्वं दिवमनु च पुनः पावनी दिङ्मुखाना-
मेनांस्यैनी विभासौ नुदतु नुतिपदैकास्पदं प्राक्तनी वः ॥ ३९ ॥

உஜ்ஜ்ரும்ப[4]ாம்பே[4]ாருஹாணாம் ப்ரப[4]வதி
பயஸாம் யா ஶ்ரியே நோஷ்ணதாயை,
புஷ்ணாத்யாலோகமாத்ரம் நது
தி[3]ஶதி த்[3]ருஶாம் த்[3]ருஶ்யமானா விக[4]ாதம் ।
பூர்வாத்[3]ரேரேவ பூர்வம் தி[3]வமநுச
புன: பாவநீ தி[3]ங்முக[2]ானாம்,
ஏநாம்ஸ்யைநீ விப[4]ாஸௌ நுத[3]து
நுதிபதை[3]காஸ்பத[3]ம் ப்ராக்தனீவ: ॥ 39 ॥

ஸூர்யனின் ஒளி, மலர்ந்திருக்கும் தாமரைப் பொய்கை களின் எழிலைக் கூட்டுகிறதே தவிர, அவற்றிற்கு வெப்பத்தைக் கொடுப்பதில்லை. உதய ஸூர்யனைப் பார்த்தமாத்திரத்தில் கண்களுக்கு புஷ்டியைத் தருகிறாரே தவிர, அவற்றிற்கு கேடு விளைவிப்பதில்லை. அவர் தன் கிரணங்களினால் முதலில் உதயாசலத்தையும், அதை யடுத்து ஆகாசத்தையும், அதையும் அடுத்து அஷ்டதிக் குகளையும் புனிதப்படுத்துகிறார். இவ்வித

காரணங்களால் அவர் துதிகளுக்கு முழுமையான பாத்ரமாகிறார். இத்தகைய குணாதிசயங்களைக் கொண்ட ''இனன்'' என்ற ஒரு பெயர் படைத்த ஸூர்யனின் அதிகாலை சோதி உங்களுடைய பாபங்களை அகற்றியருளட்டும்.

**40. ப்ருஹஸ்பதி, ப்ரஹ்மதேவன், மற்றும் பக்தர்களால் போற்றப்படுபவர்**

वाचां वाचस्पतेरप्यचलभि-दुचि-ताचार्यकाणां प्रपञ्चै-
वैरञ्चानां तथोच्चारित-चतुर-ऋचां चाननानां चतुर्णाम् ।
उच्येतार्चासु वाच्यच्युतिशुचि चरितं यस्य नोच्चैर्विविच्य
प्राच्यं वर्चश्चकासच्चिरमुपचिनुतात्तस्य चण्डार्चिषो वः ॥ ४० ॥

வாசாம் வாசஸ்பதேரப்யசல பி[4]து[3]சிதா-
சார்யகாணாம் ப்ரபஞ்சை:,
வைரஞ்சானாம் ததே[2]ா ச்சாரித
சதுர ரிசாம் சாநநானாம் சதுர்ணாம் ।
உச்யேதார்சாஸு வாச்ய ச்யுதி ஶுசி
சரிதம் யஸ்ய நோச்சைர்விவிச்ய,
ப்ராச்யம் வர்சஶ் சகாஸத் சிரம்
உபசிநுதாத் தஸ்ய சண்டார்சி ஷோவ: ॥ 40 ॥

மலைகளைத் தகர்த்தவன் தேவேந்திரன். அவனுடைய மரியாதைக்குரிய ஆசார்யன் ஸாக்ஷாத் குருபகவான். அவர் சொல்திறனுக்கு அதிபதி. அதனால் அவர் ''வாசஸ்பதி'' என்றழைக்கப்படுகிறார். அவர் திரள், திரளான சொற்களினால் ஸூர்ய பகவானைத் துதிக்கிறார். ப்ரஹ்ம தேவனுக்கு நான்கு முகங்கள். அவைகள் எப்பொழுதும் நான்கு வேதங்களையும் ஓதிக்கொண்டிருக்கும். அவற்றில் சில அழகிய மந்திரங்களைக் கொண்டு அவர் கதிரவக் கடவுளை தோத்திரம் செய்கிறார்.

அர்ச்சனைகளில் குற்றம் - குறைகள் இல்லாத துதிகளினால் ஸூர்யன் போற்றப்படுகிறார். அவருடைய சரிதத்தை முழுமையாகவோ, தெளிவாகவோ எவராலும் கூறிடமுடியாது! கடுமையான உஷ்ணம் கொண்டவர் (சண்டார்சி:) என்று அவருக்கு ஒரு பெயர் இருந்தாலும், கிழக்கே உதயமாகும் அவருடைய பிரகாசப் பொலிவு உங்களுடைய நலன்களை மேலும் மேலும் பெருகச் செய்யட்டும்!

### 41. பற்பல இடங்களில் பற்பல வண்ணங்கள் பளிச்சிடுகின்றன

मूर्ध्न्यद्रेर्धातुरागस्तरुषु किसलयो विद्रुमौघः समुद्रे
दिङ्मातङ्गोत्तमाङ्गेष्वभिनवनिहितः सान्द्रसिन्दूररेणुः ।
सीम्नि व्योम्नश्च हेम्नः सुरशिखरिभुवो जायते यः प्रकाशः
शोणिम्नासौ खरांशोरुषसि दिशतु वः शर्म शोभैकदेशः ॥ ४१ ॥

மூர்த்4ந்யத்3ரே: த4ா துராக3 ஸ்தருஷு
கிஸலயோ வித்5ருமௌ4க: ஸமு3த்ரே,
தி3ங்மா தங்3கோ3த்தமாங்கே3ஷ்வ பி4நவ-
நிஹித: ஸாந்த்3ர ஸிந்தூ3ர ரேணு: ।
ஸீம்நி வ்யோம்னஶ்ச ஹேம் ந: ஸுரஶிக2ரி
பு4வோ ஜாயதே ய: ப்ரகாஶ:,
ஶோணிம்நாஸௌ க2ராம்ஶோருஷஸி
தி3ஶது வ: ஶர்ம ஶோபை4கதே3ஶ: ॥ 41 ॥

ஸூர்யதேவன் கிழக்கே உதிக்கிறார். அப்பொழுது பற்பல இடங்களில் பற்பலவிதமாக வண்ணக் காட்சிகளை ஏற்படுத்துகிறார். உதயாசலத்தில் இருக்கும்போது கைரிகதாதுக்களின் (காவிக்கட்டிகளின்) செம்மை நிறத்தை பளிச்சிடச் செய்கிறார்.

மரங்களின் ஊடே கிரணங்கள் பாயும்போது இளம் தளிர்களின் பசுமை நிறம் பளிச்சிடுகிறது. கடலின் மீது கதிர்கள் பரவும்போது பவழக்கல் குவியல்கள் பளிச்சிடுகின்றன. திக்கஜங்களின் மஸ்தகங்களின் மீது கிரணங்கள் படியும்போது ஸிந்தூரப் பொடிகளின் செம்மை புத்தம்புதினவாக பிரகாசிக்கின்றன. வானத்தின் எல்லையைத் தொடும்போது, மேருபர்வதம் என்ற தங்கமலையின் மஞ்சள் நிறம் ப்ரகாசிக்கிறது. அவருடைய கிரணங்கள் கடுமையான வெப்பத்தைக் கொண்டவைகள் ஆனாலும் காந்தி என்ற தன்மைக்கு ஒரே இருப்பிடமாகவும் இருக்கின்றன. அந்த கிரணங்களின் செம்மை வண்ணம் (உதய ஸூர்யனின் சிகப்பு வண்ணம்) உங்களுக்கு க்ஷேமத்தை அளிக்கட்டும்.

### 42. லக்ஷ்மீகரமான விடியற்காலைத் திருக்காட்சிகள்

अस्ताद्रीशोत्तमाङ्गे श्रितशशिनि तम:कालकूटे निपीते
यति व्यक्तिं पुरस्तादरुणकिसलये प्रत्युष:पारिजाते ।
उद्यत्यारक्त-पीताम्बरा-विशदतरोद्वीक्षिता तीक्ष्णभानो-
र्लक्ष्मीर्लक्ष्मीरिवास्तु स्फुटकमलपुटापाश्रया श्रेयसे व: ॥ ४२ ॥

அஸ்தாத்[3]ரீசோத்தமாங்கே[3] ஶ்ரித
ஶஶிநி தம: காலகூடேநிபீதே,
யாதி வ்யக்திம் புரஸ்தாத[3]ருண-
கிஸலயே ப்ரத்யுஷ: பாரிஜாதே।
உத்[3]யந்த்யாரக்த பீதாம்ப[3]ர
விஶத[3] தரோத்[3]வீக்ஷிதா தீக்ஷ்ண ப[4]ாநோ:,
லக்ஷ்மீ: லக்ஷ்மீரிவாஸ்து
ஸ்பு[2]டகமலபுடா பாஶ்ரயா ஶ்ரேயஸே வ: ॥ 42 ॥

உஷத்காலம் (விடியல்) என்ற பாரிஜாத வ்ருக்ஷம் கிழக்கே உதயமாகிறது. அதன் இலைத்தளிராக அருணதேவன் காணப்படுகிறான். கிழக்கு திசை தெள்ளத்தெளிவாக காட்சி தருகிறது. அதே சமயம் மேற்கு திக்கில் இருக்கும் அஸ்தமன கிரியின் சிகரத்தை சந்திரன் அடைந்திருக்கிறான். காலகூடம் விஷம் போன்ற இருள் (ஸூர்யனால்) குடிக்கப்பட்டுவிட்டது. (பரமசிவன் காலகூட விஷத்தைக் குடித்த நிகழ்ச்சியும், அவர் சிரஸில் சந்திரன் அமைந்திருப்பதுவும் இங்கு ஸூசகப்படுத்தப் படுகிறது.) ஸூர்யதேவன் உதயமாகும்போது மஞ்சள் கலந்த சிவப்பு வர்ணத்தைக் கொண்ட ஆகாயம் லக்ஷ்மீகரமாகவும், அவளை பீதாம்பரதாரியான மஹாவிஷ்ணு கண்டுகளிப்ப தாகவும் கற்பனை செய்யப்படுகிற திருக்காட்சி ஏற்படுகிறது. (இங்கே 'அம்பரம்' என்ற சொல் ஆகாயம், ஆடை என்ற இருபொருள் களிலும் சிலேடையாகப் பயன்படுத்தப் படுகிறது.) இவ்விதக் காட்சிகளினால் ஸூர்யனின் சோபை (லக்ஷ்மீ) பளிச்சிடுகிறது. அந்த சோபை (லக்ஷ்மீ) நன்கு அலர்ந்த தாமரையின் உட்புறத்தில் தங்கிவிடுகிறாள். இப்படிப்பட்ட லக்ஷ்மீகரமான திருக்காட்சி உங்களுடைய க்ஷேமத்திற்காக அமைந்திருக்கட்டும்!

**ப்ரத்யேக பலச்ருதி**

லக்ஷ்மீகடாக்ஷத்தினால் அனைத்து நலன்களும் ஏற்படும்.

**43. ஸூர்ய மண்டலத்திலிருந்து தோன்றும் வித்தியாச மான லக்ஷ்மீ!**

नोदन्वाञ्जन्मभूमिर्न तदुदरभुवो बान्धवा: कौस्तुभाद्या
यस्या: पद्मं न पाणौ न च नरक-रिपूर: स्थली वासवेश्म ।
तेजोरूपापरैव त्रिषु भुवनतलेष्वादधाना व्यवस्थां
सा श्री: श्रेयांसि दिश्याद-शिशिर-महसो मण्डलाग्रोद्गता व:
॥ ४३ ॥

நோத3ந்வான் ஜன்மபூ3மிர்ந தது3த3ர-
 பு4வோ பா3ந்த4வா: கௌஸ்து ப4த்3யா,
யஸ்யா: பத்3மம் ந பாணௌ
 ந ச நரகரிபூரஸ்த2லீ வாஸவேஶ்ம ।
தேஜோரூபாபரைவ த்ரிஷு
 பு4வனதலேஷ்வாத3த4ா நா வ்யவஸ்த2ாம்,
ஸா ஶ்ரீ: ஶ்ரேயாம்ஸி தி3ஶ்யாத3 ஶிஶிரமஹஸோ
 மண்டலா க்3ரோத்3க3தா வ: ॥ 43 ॥

பாற்கடலிலிருந்து பல வைபவங்களுடன் மஹாலக்ஷ்மீ தோன்றிய விருத்தாந்தம் ப்ரஸித்தமானது. இங்கே மயூரகவி ஸூர்யமண்டலத்தினின்றும், இன்னொரு லக்ஷ்மீ, வித்தியாச மான முறையில் தோன்றுகிறாள் என்று சமத்காரக்கவிதை கூறுகிறார்.

ஸூர்ய மண்டலத்திலிருந்து வேறொரு மஹாலக்ஷ்மீ தோன்றுகிறாள். இவள் பிறப்பிடம் ஸமுத்ரம் இல்லை. கடலில் தோன்றிய கௌஸ்துபம் மற்றும் (சந்திரன், காமதேனு போன்றவர்கள்) இவளுடன் கூடப்பிறந்த பந்துக்கள் இல்லை. இவள் கையில் தாமரை மலர் கிடையாது. இவள் மஹாவிஷ்ணு வின் திருமார்பை உறைவிடமாகக் கொள்ளவில்லை. இந்த லக்ஷணங்கள் இல்லாவிட்டாலும் இவள் தேஜோமயமானவள். மூன்று உலகங்களிலும் நிலைபெற்று உறைந்திருப்பவள். இவள்தான் ஸூர்யபிரபை, என்ற மற்றொரு ஸ்ரீதேவி. இவள் உங்களுக்கு எல்லா ஶ்ரேயஸ்ஸுகளையும் தந்தருளட்டும்!

**ப்ரத்யேக பலச்ருதி**

ஸ்ரீதேவியின் கடாக்ஷமும், அனைத்து ஶ்ரேயஸ்களும் கிடைக்கப்பெறும்.

## II. ஸூர்யரத குதிரைகளின் வர்ணனை (44-49)

### 44. ஸூர்ய ரதத்தின் குதிரைகளின் லாகவம்

रक्षन्त्वक्षुण्णहेमोपल-पटलमलं लाघवादुत्पतन्त:
पातङ्गा पङ्गवज्ञाजित-पवनजवा वाजिनस्ते जगन्ति ।
येषां वीतान्यचिह्नोन्नयमपि वहतां मार्गमाख्याति मेरा-
वुद्यन्नुद्दामदीप्तिर्द्युमणि-मणि-शिलावेदिका-जातवेदा: ॥ ४४ ॥

ரக்ஷந்த்வக்ஷுண்ண ஹேமோபல
படலமமலம் லாக[4] வாது[3]த்பதந்த:,
பாதங்கா[3]: பங்க்[3]வ வக்ஞா ஜிதபவந-
ஜவா வாஜிநஸ்தே ஜக[3]ந்தி ।
யேஷாம் வீதாந்ய சிஹ்நோந்நயமபி
வஹதாம் மார்க[3] மாக்[2]யாதி மேரௌ,
உத்[3]யந்நுத்[3]தா[3]ம தீப்திர் த்[3]யுமணி
மணிசிலா வேதி[3]கா ஜாதவேதா[3]: ॥ 44 ॥

இதுவரையிலான சுலோகங்களில் (ச்லோகங்கள் 1 முதல் 43 வரை) ஸூர்ய தேவனின் கிரணங்களைப் பற்றிய வர்ணனை களைப் பார்த்தோம். இனி இந்த ச்லோகம் தொடங்கி 49 வரை ஸூர்ய ரதத்தை இழுத்துச் செல்லும் குதிரைகளின் வர்ணனைகள் தொடக்கமாகிறது.

குதிரைகள் மேரு பர்வதத்தில் ஓடும்போது அந்த மலையில் இருக்கும் தங்கப் பாறைகள் நொறுங்கிவிடக்கூடாது என்று எண்ணி அவைகள் வெகு லாகவமாக (அதாவது ஜாக்கிரதையாக) மேலே எழும்பித் தாவிச் செல்கின்றன. அவைகள் வாயுதேவனைக்கூட மிஞ்சிய வேகத்தில் தாவிச் செல்கின்றன. அப்பொழுது அவைகள், கால்கள் இல்லாத வாயுதேவனையும்,

அதே சமயம் கால்கள் இல்லாத ஸாரதியான அருணதேவனையும் இளக்காரமாகக் கருதுகின்றன. ஆகாயவீதியில் அவைகள் ஓடிச்செல்ல வேண்டியிருக்கிறது. அங்கே, பாதைகளை வழிகாட்டும் சாதனங்கள் எவையும் இல்லை. ஆனால் ஸூர்ய காந்தக் கற்கள் சுடர்விட்டு, அவைகளின் மீது ஜ்வலிக்கும் அக்னிஜ்வாலைகள் (தீப்பந்தங்களைப் போன்று) அந்த குதிரைகளுக்கு வழிகாட்டிகளாக இருக்கின்றன. அப்படிப்பட்ட குதிரைகள் உலகங்களை ரக்ஷிக்கட்டும்.

**45. ''ஸப்தஸப்தி''என்ற ஸூர்யனின் ''ஸப்தி'' என்ற குதிரைகள்**

प्लुष्टा: पृष्ठेऽशुपातैरतिनिकटतया दत्तदाहातिरेकै-
रेकाहाक्रान्त-कृत्स्न-त्रिदिवपथ-पृथुश्वासशोषा: श्रमेण ।
तीव्रोदन्यास्त्वरन्तामहिताविहतये सप्तय: सप्तसप्ते-
रभ्याशाकाश-गङ्गाजल-सरल-गलावाङ्नताग्रानना व: ॥ ४५ ॥

ப்லுஷ்டா: ப்ருஷ்டே² (அ)ம்ஶு-
பாதை: அதிநிகடதயா த³த்ததா³ஹாதி-ரேகை:,
ஏகாஹாக்ராந்த க்ருத்ஸ்ந த்ரிதி³வ
பத² ப்ருது² ஶ்வாஸ ஶோஷா: ஶ்ரமேண।
தீவ்ரோ தன்யா ஸ்த்வரந்தா மஹித-
விஹதயே ஸப்தய: ஸப்தஸப்தே:,
அப்⁴யாஶாகாஶ க³ங்கா³ஜல ஸரல-
க³லாவாங்நதாக்³ரா நனா வ: ॥ 45 ॥

ஸூர்ய கிரணங்கள் வெகு அருகிலேயே இருப்பதால் குதிரைகளின் பின்பாகங்கள் மிகுதியான சூட்டினால் வெப்பம் தாங்க முடியாமல் வருந்துகின்றன. மேலும், ஒரே பகலில் வெகுதூரம் ஆகாயத்திலேயே பிரயாணம் செய்ய வேண்டி

யிருப்பதால், அந்த களைப்பு மேலிட்டு அவைகள் பெருமூச்சுகள் விட்டு வாடிவதங்குகின்றன. அப்பொழுது தாங்கமுடியாத தாகமும் ஏற்படுகிறது. ஆனால் பாதையின் அருகாமையில் ஆகாச கங்கை தென்படுகிறது. அதன் நீரைப்பருக மிகுந்த ஆவல்கொண்டு தங்கள் வாய்களை அகலத்திறந்துகொண்டு அங்கே விரைகின்றன. ''ஸப்தஸப்தி'' என்ற பெயருடைய ஸூர்யனின் குதிரைகள் ''ஸப்தி'' என்ற பெயர்கள் கொண்டவைகள், உங்களுக்கு ஏற்படும் தீமைகளைக் களைவதில் விரைந்து ஈடுபடட்டும்!

### 46. தேர்க்குதிரைகள் ஓடும் வேகத்தின் மாறுபாடுகள்

मत्वान्यान्पार्श्वतोऽश्वान्स्फटिक-तट-दृषद्दृष्टदेहा द्रवन्ती
व्यस्तेऽहन्यस्तसंध्येयमिति मृदुपदा पद्मरागोपलेषु ।
सादृश्यादृश्यमूर्तिर्मरकतकटके क्लिष्टसूता सुमेरो-
मूर्धन्यावृत्ति-लब्ध-ध्रुवगति-रवतु ब्रध्नवाहावलिर्वः ॥ ४६ ॥

மத்வான்யான் பார்ஶ்வதோ (அ)ஶ்வான்
ஸ்ப²டிகதடத்³ருஷ்த்³த்³ருஷ்டதே³-ஹாத்³ரவந்தீ,
வ்யஸ்தே (அ) ஹன்யஸ்த ஸந்த்⁴யே-யமிதி
ம்ருது³பதா³ பத்³ம ராகோ³பலேஷு ।
ஸாத்³ருஶ்யா த்³ருஶ்ய மூர்திः மரகத கடகே
க்லிஷ்ட்ஸூதா ஸுமேரோः,
மூர்த⁴ ன்யாவ்ருத்தி லப்³த⁴ த்⁴ருவ
க³தி: அவது ப்³ரத்⁴ந வாஹாவலிர் வ: ॥ 46 ॥

குதிரைகள் மேருமலைச் சிகரங்களின் மீது பிரயாணம் செய்கின்றன. அவைகள் செல்லும் பாதை ஸ்படிகமணி கற்களால் ஆன தளவரிசைகள். அப்பொழுது குதிரைகளின் ப்ரதிபிம்பம் காணப்படுகிறது. அதைக் கண்டு பக்கத்திலேயே வேறு சில குதிரைகள் போட்டிக்கு வந்துவிட்டன என்று மயங்கி, அவைகள்

இன்னும் வேகமாகப் பாய்ந்து செல்கின்றன. மலையில் பத்மராகப் படிமங்கள் இருக்கின்றன. அவற்றின் செந்நிறப் படலத்தைக் கண்டு சாயங்காலம் வந்துவிட்டது என்று எண்ணி, இனி மெதுவாகச் செல்லலாம் என்று எண்ணுகின்றன. அதனால் அவைகளின் வேகம் சற்று தளர்ந்து, நிதானமாக ஆகிவிடுகிறது. மரகதப் பச்சை வர்ணத்தில் இருக்கும் காடுகளின் ஊடே ஸஞ்சாரம் செய்யும்போது, பச்சை வர்ணத்தில் இருக்கும் அந்த குதிரைகள் அந்த வண்ணத்தில் மறைந்து புலப்படுவ தில்லை. இதனிடையில் ஸாரதி அருணனும் களைத்துப் போகிறான். மலையின் சிகரங்களைத் தாண்டும்போது அவைகள் வெகு வேகமாகப் பாய்ந்து செல்கின்றன. இத்தகைய வர்ணனைக்குரிய ''ப்ரத்னன்'' என்ற ஒரு பெயர் கொண்ட ஸூர்யதேவனின் தேர்க்குதிரைகளின் அணி உங்களை ரக்ஷிக்கட்டும்!

### 47. கங்கை, யமுனை நதிகளுடன் ஒரு வினோதமான ஒப்பீடு!

हेलालोलं वहन्ती विषधर-दमन-स्याग्रजे-नावकृष्टा
स्वर्वाहिन्या: सुदूरं जनितजवजया स्यन्दनस्य स्यदेन ।
निर्व्याजं तायमाने हरितिमनि निजे स्फीतफेनाहितश्री-
रश्रेयांस्यश्वपङ्क्ति: शमयतु यमुनेवापरा तापनी व: ॥ ४७ ॥

ஹேலா லோலம் வஹந்தீ விஷத⁴ர-
த³மனஸ்யாக்³ரஜேநாவக்ருஷ்டா,
ஸ்வர் வாஹின்யா: ஸுதூ³ரம்
ஜநிதஜவஜயா ஸ்யந்த³னஸ்ய ஸ்யதே³ன।
நிர்வ்யாஜம் தாயமானே ஹரிதிமநி
நிஜே ஸ்பீ²த பே²நாஹித ஸ்ரீ:,
அஶ்ரேயாம் ஸ்யஶ்வ பங்க்தி:
ஶமயது யமுனேவாபரா தாபநீ வ: ॥ 47 ॥

தேர்க்குதிரைகள், கருடனின் தமையனான அருண தேவனால் ஓட்டப்படுகின்றன. அப்பொழுது அந்தக் குதிரை களின் அணி விளையாட்டைப் போல (அனாயாசமாக) தாவிச் செல்கின்றன. தேவகங்கை வெகு தூரத்தில் வெகு வேகத்துடன் ப்ரவாஹமாக ஓடினாலும், அதன் வேகத்தையும் மிஞ்சிவிடுகிறது தேரின் வேகம். குதிரைகளின் வண்ணம் இயல்பான பச்சை நிறத்தில் இருக்கிறது. ஓடும்போது குதிரைகள் வாயிலிருந்து நீரை சுரந்து நுரைகளை கக்குகின்றன. அப்பொழுது இக்காட்சியை ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது, (பச்சை வண்ணம் கொண்ட) யமுனை நதிதான், நுரைகள் பொங்கப்பொங்க வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறதோ என்ற தோற்றம் ஏற்படுகிறது. இப்படிப்பட்ட வர்ணனைக்குரிய ஸூர்யதேவனின் தேர்க்கு திரைகளின் அணி உங்களுடைய நலமின்மையை அழிக்கட்டும்!

**48. ஸூர்யரதத்தின் தேர்க்குதிரைகளின் கனைப்புகளும் பாபங்களைப் போக்கிடட்டும்!**

मार्गोपान्ते सुमेरोर्नुवति कृतनतौ नाकधाम्नां निकाये
वीक्ष्य व्रीडानतानां प्रतिकुहरमुखं किंनरीणां मुखानि ।
सूतेऽसूयत्यपीषज्जडगति वहतां कंधरार्धैर्वलद्भि-
र्वाहानां व्यस्यताद्वः सममसमहरेर्हेषितं कल्मषाणि ॥ ४८ ॥

மார்கோ³பாந்தே ஸுமேரோர்
நுவதி க்ருதநதௌ நாகதா³ம்னாம் நிகாயே,
வீக்ஷ்ய வ்ரீடா³நதானாம்
ப்ரதிகுஹரமுக²ம் கிம்நரீணாம் முக²ாநி ।
ஸூதே (அ) ஸூயத்யபீ⁴ஷத்ஜட³ க³தி
வஹதாம் கந்த⁴ரார்தை⁴ர் வலத்³பி⁴:,
வாஹானாம் வ்யஸ்யதாத்³வ:
ஸமமஸம ஹரே: ஹேஷிதம் கல்மஷாணி ॥ 48 ॥

ஸூர்யனின் ரதம் ஸுமேரு பர்வதத்தின் வழியே செல்லும் போது, தேவர்களின் குழாம் (ஸூர்யதேவனுக்கு) வணங்கி நிற்கிறார்கள். பர்வதத்தின் குகைகளில் கின்னரர்கள் வாசம் செய்கிறார்கள். அழகான கின்னர ஸ்த்ரீகள் நாணத்துடன் தலை குனிந்து குகைகளின் வாயில்களில் தென்படுகிறார்கள். அவர்களைக் கண்டு களிக்கும் ஆவலில் தேர்க் குதிரைகள் சற்று கழுத்தைத் திருப்பித் தயங்கிச் செல்கின்றன. வேகம் குறைந்து போனதால், சாரதி அருணனுக்குக் கோபம் ஏற்படுகிறது. அப்பொழுது அந்த குதிரைகள் கனைக்கின்றன. இப்படிப்பட்ட, குதிரைகளின் கனைப்புகள் உங்கள் பாபங்களைப் போக்கிடட்டும்!

**விசேஷக் குறிப்பு**

கின்னரர்கள் குதிரைகளின் சிற்சில அவயவங்களைக் (முகம், கால், இடுப்பு) கொண்டிருப்பார்கள் என்று கவி கூறியுள்ளார். ஆகையால் இந்த குதிரைகள் தங்கள் இனத்தைச் சேர்ந்த பெண்டிர்களிடம் ஒரு ஈர்ப்புத் தன்மை கொண்டிருக் கின்றன என்பது தொனி.

## 49. பச்சைக் குதிரைகளோ, பச்சைக் கிளிகளோ!

धुन्वन्तो नीरदालीर्निजरुचिहरिताः पार्श्वयोः पक्षतुल्या-
स्तालूत्तानैः खलीनैः खचितमुखरुचश्च्योतता लोहितेन ।
उड्डीयेव व्रजन्तो वियति गतिवशादर्कवाहाः क्रियासुः
क्षेमं हेमाद्रिहृद्यद्रुमशिखरशिरः श्रेणिशाखाशुका वः ॥ ४९ ॥

து[4]ந்வந்தோ நீரத[4]ாலீர் நிஜருசிஹரி தா:
பார்ச்வயோ: பக்ஷதுல்யா:,
தாலூத்தானை: க[2]லீனை:
க[2]சிதமுக[2]ருசச் ச்யோததா லோஹிதேன ।

உட்$^{3}$டீ$^{3}$யேவ வ்ரஜந்தோ வியதி க$^{3}$திவ-
சாத$^{3}$ர்க வாஹா: க்ரியாஸு:,
க்ஷேமம் க்ஷேமாத்$^{3}$ரி ஹ்ருத்$^{3}$ய த்$^{3}$ரும
சிக$^{2}$ர சிர: ச்ரேணி சாக$^{2}$ா ஶுகா வ: ॥ 49 ॥

தேரை இழுத்துச் செல்லும் குதிரைகளை ஒரு வித கோணத்தில் பார்க்கும்போது பச்சைக்கிளிகளைப் போன்று பல ஒற்றுமைகளைக் கொண்டிருக்கின்றன. பச்சைக் கிளிகள் மரங்களின் கிளைகளில் வரிசையாக உட்கார்ந்து ஒரு அழகிய காட்சியை அளிக்கும். கிளிகளைப் போன்ற பச்சை நிறம் கொண்ட குதிரைகள் மேருபர்வதங்களின் சிகரங்கள் என்ற மரக்கிளைகள் மீதே வரிசையாகக் காட்சியளிக்கின்றன. கிளிகள் தங்கள் இறகுகளைப் படபடத்துப் பறக்கின்றன. குதிரைகள் ஆகாய வெளியில் ஓடும்போது மேகங்களைக் கிழித்துக் கொண்டு செல்வதால் அந்த மேகங்களே குதிரைகளின் இரண்டு பக்கச் சிறகுகளாக இருக்கின்றன. கிளிகளின் மூக்கு (வாய்) சிவந்திருக்கும். சாரதி அருணதேவன் குதிரைகளின் வாய்களில் கட்டியிருக்கும் கடிவாளங்களை அடிக்கடி பற்றி இழுப்பதால், அவைகளின் வாய்கள் புண்பட்டு, ரத்தம் கசிந்து சிவப்பாகி விட்டன. கிளிகள் ஆகாயத்தில் பறக்கின்றன. இந்த குதிரைகளும் ஆகாயவெளியில் பறக்கின்றன. (பறக்கும் வேகத்தில் ஓடுகின்றன). இத்தகைய வர்ணனைக்குரித்தான தேர்க்குதிரைகள் உங்களுக்கு க்ஷேமத்தை அளிக்கட்டும்!

## III. அருணதேவனின் வர்ணனை (50-61)

**50. ஒரு நாடகத்தின் ஸூத்ரதாரியாக அருணதேவன்!**

प्रात: शैलाग्ररङ्गे रजनिजवनिकापायसंलक्ष्यलक्ष्मी-
विंक्षिप्यापूर्वपुष्पाञ्जलिमुडुनिकरं सूत्रधारायमाण: ।
यामेष्वङ्केष्विवाह्न: कृतरुचिषु चतुर्ष्वेव जातप्रतिष्ठा-
मव्यात्प्रस्तावयन्वो जगदटनमहानाटिकां सूर्यसूत: ॥ ५० ॥

ப்ராத: ஶைலாக்[3]ர ரங்கே[3] ரஜநி-

ஜவநிகாபாய ஸம்லக்ஷ்ய லக்ஷ்மீ:,

விக்ஷிப்யா பூர்வ புஷ்பாஞ்ஜலி முடு[3]-

நிகரம் ஸூத்ர த[4]ாராயமாண:।

யாமேஷ்வங்கேஷ் விவாஹ்ந:

க்ருதருசிஷு சதுர்ஷ்வேவ ஜாதப்ரதிஷ்ட[2]ாம்,

அவ்யாத் ப்ரஸ்தாவயன் வோ ஜக[2]த[3]டநமஹா

நாடிகாம் ஸூர்ய ஸூத: ॥ 50 ॥

இந்த சுலோகம் முதல் (50) சுலோகம் (61) வரை அருணதேவனின் வர்ணனை.

வானவெளியில் ஒரு நாடகம் அரங்கேறுகிறது! "அகிலங் களை சுற்றிவருதல்" என்பது அந்த நாடகத்தின் கருப் பொருள். அந்த நாடகத்தை ஆரம்பித்து வைக்கும் ஸூத்ரதாரி அருணதேவன். உதயகிரியின் சிகர பாகங்கள் தான் நாடகத்தின் அரங்கம். இரவு என்ற திரைச்சீலை விலகுகிறது. அரங்கம் லக்ஷ்மீகரமாக காட்சி அளிக்கிறது. அருணன் என்ற ஸூத்ரதாரி நக்ஷத்திரக் கூட்டங்களையே ஒரு வித்தியாசமான புஷ்பாஞ்ஜலி யாக ஆக்கி, அவைகளை அரங்கம் முழுவதும் தூவுகிறான். பகலின் நான்கு யாமங்களே அந்த நாடகத்தின் நான்கு அங்கங்கள். இப்படிப்பட்ட வர்ணனைக்குரிய ஸூர்ய தேவனின் சாரதியான அருணதேவன் உங்களைக் காப்பாற்றட்டும்.

**51. கருடனையும் மிஞ்சியவன் அருணன்!**

आक्रान्त्या वाह्यमानं पशुमिव हरिणा वाहकोऽग्र्यो हरीणां

भ्राम्यन्तं पक्षपाताज्जगति समरुचि: सर्वकर्मैकसाक्षी ।

शुत्रं नेत्रश्रुतीनामवजयति वयोज्येष्ठभावे समेऽपि

स्थाम्नां धाम्नां निधिर्य: स भवदघनुदे नूतन: स्तादनूरु: ॥ ५१ ॥

ஆக்ராந்த்யா வாஹ்யமானம் பஶுமிவ

ஹரிணா வாஹகோ (அ)க்$^{3}$ர்யோ ஹரீணாம்,

ப்$^{4}$ராம்யந்தம் பக்ஷபாதாத் ஜக$^{4}$தி

ஸமருசி: ஸர்வகர்மைக ஸாக்ஷீ ।

ஶ த்ரும் நேத்ரஶ்ருதீனாம் அவஜயதி

வயோஜ்யேஷ்ட$^{2}$பாவே ஸமே(அ)பி,

ஸ்த$^{2}$ாம்னாம் த$^{4}$ாம்னாம் நிதி$^{4}$ர்ய:

ஸ ப$^{4}$வத$^{3}$க$^{4}$நுதே$^{3}$ நூதன: ஸ்தாத$^{3}$நூரு: ॥ 51 ॥

கருடனும், அருணனும் கூடப்பிறந்த சகோதரர்கள். பறவை இனத்தைச் சேர்ந்தவர்கள். மஹாவிஷ்ணு (ஹரி) கருடனை தனது வாஹனமாக (குதிரை போன்று) ஆக்கிக் கொண்டார். அதே விதம் அவர் ஸூர்ய பகவானுக்கு அருணனை ஒரு குதிரை போன்ற வாஹனமாக (தேர் சாரதியாக) நிர்ப்பந்தமாக நியமித்தார். கருடன் ஒரு ஹரியைத் தான் தாங்குகிறான் (வாஹக:). ஆனால் அருணன் பல ஹரிகளுக்கு (குதிரைகளுக்கு) வாஹகன் (ஓட்டிச் செல்பவன்). இதில் இன்னொரு கருத்தும் உள்ளடங்கி யிருக்கிறது. கருடன் ஒரு ஹரியின் சேவகன். ஆனால் அருணனோ பல ஹரிகளுக்கு (குதிரைகளுக்கு) எஜமானன். அவன்தான் (உலகில்) முதல்முதலான தேர் சாரதி. கருடன் பக்ஷபாதம் கொண்டவன் (இறகுகளை வீழ்த்தி வீழ்த்தி பறப்பவன் என்று சிலேடைப் பொருள்). ஆனால் அருணன் எல்லோரிடமும் சமமான பரிவு கொண்டவன் (அதாவது, கருடனைப் போல ''பக்ஷபாதம்'' இல்லாதவன்). எல்லா உயிரினங்களின் செயல்பாடுகளுக்கும் சாக்ஷியாக இருப்பவன். இருவரும் உலகத்தைச் சுற்றுபவர்கள். இப்படி கருடனுக்கும் அருணனுக்கும் சில ஒற்றுமை - வேற்றுமைகள் இருந்தாலும், கருடனையும் (பல அம்சங்களில்) வென்றவன் அருணன்தான். மேலும் அவன் வயதிலும் மூத்தவன். ஸ்திரமாக இருக்கும் சோதிகளுக்கு அவனே இருப்பிடம். (தினமும்) புத்தம்புதிய

(பொலிவுடன்) இருக்கும் அருண தேவன், கால்கள் (தொடைகள்) இல்லாதவனாயினும், உங்கள் பாபங்களைக் களைபவனாக இருக்கட்டும்!

**52. குளிர்காயும் அருணன்!**

दत्तार्घैर्दूरनम्रैर्वियति विनयतो वीक्षितः सिद्धसार्थैः
सानाथ्यं सारथिर्वः स दशशतरुचेः सातिरेकं करोतु ।
आपीय प्रातरेव प्रततहिमपयःस्यन्दिनीरिन्दुभासो
यः काष्ठादीपनोऽग्रे जडित इव भृशं सेवते पृष्ठतोऽर्कम् ॥ ५२ ॥

த[3]த்தார்கை[4]: தூ[3]ரநம்ரை: வியதி
விநயதோ வீக்ஷித: ஸித்[3]த[4] ஸார்தை[2]:,
ஸாநா த்[2]யம் ஸாரதி[2]ர் வ:
த[3]ஶ ஶதருசே: ஸா திரேகம் கரோது ।
ஆபீய ப்ராதரேவ ப்ரதத ஹிமபய:-
ஸ்யந்தி[3]நீரிந்து[3] ப[4]ா ஸ:,
ய: காஷ்ட[2]ா தீ[3]பனோக்[3]ரே ஜடி[3]த
இவ ப்ருஶம் ஸேவதே ப்ருஷ்ட[3]தோ (அ)ர்கம் ॥ 52 ॥

விண்ணில் இருக்கும் சித்த புருஷர்கள், வெகுதூரத்தில் இருக்கும் ஸூர்ய பகவானை வணங்கி அர்க்யம் அளிக்கிறார்கள். அதே சமயம் அருணதேவனையும் வினயபூர்வமாக தரிசித்துக் கொள்கிறார்கள். (இரவில்) சந்திரன் தனது சீத கிரணங்களால் பனித்துளிகளின் பொழிவை ஏற்படுத்துகிறான். விடிவதற்கு முன் அருணதேவன் அந்த பனிப்பொழிவை (முழுமையாக) அருந்தவேண்டியிருக்கிறது. அதனால் அவனுக்கு சீதளம் ஏற்பட்டு, குளிரினால் உடம்பு வெடவெடத்துப் போகிறது. அதைப் போக்கிக் கொள்ள நெருப்பு மூட்டி குளிர் காய வேண்டியிருக்கிறது. அதற்கு பின்புறம் இருக்கும் ஸூர்யதேவனின் வெப்பக்கதிர்கள் ஒரு பக்கம் உதவுகின்றன. அவன் முன்

புறத்தைச் சூடுபடுத்திக் கொள்ள சுள்ளிக்கட்டைகள் (''காஷ்டா'') தேவைப்படுகிறது. அவன் திக்குக்களை (''காஷ்டா'') ஜ்வலிக்கச் செய்யும் தொழிலில் ஈடுபட்டிருப்பதால், அதற்கு (''காஷ்டா'' - சுள்ளிக்கட்டைகள்) சிறிதும் பஞ்சமில்லை. இத்தகைய வர்ணனைக்குரிய அருணதேவன், ஆயிரக்கணக்கான கிரணங்களைக் கொண்ட ஸூர்யதேவனின் சாரதி, உங்களுடைய காப்பாளனாக (நாதன்) இருக்கட்டும்!

குறிப்பு : ''காஷ்டா'' என்ற பதத்தில் கவியின் சிலேடை விளையாட்டைக் கவனிக்க.

## 53. ஸூர்யதேவன் அருணதேவனை தனக்குச் சமமாக பாவிக்கிறார்!

मुञ्चन्रश्मीन्दिनादौ दिनगमसमये संहरंश्च स्वतन्त्र-
स्तोत्रप्रख्यातवीर्योऽविरत-हरिपदाक्रान्ति-बद्धाभियोगः ।
कालोत्कर्षाल्लघुत्वं प्रसभमधिपतौ योजयन्यो द्विजानां
सेवाप्रीतेन पूष्णात्मसम इव कृतस्त्रायतां सोऽरुणो वः ॥ ५३ ॥

முஞ்சன் ரஶ்மீன் தி³னாதௌ³
தி³னக³மஸமயே ஸம்ஹரம்ஶ்ச ஸ்வதந்த்ர:,
ஸ்தோத்ர ப்ரக்²யாத வீர்யோ (அ) விரத-
ஹரி பதா³க்ராந்தி ப³த்³த⁴ா பி⁴ யோக³: ।
காலோத்கர் ஷால்லகு⁴த்வம் ப்ரஸப⁴மதி⁴பதௌ
யோஜயன்யோ த்³விஜானாம்,
ஸேவாப்ரீதேன பூஷ்ணாத்மஸம இவ
க்ருதஸ்த்ராயதாம் ஸோ (அ)ருணோவ: ॥ 53 ॥

ஸூர்யதேவன், அருணதேவனின் தொண்டில் சந்தோஷமடைந்து, அவனைத் தனக்கு சரிநிகராக நடத்துகிறார். இந்தக் கருத்தை மயூரகவி, சிலேடையலங்காரம் கொண்ட வார்த்தை

களால் (அதாவது, வார்த்தைகள் ஒன்றுதான், பொருள்தான் மாறுபடுகிறது. அதனால் இருவருக்கும் அதே சொல் ப்ரயோகம் சமமாகப் பொருந்துகிறது) நிரூபணம் செய்கிறார்.

**அருணதேவன் பக்ஷமாக**

அருணன் பகலின் ஆரம்பத்தில் குதிரைகளின் கடிவாளங்களைத் தளர்த்துகிறான். சாயங்காலம் வரும்போது அந்த கடிவாளங்களை இழுத்துப் பிடிக்கிறான். இப்படி அவன் ஸாரத்தியத்தில் ஸ்வதந்ரமாக செயல்படுகிறான். சாட்டைகளைக் கொண்டு (தோத்ரம்) தனது ஸாரத்திய சாமர்த்தியத்தை வெளிப்படுத்துகிறான். குதிரைகள் ஓடும்போது அவைகளின் காலடி வைப்புகளை எப்பொழுதுமே கவனித்துவருகிறான். (அதாவது, அவைகள் சரியான பாதையில் செல்கின்றனவா என்று கவனிப்பதற்காக). பறவைகளுக்கு அரசனான கருடனை ஜனனகாலத்தின் முன்னீட்டினால் நிர்ப்பந்தமாக அவனை சிறுவனாகச் செய்தான். (அதாவது அவனுக்கு தம்பியின் ஸ்தானத்தை அளித்தான்).

**ஸூர்யதேவன் பக்ஷமாக**

பகலின் ஆரம்பத்தில் கிரணங்களை வெளிவிடுகிறார். பகலின் முடிவில் (சாயங்காலத்தில்) அந்த கிரணங்களை சுருக்கிக் கொள்கிறார். இப்படி அவர் ஸ்வதந்த்ரமாக (பகலின் பொழுதை நிர்ணயிப்பதில்) செயல்படுகிறார். வேதோக்த ஸ்தோத்ர மந்த்ரங்களினால் அவருடைய பெருமை கியாதி பெற்றுள்ளது. "ஹரிபதம்" என்று கூறப்பட்ட ஆகாயவெளியை ஆக்ரமித்திருப்பதில் எப்பொழுதும் ஈடுபாடு கொண்டவர். சந்திரனை காலபலத்தின் நிமித்தமாக அவனை சிறுமை ஸ்தானத்தில் இருக்கும்படி செய்கிறார். (அதாவது பகலில் சந்திரனின் ஒளி பிரகாசிக்காமல் இருக்கும்படி செய்து விடுகிறார். அல்லது சந்திரனுக்கு தேய்பிறைகளை ஏற்படுத்துகிறார்.

அதனால் தன்னைப்போல் முழு உருவம் சந்திரனுக்கு இல்லாதபடி செய்து விடுகிறார்).

இவ்வாறு ஸூர்யதேவனுடன் சமமான ஸ்தானம் கொண்ட அருணதேவன் உங்களை ரக்ஷிக்கட்டும்!

**54. அருணதேவன் "ஆபத்து" என்ற பேச்சுக்கே இடமளிக்காது அருள் புரியட்டும்!**

शातः श्यामालतायाः परशुरिव तमोऽरण्यवह्नेरिवार्चिः
प्राच्येवाग्रे ग्रहीतुं ग्रहकुमुदवनं प्रागुदस्तोऽग्रहस्तः ।
ऐक्यं भिन्दन्द्युभूम्योरवधिरिव विधातेव विश्वप्रबोधं
वाहानां वो विनेता व्यपनयतु विपन्नाम धामाधिपस्य ॥ ५४ ॥

ஶாத: ஶ்யாமா வதாயா: பரஶுரிவ
தமோ(அ)ரண்ய வ்நே ரிவார்சி:,
ப்ராச்யேவாக்³ரே க்³ரஹீதும் க்³ரஹ
குமுத³வனம் ப்ராகு³த³ஸ்தோக்³ரஹஸ்த: ।
ஐக்யம் பி⁴ந்த³ந்த்³யு பூம்யோரவதி⁴ரிவ
வித⁴ாதேவ விஶ்வப்ரபோத³ம்,
வாஹானாம் வோ விநேதா வ்யபநயது
விபந்நாம த⁴ாமாதி⁴பஸ்ய ॥ 54 ॥

அருணதேவனின் பெருமைகள் தொடர்கின்றன. இரவு என்பது ஒரு கருமையான காட்டுக் கொடியானால், அதனை கூரிய கோடரி போன்று வெட்டிககளைபவன் அருணன். இருட்டு என்பது ஒரு காட்டுத் தீயானால், கொழுந்துவிட்டு எரியும், அதன் தீநாக்குகள் (ஜ்வாலை) அவனேதான். கிரஹங்கள் (நக்ஷத்திரங்கள்) என்ற குமுதமலர்கள் (ஆம்பல் பூக்கள்) இரவில் மலர்ந்து ஒரே காடாகிவிட்ட படியால், கீழ்திசையில்

(ஸூர்யனுக்கு) முன்பாகவே உதயமாகும் அருணன் அவற்றை பிடுங்கிக் களைவதற்கு தன் கைகளை நீட்டுகிறான். (அருணோதயத்தின் போதே, பல க்ரஹங்களும், நக்ஷத்திரங்களும் மறைந்து போய்விடுகின்றன என்பது திரண்ட கருத்து). இரவில் ஆகாயமும் பூமண்டல பரப்பும் ஒன்றாக ஆகிவிடுவதால் (வித்தியாசம் தெரியாமல் போவதால்) அவ்விரண்டிற்கும் எல்லையே வகுப்பவன்போல் அருணன் இருக்கிறான். (அதாவது அந்த இரண்டையும் தனித்தனியாகித் தெரியும்படி செய்கிறான்). கல்பத்தின் ஆரம்பத்தில் ப்ரஹ்மதேவன் ஸ்ருஷ்டியைத் தொடங்கி ஜீவராசிகளை உயிர்ப்பித்து எழச்செய்கிறார். அதே போன்று, அருணதேவன் உலகமனைத்தையும் துயிலிலிருந்து எழச்செய்கிறான். ஜ்யோதிர்மண்டலத்தின் அதிபதியான ஸூர்ய பகவானின் தேர்க்குதிரைகளின் சாரதி அவன். அப்படிப்பட்ட அருணதேவன் உங்களுக்கு ''ஆபத்து'' என்ற பேச்சுக்கே இடமளிக்காத நிலையை அருளட்டும்!

**விசேஷமான பலச்ருதி**

''ஆபத்துக்கள்'' என்ற பேச்சுக்கே இடமில்லாத சுகபோக வாழ்க்கை அமையும்.

**55. ஸூர்யோதயத்திற்கு முன்னறிவிப்பாளன் அருணன்!**

पौरस्त्यस्तोदयर्तो: पवन इव पतत्पावकस्येव धूमो
विश्वस्येवादिसर्ग: प्रणव इव परं पावनो वेदराशे: ।
संध्यानृत्योत्सवेच्छोरिव मदनरिपोर्नन्दि-नान्दीनिनाद:
सौरस्याग्रे सुखं वो वितरतु विनतानन्दन: स्यन्दनस्य ॥ ५५ ॥

பௌரஸ்த்யஸ் தோயத[3]யர்தோ:
பவந இவ பதத்பாவகஸ்யேவ தூ[4]மோ,
விச்வஸ்யே வாதி[3]ஸர்க[3]:
ப்ரணவ இவ பரம் பாவநோ வேத[3]ராஶே:।

ஸந்த்[4]யா ந்ருத்யோத்ஸவே ச்சே[2]ாரிவ

மத[3]னரிபோ: நந்தி[3]நாந்தீ[3]நிநாத[3]:,

ஸௌரஸ்யாக்[3]ரே ஸுக[2]ம் வோ

விதரது விநதா நந்த[3]ந: ஸ்யந்த[3] நஸ்ய ॥ 55 ॥

''அருணோதயம்'' என்பது ஸூர்யன் உதயமாகப் போகிறார் என்பதற்கு ஒரு முன்னறிவிப்பு. இதனை விளக்க சில உதாரணங்கள் : மாரிகாலம் சீக்கிரம் வரப்போகிறது என்பதற்கு கீழ் திசையிலிருந்து வீசும் வாடைக்காற்று ஒரு அறிகுறி. அரணிக்கட்டைகளை உரசும் போது, முதலில் புகை தோன்றும். நெருப்பு அடுத்தபடியாகத் தோன்றும் என்பதற்கு அது முன் அறிவிப்பு. உலக ஸ்ருஷ்டியின் போது, முதலில் தோன்றுவது ஆகாசம் என்ற பூதம் (பஞ்ச மஹாபூதங்களான, ப்ருத்வீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம் என்றவற்றில் முதலில் தோன்றுவது). அதாவது ஆகாசத்தின் தோற்றம் உலகஸ்ருஷ்டிக்கு முன் அறிவிப்பு. வேதங்கள் மொத்தத்திற்கும் தோற்றத்தின் முதல் அறிகுறி பரம பவித்ரமான ப்ரணவம் என்ற ஓங்காரம். ஸந்த்யா காலத்தில் பரமசிவன் தாண்டவம் தொடங்கும் முன் நந்திதேவர் மங்கள வாத்யத்தை (மிருதங்கத்தை) முழக்கி முன்னறிவிப்பு செய்வது வழக்கம். இப்படி, மேலே கூறிய வாடைக்காற்று, புகை, ஆகாயம், ஓம்காரம், நந்தியின் மங்களவாத்யம் போன்று அருண தேவன் முன்னே தோன்றி ஸூர்யனின் உதயத்தை முன் பிரகடனம் செய்கிறான். அவன் விநதாதேவியின் அரும்புதல்வன். ஸூர்யனின் ரதத்திற்கு தேரோட்டி.

இத்தகைய வர்ணனைக்குரிய அருணதேவன் உங்களுக்கு சௌக்யத்தை அருளட்டும்!

## 56. மேருமலையின் மீது ஒரு வினோதமான ரத்னாபரணம்!

पर्याप्तं तप्त-चामीकर-कटकतटे श्लिष्टशीतेतरांशा-
वासीदत्स्यन्दनाश्वानुकृतिमरकते पद्मरागायमाणः ।
यः सोत्कर्षां विभूषां कुरुत इव कुलक्ष्माभृदीशस्य मेरो-
रेनांस्यह्नाय दूरं गमयतु स गुरुः काद्रवेयद्विषो वः ॥ ५६ ॥

பர்யாப்தம் தப்தசாமீகர கடகதடே
ஶ்லிஷ்ட ஶீதேதராம் ஶௌ,
ஆஸீ த³த் ஸ்யந்த³ நாஶ்வாநுக்ருதி
மரகதே பத்³மராகா³ய மாண: ।
ய:ஸோத்கர்ஷாம் விபூஷாம் குருத
இவ குலக்ஷ்மாப்⁴ருதீ³ஶஸ்ய மேரோ:,
ஏநாம்ஸ்யஹ்நாய தூ³ரம் க⁴மயது ஸ கு³ரு:
காத்³ரவேய த்³விஷோ வ: ॥ 56 ॥

குலபர்வதங்களுக்குத் தலைவனாக இருப்பது மேருபர்வதம் என்ற தங்கமலை. உருக்கிவிட்ட தங்கம் போல் ஜொலிக்கின்ற அதன் தாழ்வரைத் தடங்கள் மீது ஸூர்யனின் கிரணங்கள் மிகுதியாகவே படிந்திருக்கின்றன. அதனால் அந்த தடங்கள் தகதக என்று தங்கத்தின் பிரகாசத்துடன் ஒளிர்கின்றன. அந்தத் தடங்களின் மீது ஸூர்ய ரதத்தின் குதிரைகளின் பச்சை வண்ணம் பிரதிபலித்து இருக்கின்றன. இந்தப் பின்னணியில் அருண தேவனின் செம்மை நிறம் பத்மராக ரத்னம் போன்று ஒளியை ஏற்படுத்துகிறது. இந்தக் காட்சிகளை ஒட்டு மொத்த மாகப் பார்க்கையில், ஒரு தங்கத்தால் ஆன ஆபரணத்தில் பச்சைக் கற்கள் பதித்து, அதன் நடுவில் பத்மராகக்கல்லை நடுநாயகமாக பதித்தது போல் இருக்கிறது. இவைகள் அனைத்தும் சேர்ந்து மேரு பர்வதத்திற்கு ஒரு வினோதமான ஆபரணம் அணிவித்தது போல ஒரு தோற்றம் ஏற்படுகிறது. இப்படிப்பட்ட தோற்றத்திற்கு

நடுநாயக ஸ்தானத்தில் அருணதேவன் இருக்கிறான். பாம்பு களுக்கு சத்ருவான கருடனுக்கு அவன் அண்ணன். இப்படிப்பட்ட பெருமைகளைக் கொண்ட அருணதேவன் வெகு சீக்கிரமாகவே உங்களுடைய பாபங்களை விரட்டியடிக்கட்டும்.

**57. ஸூர்யதேவனின் ஆஸ்தான மண்டபத்தின் காவலாளி!**

नीत्वाश्वान्सप्त कक्षा इव नियमवशं वेत्रकल्प-प्रतोद-
स्तूर्णं ध्वान्तस्य राशावितरजन इवोत्सारिते दूरभाजि ।
पूर्वं प्रष्ठो रथस्य क्षितिभृदधिपतीन्दर्शयंस्त्रायतां व-
स्त्रैलोक्यास्थानदानोद्यत-दिवसपतेः प्राक्प्रतीहारपालः ॥ ५७ ॥

நீத்வாஶ்வான் ஸப்தகக்ஷா இவ நியம
வஶம் வேத்ரகல்ப ப்ரதோத3:,
தூர்ணம் த்4வாந்தஸ்ய ராஶாவிதரஜன
இவோ த்ஸாரிதே தூ3ரப4ாஜி ।
பூர்வம் ப்ரஷ்டே2ா ரத2ஸ்ய க்ஷிதிப்4ருத3தி4
பதீன் த3ர்ஶயன் ஸ்த்ராயதாம் வ:,
த்ரைலோக்யாஸ்த2ான தா3னோத்3யத
தி3வஸபதே: ப்ராக் ப்ரதீஹாரபால: ॥ 57 ॥

மூன்று புவனங்கள் என்ற ஆஸ்தான மண்டபத்திற்கு த்ரிலோகாதிபதியான ஸூர்யராஜன் எழுந்தருள விழைகிறார். அதற்குக் காரணம் தன்னுடைய ப்ரதாபம், தேஜஸ், உஷ்ணம், ஒளி ஆகியவற்றை உலகத்தாருக்கு தானம் வழங்கத்தான். அவருடைய ராஜதர்பாருக்குச் செல்ல ஏழு கட்டு, வாயில்களைத் தாண்ட வேண்டும். ரதத்தின் ஏழு குதிரைகளே அந்த ஏழு கட்டு, பிராகாரங்கள். அருணனின் வசத்தில் அந்த ஏழு குதிரைகள் இருப்பதால், ராஜ சபை செல்வதற்கான ஏழு தோரண வாயில்களுக்கும் அருணனே வாயிற் காப்பாளன். குதிரைகளை

அடக்கி ஆள்வதற்காக அவன் கையில் இருக்கும் சாட்டையே, அவன் வாயிற்காப்பாளன் பதவிக்கான பிரம்பு தண்டம். ராஜ சபைக்கு அன்னியர்களை அனுமதிக்கமாட்டார்கள். அதைப் போல இந்த வாயிற்காப்பாளன் இருட்டு, (இரவு, நக்ஷத்திரங்கள்) போன்ற அனுமதிக்க முடியாத அன்னியர்களை வெகுதூரம் விரட்டிவிடுகிறான். ராஜ சபைக்கு ஸூர்யன் எழுந்தருளுவதற்கு முன்பாகவே, (அரசனின் வருகையை முன்னறிவிப்பதற்காக) முன்னால் செல்கிறான். அப்பொழுது வழியில் அவன் மேருமலை போன்ற பர்வதச்ரேஷ்டர்களை ஸூர்யதேவனுக்கு அறிமுகம் செய்து செல்கிறான். ஸூர்ய ராஜன் ராஜ சபைக்கு புறப்படுவதற்கு ஆயத்தமாக அவன் ரதத்தில் முன்பாகவே ஸாரதி ஸ்தானத்தில் அமர்கிறான். இவ்விதம் பல விஷயத்திலும் ஸூர்யதேவனுக்குப் பணிவிடைகள் புரிந்து, உலகில் முதல்முதலான அரண்மனைப் பாதுகாவலனாகத் திகழ்கிறான். இத்துணை சிறப்புகளைக் கொண்ட அருணதேவன் உங்களை ரக்ஷிக்கட்டும்.

**58. அருணதேவன் அஷ்டதிக்பாலகர்களிடம் குசலப்ரச்னம் விசாரிக்கிறான்!**

वज्रिञ्जातं विकासीक्षणकमलवनं भासि नाभासि वह्ने !
तातं नत्वाश्वपार्श्वान्नय यम ! महिषं राक्षसा वीक्षिता:स्थ ।
सप्तीन्सिञ्च प्रचेत: ! पवन ! भज जवं वित्तपा-वेदितस्त्वं
वन्दे शर्वेति जल्पन्प्रतिदिशमधिपान्पातु पूष्णोऽग्रणीर्व: ॥ ५८ ॥

வஜ்ரிஞ்ஜாதம் விகாஸீக்ஷணகமலவனம்
பா[4]ஸி நாபா[4]ஸி வஹ்நே,
தாதம் நத்வாஶ்வ பார்ஶ்வாந்நய யம
மஹிஷம் ராக்ஷஸா வீக்ஷிதாஸ் த[2]।

ஸப்தீன் ஸிஞ்ச ப்ரசேத: பவந ப[4]ஜ ஜவம்
வித்தபாவேதி[3] தஸ்த்வம்,
வந்தே ஶர்வேதி ஜல்பன் ப்ரதி
தி[3]ஶமதி[4] பான் பாது பூஷ்ணோக்[2]ரணீர் வ: ॥ 58 ॥

ஸூர்ய ரதம் ஆகாயத்தில் ஸஞ்சாரம் செல்கையில், அஷ்ட திக்பாலகர்களையும் அருணன் வரிசைக்ரமமாக சந்திக்க நேர்கிறது. அப்பொழுது அவன் ஒவ்வொருவரிடமும் தகுந்த விதத்தில் குசலப்ரச்னம் விசாரிக்கிறான். கிழக்கு திக்கிற்கு அதிபதி தேவேந்திரன். அவனுக்கு ஆயிரம் கண்கள். அவனை அருண தேவன் விசாரிக்கும் விதம் - ''இந்திரனே! (ஸூர்யகிரணங்களி னால்) உன்னுடைய கண் தாமரைகளின் அணி நன்றாக மலர்ந்து விட்டனவா?'' அடுத்து தென்கிழக்கு திக்குக்கு அதிபதியான அக்னிதேவனை சந்திக்கிறான். அவனை இப்படி விசாரிக்கிறான் - ''ஹே! அக்னிதேவனே! நீ ஏன் பிரகாசம் குன்றியிருக்கிறாய்?'' (ஸூர்ய ஒளியினால் அக்னியின் ஒளி மங்கிவிட்டது என்று ஒரு ஏளனக் குறிப்பு!) பிறகு, தெற்கு திசையின் அதிபதியான யமதேவனை சந்திக்கிறான். அவனை அருணதேவன் எப்படி விசாரிக்கிறான், தெரியுமா? - ''யமதேவா! உன் தந்தை ஸ்ரீ ஸூர்ய பகவான் வருகிறார், அவருக்கு வணக்கம் செலுத்து! நிற்க, உன் வாகனம் எருமைக் கடாவை, என் குதிரைகள் அருகில் வராமல் எட்ட இருக்கச் செய்!'' (குதிரைகள் எருமைக்கடாவின் நிறத்தைக்கண்டு, நிழல்களோ என்று பயந்து விடுகின்றன என்பது தொனி) பிறகு, தென்மேற்கு திசை. அதன் அதிபதி, நிருருதி. அவன் ராக்ஷஸர்களுக்குக் கடவுள். அவர்கள் ஸூர்ய தேவனைக் காண ஆவல் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் வருணன் அவர்களிடம் கூறுகிறான் - ''ராக்ஷஸர்களே! (கவலை கொள்ளாதீர்கள்!). உங்களை ஸ்ரீ ஸூர்ய பகவான் கடாக்ஷித்து விட்டார்!''. அடுத்தபடியாக, மேற்கு திசையின் அதிபதி

வருணதேவனைச் சந்திக்கிறான். அவனிடம் அருண தேவன் கூறுகிறான் - ''வருண தேவனே! (குதிரைகள் வெப்பம் தாங்க முடியாமல் களைத்திருக்கின்றன): அவைகளின் மேல் (களைப்பு நீங்க) நீரைத் தெளி!'' பிறகு, வடமேற்கு திசைக்காவலன் வாயுதேவனைச் சந்திக்கிறான். அவனைப் பார்த்து அருணன் கூறுகிறான் - ''வாயு தேவனே! கொஞ்சம் வேகமாக (குளிர்ந்த) காற்றை வீசு!'' பிற்பாடு, வடக்கு திசையின் அதிபதி, குபேரனைப் பார்க்கிறான். அவனிடம் அருணன் சொல்வதாவது - ''(சங்க, பத்மநிதிகள் முதலான நவநிதி களைக் கொண்ட) குபேரா! உன் தொண்டை ஸ்ரீ ஸூர்ய பகவான் கண்டு கொண்டார்''. இறுதியில், வடகிழக்கு திசையின் அதிபதியான ஈசானரைக் காண்கிறான். அவர் ஸ்ரீ ஸூர்ய பகவானின் உருவேயானவராதலால் அவரைப் பணிவுடன் அருணன் வணங்குகிறான்.

இப்படி அஷ்டதிக்பாலகர்களுடன் ஸம்பாஷிக்கும் அருணதேவன், ஸ்ரீ ஸூர்ய பகவானுக்கு முன்னே செல்லும் காவலன், உங்களை பாதுகாக்கட்டும்!

## 59. அருணனுக்கு ஸூர்யதேவனின் கட்டளைகள்!

पाशानाशान्तपालादरुण वरुणतो मा ग्रही: प्रग्रहार्थं
तृष्णां कृष्णस्य चक्रे जहिहि नहि रथो याति मे नैकचक्र:!
योक्तुं युग्यं किमुच्चै:श्रवसमभिलषस्यष्टमं वृत्रशत्रो-
स्त्यक्तान्यापेक्षविश्वोपकृतिरिति रवि: शास्ति यं सोऽवताद्व:
॥ ५९ ॥

பாஶா நாஶாந்தபாலாத³ருண வருணதோ
மாக்³ரஹீ: ப்ரக்³ரஹார்த²ம்,
த்ருஷ்ணாம் க்ருஷ்ணஸ்ய சக்ரே ஜஹிஹி
நஹி ரதே²ா யாதி மே நைக சக்ர: ।

யோக்தும் யுக்[3]யம் கிமுச்சை:
ஶ்ரவஸமபி[4]லஷஸ்யஷ்டமம் வ்ருத்ரஶ த்ரோ:,
த்யக்தான்யாபேக்ஷவிஶ்வோபக்ருதிரிதி ரவி:
ஶாஸ்தி யம் ஸோ (அ) வதாத்[3]வ: ॥ 59॥

தேரோட்டி அருணனுக்கு ஸூர்யதேவன் சில கட்டளைகள் இட்டார். ''அருணனே! எவருடைய தயவுமில்லாமல் நான் உலகத்திற்கு நன்மைகள் செய்து வருகிறேன். அதுபோல், உன் தொழிலுக்காக நீயும் எவருடைய உதவியையும் நாடாதே! மேல் திசை பாலகனான வருணதேவனிடத்தில் பிரபலமான பாசங்கள் (கயிறுகள்) இருக்கும். குதிரைக் கடிவாளங்களுக்காக நீ கயிறுகளைக் கேட்டுப் பெறாதே! ரதத்திற்கு ஒரு சக்கரம்தானே இருக்கிறது, இன்னும் ஒரு சக்கரமாவது இருந்தால் தேவலையே என்று விஷ்ணுவின் சக்கரத்தின் மேல் ஆசை கொள்ளாதே! ஒரு சக்கரமே ஆனாலும் என் ரதம் நிச்சயம் ஓடும், சந்தேகம் வேண்டாம். தேவேந்திரனிடம் ''உச்சைச்ரவஸ்'' என்ற ச்ரேஷ்டமான குதிரை இருக்கிறதே, அதைக் கேட்டுப் பெற்று, ஏற்கனவே இருக்கும் ஏழு குதிரைகளுடன் எட்டாவதாகச் சேர்த்துக் கொண்டால், நன்றாய் இருக்கும் என்று எண்ணாதே!'' இப்படி எல்லாம் ஸூர்யதேவனால் கட்டளையிடப்பட்ட அருணதேவன் உங்களை ரக்ஷிக்கட்டும்!

## 60. களைப்பு ஏதும் இல்லாமல் சுற்றித்திரியும் பிரயாணி!

नो मूर्च्छाच्छिन्नवाञ्छः श्रमविवशवपुर्नैव नाप्यास्यशोषी
पान्थः पथ्येतराणि क्षपयतु भवतां भास्वतोऽग्रेसरः सः ।
यः संश्रित्य त्रिलोकीमयति पटुतरैस्ताप्यमानो मयूखै-
रारादारामलेखामिव हरितमणि-श्यामलाम-श्वपङ्क्तिम् ॥ ६० ॥

நோ மூர்ச்ச2ா ச்சி2ந்ந வாஞ்ச2:
ப்ரம விவஶவபு: நைவ நாப்யாஸ்ய ஶோஷீ,
பாந்த2: பத்3யேதராணி க்ஷபயது
ப4வதாம் ப4ாஸ்வதோக்3ரே- ஸர:ஸ: ।
ய: ஸம்ஶ்ரித்ய த்ரிலோகீமடதி
படுதரை ஸ்தாப்யமானோ மயூகை2:,
ஆராதா3ராம லேக2ாமிவ
ஹரிதமணி ஶ்யாமலாம ஶ்வபங்க்திம் ॥ 60 ॥

அருணதேவன் தினந்தோறும் மூன்று லோகங்களையும் சுற்றிச்சுற்றி பிரயாணம் செய்து வருகிறான். இவ்வாறு செல்லும் பிரயாணமோ, வெகுவெகு நீண்டதூரம் கடக்க வேண்டியதாக இருக்கிறது. போதாததற்கு சுட்டெரிக்கும் ஸூர்யனுக்கு முன்னால் உட்கார்ந்து அத்தனை வெப்பத்தையும் தாங்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. சாமானிய வழிப்போக்கனாக இருந்தால், களைப்பு மேலிட்டு மூர்ச்சை போட்டு விழுந்து, எதுவும் பிடிக்காத நிலையில் தள்ளப்பட்டுவிடுவான். ஆனால் அருணதேவனுக்கோ இப்படிப்பட்ட ஆயாசம் எதுவும் கிடையாது. பிரயாணக் களைப்பினால் உடல் சோர்ந்து போகும் சிரமம் எதுவும் கிடையாது. முகம் வாடிப்போய்விடுவதும் கிடையாது. வழி நடந்து நடந்து, சோர்ந்து போய், எங்கேயாவது ஒரு பச்சை பசேல் என்ற தோட்டம், நந்தவனம் காணப்படாதா, அங்கே போய் சற்று களைப்பாறலாம் என்று சாதாரண வழிப்போக்கன் நினைப்பான். ஆனால் இப்படிப்பட்ட ஏக்கம் அருணனுக்கு ஏற்படுவதில்லை. ஏனெனில் அவன் முன்னே சென்று கொண்டிருக்கும் மரகத மணி வரிசைபோன்ற குதிரைகளின் வரிசையையே அவன் பச்சை பசேல் என்ற பசும்சோலையாக நினைத்துக் கொள்வான். ஸூர்யனுக்கு முன் சென்று வழிகாட்டும் ஏவலனாக இருக்கும் அருணன் உங்களுக்கு தீமைகள் எதுவும் வராமல் அவற்றை அகற்றிவிடட்டும்!

**61. குதிரைகளை அதட்டி ஓட்டும் சாரதி!**

सीदन्तोऽन्तर्निमज्ज-ज्जड-खुर-मुसला: सैकते नाकनद्या:
स्कन्दन्त:कन्दराली:कनकशिखरिणो मेखलासु स्खलन्त: ।
दूरं दूर्वास्थलोत्का मरकतदृषदि स्थास्नवो यन्न याता:
पूष्णोऽश्वा: पूरयंस्तैस्तदवतु जवनैर्हुंकृतेनाग्रगो व: ॥ ६१ ॥

ஸீத[3]ந்தோ (அ) ந்தர் நிமஜ்ஜஜ்ஜட[3]
கு[2]ரமுஸலா: ஸைகதே நாகநத்[3]யா:,
ஸ்கந்தந்த[3]: கந்த[3]ராலீ: கனக ஶிக[2]ரிணோ
மேக[2]லாஸு ஸ்க[2]லந்த: ।
தூ[3]ரம் தூ[3]ர்வாஸ்த[2] லோத்கா மரகத-
த[3]ருஷதி[3] ஸ்த[2]ாஸ்நவோ யந்ந யாதா:,
பூஷ்ணோ (அ) ஶ்வா: பூரயம் ஸ்தைஸ்த த[3]வது
ஜவனைர் ஹு[3]ம்க்ருதே னாக்[3]ரகோ[3] வ: ।61॥

ரதம் ஆகாசவீதியில் ஓடிக்கொண்டிருக்கும்போது, தேவ கங்கையான மந்தாகினீ நதியின் மணற்பரப்பை சில இடங்களில் கடக்க வேண்டியதாக இருக்கிறது. அதன் மீது ஓடும்போது, குதிரைகளின் குளம்புகள் அழுந்தப் பதிவதால் அவைகளின் கால்கள் மரத்துப்போய் மர உலக்கைகள் போல் ஜடமாகிவிடு கின்றன. பொன்மலையான மேரு பர்வதத்தின் வரிசையான குகைகளில் நுழைந்து எப்படியோ குதிரைகள் கடந்து சென்றுவிடு கின்றன. ஆனால் மலையின் தாழ்வரைகளைக் கடக்கும்போது சற்றுத் தடுமாறுகின்றன. தூரத்தில் மரகதப் பாறைகளின் தளவரிசைகள் காணப்படும்போது, அவைகள் புல்வெளிகளோ என்று நினைத்து அங்கே குதிரைகள் புல்லின்மீதான ஆசையால் ஓடாமல் நின்றுவிடுகின்றன. இவ்வித சமயங்களில், சாரதி

அருணன் "ஹூம், ஹூம்" என்று சப்தமெழுப்பி, குதிரைகளை அதட்டி, அவைகளை வேகம் குறையாமல் ஓடச் செய்கிறான். ஸூர்ய தேவனுக்கு முன்புறமிருந்து செல்லும் அருணதேவன் உங்களைக் காப்பாற்றட்டும்!

இந்த சுலோகத்துடன் அருணதேவனின் வர்ணனை முற்றுப்பெறுகிறது.

## IV. ஸூர்யரத வர்ணனை (62-72)

### 62. ஆகாயத்தில் ஓடும் ஸூர்யதேவனின் "வானரதம்"!

पीनोरः-प्रेरिताभ्रै-श्चरमखुर-पुटाग्रस्थितैः प्रातरद्रा-
वादीर्घाङ्गैरुदस्तो हरिभिरपगतासङ्गनिःशब्दचक्रः ।
उत्तानानूरु-मूर्धावनति-हठभवद्विप्रतीपप्रणामः
प्राह्णे श्रेयो विधत्तां सवितुरवतरन्व्योमवीथीं रथो वः ॥ ६२ ॥

பீநோர: ப்ரேரிதாப்[4]ரை: ஶ்சரம
கு[2]ரபுடாக்[3]ர ஸ்தி[2]தை: ப்ராதரத்[3]ரௌ,
ஆதீ[3]ர்க[4]ாங்கை[3] ருத[3]ஸ்தோ
ஹரிபி[4]ரபக[3] தாஸங்க[3] நி:ஶப்த[2] சக்ர: ।
உத்தானாநூரு மூர்த[4]ாவ நதிஹட[2]
ப[4]வத்[3]விப்ரதீப ப்ரணாம:,
ப்ராஹ்னே ஶ்ரேயோ வித[4]த்தாம்
ஸவிதுரவதரன் வ்யோம வீதீ[2]ம் ரதோ[2]ா வ: ॥ 62 ॥

இனி இச்சுலோகம் தொடங்கி 72-வது சுலோகம் வரை ஸூர்ய ரதத்தின் வர்ணனைகள் விவரிக்கப்படுகின்றன.

காலையில் உதயாசல பர்வதத்திலிருந்து ஸூர்ய பகவானின் தேர் ஆகாயமார்க்கத்திற்கு இறங்கி வருகிறது. குதிரைகளின் மார்பு

(முன்பாகம்) பருத்திருக்கின்றன. ரதம் செல்லும்போது மேகங்களைக் கிழித்துக் கொண்டு, அவற்றை அப்பாற்படுத்து கின்றன. அவைகள் ஓடும் நிலையில் பார்க்கும்போது, பின் கால் குளம்புகளின் மீது நிற்பவைகள் போல் இருக்கின்றன. (முன் கால்கள் தூக்கப்பட்டும், பின் கால்கள் தாழ்த்தப்பட்டும் பறக்கும் குதிரைகள் போன்றும் தோற்றமளிக்கின்றன). நீண்ட உடல்களைக் கொண்ட குதிரைகளால் ரதம் மேலே தூக்கப்பட்ட நிலையில் இருக்கிறது. பூப்ரதேசத்தின் தொடர்பு இல்லாததால், தேர்ச்சக்கரம் ஓசையின்றி ஓடுகிறது. தேரை ஓட்டும் நிலையில் அருணன், நிமிர்ந்திருக்கும் தலையைக் குனிவித்து மற்றும் சில சமயங்களில் தேர் வேகமாக ஓடும்போது உடலைப் பின்பக்கம் சாய்த்தும் (அதாவது வணங்கும் நிலைக்கு எதிரிடையான நிலைப்பாட்டில்) இருக்கிறான். இவ்விதம் வர்ணிக்கப்பட்ட காட்சியில் இருக்கும் ஸௌர்யரதம் உங்களுக்கு அனைத்து நலன்களையும் அருளட்டும்!

**63. ஸௌர்ய பகவானைத் தாங்கிச் செல்வதால் கௌரவமடைந்த ரதம்!**

ध्वान्तौघ-ध्वंस-दीक्षाविधिपटु वहता प्राक्सहस्रं कराणा-
मर्यम्णा यो गरिम्णः पदमतुलमुपानीयताध्यासनेन ।
स श्रान्तानां नितान्तं भरमिव मरुता-मक्षमाणां विसोढुं
स्कन्धात्स्कधं व्रजन्वो वृजिन-विजितये भास्वतः स्पन्दनोऽस्तु ॥
६३ ॥

த்[4]வாந்தௌக[4] த்[4]வம்ஸ தீ[3]க்ஷாவிதி[4]
படுவஹதா ப்ராக் ஸஹஸ்ரம் கராணாம்,
அர்யம்ணாயோ க[3]ரிம்ண: பத[3]மதுல-
முபாநீயதா த்[4]யாஸநேந ।

ஸ ப்ஃராந்தானாம் நிதாந்தம் ப[4]ரமிவ
மருதாமக்ஷமானாம் விஸோடு[4]ம்,
ஸ்கந்த[4]ாத் ஸ்கந்த[4]ம் வ்ரஜன் வோ வ்ரிஜிந விஜிதயே
ப[4]ாஸ்வத: ஸ்யந்த[3]னோ (அ)ஸ்து ॥ 63 ॥

இருள் திரள்களை அழிக்க முற்படுவதில் திறமை கொண்ட ஆயிரம் ஆயிரம் கிரணங்களைக் கொண்டவர் ஸூர்ய பகவான். பெருமைமிக்க அந்த ஸூர்ய பகவான் தன்னை ஆஸனமாக்கிக் கொண்டதால், அந்த ரதம் ஒரு கௌரவத்தைப் பெற்றுள்ளது. அந்த ரதம் ஏழுவிதமான வாயுக்களைக் கொண்ட மருத்கணங்களை ஊடுருவிச் செல்கிறது. அப்பொழுது அந்த வாயுக்கள் ரதத்தின் பாரம் தாங்க முடியாத காரணமாக தங்கள் தோள்களில் மாற்றி மாற்றித் தாங்கிக் கொள்வதாக இருக்குமோ என்ற ஐயப்பாடு ஏற்படுகிறது. அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த ஸூர்யரதம் உங்கள் பாபங்களை அழிப்பதாக அமையட்டும்!

**குறிப்பு :** ஏழு வாயுக்களின் பெயர்களாவன :- ஆவஹம், ப்ரவஹம், விவஹம், பராஹம், ஸம்வஹம், உத்வஹம், பரிவஹம்.

**64. கருடனைப் போன்றேதான் ஸூர்யரதமும்!**

योक्त्रीभूतान्युगस्य ग्रसितुमिव पुरो दन्दशूकान्दधानो
द्वेधा-व्यस्ताम्बुवाहावलि-विहित-बृहत्पक्षविक्षेपशोभः ।
सावित्रः स्यन्दनोऽसौ निरतिशय-रय-प्रीणितानूरुरेनः
क्षेपीयो वो गरुत्मानिव हरतु हरीच्छाविधेयप्रचारः ॥ ६४ ॥

யோக்த்ரீபூ[4]தான் யுக[3]ஸ்ய க்[3]ரஸிது மிவ
புரோ த[3]ந்த[3] ஶூகான் த[3]த[4]ானோ,
த்[3]வேத[4]ா வ்யஸ்தாம்பு[3] வாஹாவலி-
விஹித ப்[3]ருஹத் பக்ஷ விக்ஷேப ஶோப[4]: ।

ஸாவித்ர: ஸ்யந்த[3]னோ (அ) ஸௌ
நிரதிஶயரய ப்ரீணிதா நூருரேன:,
க்ஷேபீயோ வோ க[3]ருத் மாநிவ ஹரது
ஹரீச்சா விதே[4]ய ப்ரசார: ॥ 64 ॥

இந்த சுலோகத்தில், சிலேடை வார்த்தைகளினால் கருடனைப் போலத்தான் ஸூர்யரதமும் என்று மயூரகவி சாதுர்யமாக கவிதை அமைத்திருக்கிறார்.

கருடதேவன் நாகங்களைத் தன் வாயில் தொங்கவிட்டிருப் பான். அவைகள் தனக்கு கடிவாளக்கயிறுகள் என்று எண்ணினாற்போலும்! அதே போன்று, ஸூர்யரதத்தின் குதிரை களுக்கு நாகங்கள்தான் கடிவாளக்கயிறுகள். கருடன் ஆகாயத்தில் பறக்கும்போது, தனது இறக்கைகளினால் மேகமண்டலத்தைக் கிழித்து இரண்டு துண்டுகளாக்கி விடுவான். அவ்விதமே ஸூர்ய ரதமும் தனது இரு பக்கத்துப் பாகங்களால் மேகத்திரள்களை இரண்டாகக் கிழித்து ஊடுறுவிச் செல்கிறது. கருட தேவனின் வேகம் அவனுடைய அண்ணனான அருணனுக்குப் பிரியமானது. அதேவிதம், ஸூர்யரதத்தை அருணதேவன் வேகமாகச் செலுத்தும் லாகவம் கருடதேவனுக்கு பிரியத்தை ஏற்படுத்தும். கருடதேவன் ஹரியின் விருப்பப்படி செல்பவன். அருணனும் ஹரி என்ற தனது குதிரைகளை உத்ஸாஹப்படுத்தி ஸாரத்யம் செய்வான். இப்படி பலவிதத்திலும் கருடனைப் போன்று திகழும் ஸூர்யரதம் உங்கள் பாபங்களை துரிதமாக விலக்கட்டும்!

**65. கனம், உயரம் போன்றவற்றில் ஊகங்களுக்கு அப்பாற்பட்ட ஸூர்ய ரதம்!**

एकाहेनैव दीर्घां त्रिभुवनपदवीं लङ्घयन् यो लघिष्ठ:
पृष्ठे मेरोर्गरीयान् दलितमणिदृषत्त्विंषि पिंषञ्शिरांसि ।
सर्वस्यैवोपरिष्ठादथ च पुनरधस्तादिवास्ताद्रिमूर्ध्नि
ब्रध्नस्याव्यात्स एवं दुरधिगमपरिस्पन्दन: स्यन्दनो व: ॥ ६५ ॥

ஏகாஹ்னைவ தீ[3]ர்க[4]ாம் த்ரிபு[4]வன
பத[3]வீம் லங்க[4]யன் யோ லகி[4]ஷ்ட[2]:,
ப்ருஷ்டே[2] மேரோர் க[3]ரீயான் த[3]லித
த்[3]ருஷத்விம்ஷி பிம்ஷந் ஶிராம்ஸி।
ஸர்வஸ்யைவோபரிஷ்டாத[3]த[2] ச
புனரத[4]ஸ்தா தி[3]வாஸ்தாத்[3]ரி மூர்த்[4]நி,
ப்[3]ரத்[4]னஸ்பாவ்யாத்ஸ ஏவம் து[3]ரதி[4]க[3]ம
பரிஸ்பந்த[3]ன: ஸ்யந்த[3]னோவ: ॥ 65 ॥

ஸூர்யரதம் ஒரே நாளில் மூன்று புவனங்களையும் (வெகுவாக) கடப்பதினால், அந்தத் தேர் வெகு லேசாக இருக்குமோ என்று ஒரு பக்கம் தோன்றுகிறது. ஆனால், மறுபக்கம் அதே தேர் மேருமலைச் சிகரங்களில் இருக்கும் ரத்னப்பாறைகளை நொறுக்கித் தூள் செய்து சிதற அடிப்பதினால் வெகு கனமாக இருக்குமோ என்றும் ஊகிக்க வேண்டியதாகிறது. (உச்சிவேளையில் பார்க்கும்போது) ரதம் வெகு உயரத்தில் இருக்கிறதே என்று தோன்றும் சமயத்தில், அஸ்தமன வேளையில் அஸ்தமன கிரியின் மீதிருக்கும்பேது, வெகு தாழ்வான உயரத்தில்தான் இருக்கிறது என்றும் எண்ணத் தோன்றுகிறது. இவ்விதம் ரதத்தின் நிலைப்பாட்டை நிர்ணயிக்க முடியாத நிலையில் இருக்கும் ஸூர்யரதம் உங்களுக்கு ரக்ஷையாக இருக்கட்டும்!

**66. ஸூர்ய ரதத்தின் அச்சுக்கட்டை, தேர்க்கொடி, சக்ரம் முதலானவற்றின் ப்ரபாவங்கள்!**

धूर्ध्वस्ताग्रहाणि ध्वजपटपवनान्दोलितेन्दूनि दूरं
राहौ ग्रासाभिलाषादनुसरति पुनर्दत्तचक्रव्यथानि ।
श्रान्ताश्व-श्वास-हेलाधुत-विबुधधुनी-निर्झराम्भांसि भद्रं
देयासुर्वो दवीयो दिवि दिवसपतेः स्यन्दनप्रस्थितानि ॥ ६६ ॥

தூ4ர் த்4வஸ்தாக்3ர்ய க்3ரஹாணி

த்4வஜபடபவநாந்தோ3 லிதேந்தூ3நி தூ3ரம்,

ராஹௌ க்3ராஸாபி4 லாஷாத3நு ஸரதி

புனர்த3த்த சக்ர வ்யத2ாணி।

ஶ்ராந்தாஶ்வ ஶ்வாஸ ஹேலாத4 த

விபு3த4 து4நீ நிர்ஜ2ராம் ப4ாம்ஸி ப4த்3ரம்,

தே3 யாஸுர்வோ த3வீயோ தி3வி தி3வஸபதே:

ஸ்யந்த3ன ப்ரஸ்தி2 தாநி ॥ 66 ॥

ஸூர்யரதம் (ஆகாயவெளியில் வேகமாக பிரயாணம் செய்யும்போது) எதிரில், அருகில் இருக்கும் (அங்காரகன் போன்ற) க்ரஹங்கள் அச்சுக்கட்டையினால் அப்புறப் படுத்தப்படுகின்றன. தேர்க்கொடி காற்றில் படபடக்கும் போது அந்தக் காற்றின் வேகத்தினால் சந்திரக்ரஹம் கலக்கம் அடைகிறது. வெகுதூரத்தில் இருக்கும் ராஹு க்ரஹம் (க்ரஹண காலத்தில்) ஸூர்யனை விழுங்குவதற்கு பின் தொடர்ந்து அணுகும்போது தேர்ச்சக்கரம் அவனுக்கு அல்லல்களை ஏற்படுத்துகிறது. (ராஹுவை விஷ்ணுவின் சக்ராயுதம் விரட்டி அடிக்கிறது என்று புராணங்கள் கூறும்). தேர்க் குதிரைகள் களைப்பின் மேலீட்டால் நீண்ட பெருமூச்சுகள் விடும்போது, அந்த மூச்சுக்காற்றின் வேகம் தேவ கங்கையின் நீர்பரப்பில் அலைகள் கொந்தளிக்கச் செய்கிறது. இவ்விதம் வானத்தில் பிரயாணம் செய்யும் ஸூர்யரதம் உங்களுக்கு நீடித்த மங்களங்களை அருளட்டும்!

**67. ஸித்தகணஸ்த்ரீகள் ஸூர்ய ரதத்தை அலங்கரித்தல்!**

अक्षे रक्षां निबध्य प्रतिसर-वलयै-र्योजयन्त्यो युगाग्रं

धू:स्तम्भे दग्धधूपा: प्रहित-सुमनसो गोचरे कूबरस्य ।

चर्चाश्चक्रे चरन्त्यो मलयज-पयसा सिद्धवध्वस्त्रिसंध्यं

वन्दन्ते यं द्युमार्गे स नुदतु दुरितान्यंशुमत्स्यन्दनो व: ॥ ६७ ॥

அசேஷரக்ஷாம் நிப³த்⁴ய ப்ரதிஸர வலயை:
யோஜயந்த்யோ யுகா³க்³ரம்,
தூ⁴: ஸ்தம்பே⁴ த³க்³த⁴ தூ⁴ பா:
ப்ரஹித ஸுமனஸோ கோ³சரே கூப³ரஸ்ய ।
சர்சாஸ்சக்ரே சரந்த்யோ மலயஜபயஸா
ஸித்³த⁴ வத்⁴வஸ்த்ரி ஸந்த்⁴யம்,
வந்த³ந்தே யம் த்³யு மார்கே ஸ நுத³து
து³ரிதான்யம் ஸௌமத் ஸ்யந்த³ நோவ: ॥ 67 ॥

ஸூர்ய ரதம் வானவீதியில் ஸஞ்சாரம் செய்யும் போது ஸித்தர்கள் இனத்தைச் சார்ந்த பெண்டிர் மூன்று வேளைகளிலும் அதை வணங்கி, தூப, தீபாதி அலங்காரங்களினால் தேரைச் சேவிக்கின்றனர். அச்சுக்கட்டையில் (இருசுக் கட்டையில்) ரக்ஷைக் கயிற்றைக் கட்டுகிறார்கள். நுகத்தடியின் நுனியில் ''ப்ரதிஸரம்'' என்ற மங்கள, மஞ்சள் கயிற்றை கங்கணமாகச் சுற்றுகிறார்கள். ரதத்தின் ஸ்தம்பங்களுக்கு பரிமள தூபங்களை புகைய விடுகிறார்கள். நுகத்தடி மீது நன்றாகத் தெரியும்படி புஷ்பங்களைக் கொண்டு அலங்கரிக்கிறார்கள். சக்கரத்தின் மீது சந்தனப்பூச்சை தடவுகிறார்கள். இப்படி, தேவ மாதர்களால் (ஸித்த கணப்பெண்டிர்) மூன்று ஸந்த்யா காலங்களிலும், உபசரிக்கப் பட்டு, வணங்கப்பட்ட ஸூர்யதேவனின் தேர் உங்கள் பாபங்களை அகற்றட்டும்!

**68. ஸூர்யனின் ஒரு வானவீதி!**

उत्कीर्ण-स्वर्ण-रेणु-द्रुत-खुर-दलिता पार्श्वयो: शश्वदश्वै-
रश्रान्त-भ्रान्त-चक्रक्रम-निखिल-मिलन्नेमिनिम्ना भरेण ।
मेरोर्मूर्धन्यघं वो विघटयतु रवेरेकवीथी रथस्य
स्वोष्मोदत्ताम्बु-रिक्त-प्रकटित-पुलिनोद्धूसरा स्वर्धुनीव ॥ ६८॥

உத்கீர்ண ஸ்வர்ணரேணு த்3ருத கு2ர த3லிதா
　　பார்ஶ்வயோ: ஶஶ்வத் அஶ்வை:,
அஶ்ராந்த ப்4ராந்த சக்ர க்ரம நிகி2ல
　　மிலந்நேமி நிம்னா ப4ரேண।
மேரோர் மூர்தன்யக4ம் வோ விக4டயது
　　ரவேரேக வீதீ2 ரத2ஸ்ய,
ஸ்வோஷ்மோ த3க்தாம்பு3
　　ரிக்த ப்ரகடித புலினோத்3தூ4 ஸரா ஸ்வர்து4னீவ ॥ 68॥

ஸூர்யதேவனின் ஒரு வானவீதி இப்படி அமைகிறது. மேரு பர்வதத்தின் சிகரங்கள் மீது தேர் பிரயாணம் செய்யும்போது, குதிரைகளின் குளம்புகள் அடிக்கடி அவற்றை ஆழமாகக் கீறும் போது தங்கத் துகள்கள் இருபுறங்களிலும் அந்த வீதியில் வாரி, வாரித் தூவப்படுகின்றன. இடையறாது பயணம் செய்யும் தேர்ச்சக்கரத்தின் வட்டம் அந்த வீதியில் அழுந்தி, அழுந்தி, அதன் பாரத்தினால் சுவடுககள் ஏற்படுத்தப்படுகின்றன. இந்த வீதி வழியாக ஸூர்யன் ஸஞ்சாரம் செய்யும்போது தேவகங் கையில் நீர் வற்றிப் போனதால், அதன் மணல்களையே ஸூர்யன் தனது உஷ்ண கிரணங்களினால் உறிஞ்சி பிறகு மாரியைத் தோற்றுவிக்கும்போது, அந்த மாரி வெண்மையான நீரில்லாத மணல்மாரியாக இருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு வகையான ஸூர்யவீதி உங்களுடைய பாபத்தை அழிக்கட்டும்!

**69. ஸூர்யதேவனின் ரதவீதியின் அடையாளங்கள் !**

नन्तुं नाकालयानामनिशमनुयतां पद्धति: पङ्क्तिरेव
　क्षोदो नक्षत्रराशेरदयरयमिलच्चक्रपिष्टस्य धूलि: ।
हेषाह्लादो हरीणां सुरशिखरिदरी: पूरयन्नेमिनादो
　यस्याव्यात्तीव्रभानो: स दिवि भुवि यथा व्यक्तचिह्नो रथो व: ॥
६९ ॥

நந்தும் நாகாலயானாம நிஶம் அநுயதாம்
பத்[3]த[4]தி: பங்க்திரேவ,
க்ஷோதோ[3] நக்ஷத்ர ராஶேரத[3]யரய
மிலச்சக்ர ப்ருஷ்ட[2]ஸ்ய தூ[3]லி: ।
ஹேஷா ஹ்ராதே[4]ா ஹரீணாம் ஸுர ஶிக[2]ரித[3]ரீ:
பூரயன்நேமி நாதே[4]ா,
யஸ்யாவ் யாத்தீவ்ர ப[4]ாநோ: ஸதி[3]வி
பு[4]வி யதா[3] வ்யக்த சிஹ்நோ ரதே[2]ா வ: ॥ 69 ॥

தரையில் தேர் ஓடினால் அதன் சுவடுகளைக் கொண்டு தேர் ஓடின வீதியை அடையாளம் கண்டு கொள்ளலாம். அதைப் போன்று வானவீதியில் ஸூர்யன் பிரயாணித்த மார்க்கத்தை சில அடையாளங்களினால் கண்டு கொள்ளலாம். ஸூர்யனை வணங்குவதற்காக தேவர்கள் எப்பொழுதும் வரிசையாக நின்று கொண்டிருப்பார்கள். அந்த வரிசைதான் ஸூர்ய தேவன் செல்லும் மார்க்கத்தை அடையாளம் காட்டும் வழிகாட்டி. ஸூர்ய ரதத்தின் வேகத்தினால் சிதறுண்ட நக்ஷத்திரங்களின் துகள்களின் புழுதி மண்டலம் இன்னொரு அடையாளம். மேரு பர்வதத்தின் மீது ஸூர்யன் ஸஞ்சாரம் செய்யும் போது, தேர்க் குதிரைகளின் கனைப்புச் சத்தம் அதன் குகைகளில் எதிரொலித்துக் கொண்டிருக்கும். சக்கரத்தின் ஓசையும் அதனுடன் இணைந்திருக்கும். இது ரதவீதியின் இன்னொரு அடையாகளம். இப்படிப்பட்ட ஸூர்ய தேவனின் ரதவீதி உங்களை ரக்ஷிக்கட்டும்!

**70. மந்தர பர்வதத்தின் மீது ஸூர்ய கதி!**

नि:स्पन्दानां विमानावलि-वितत-दिवां देववृन्दारकाणां
वृन्दैरानन्द-सान्द्रोद्यममपि वहतां विन्दतां वन्दितुं नो ।
मन्दाकिन्याममन्द: पुलिनभृति मृदुर्मन्दरे मन्दिराभे
मन्दारैर्मण्डितारं दधदरि दिनकृत्स्यन्दन: स्तान्मुदे व: ॥ ७० ॥

நிஸ்பந்தா3னாம் விமானாவலி விதத தி3வாம்
 தே3வ வ்ருந்தா3ரகாணாம்,
வ்ருந்தை3-ரானந்த3 ஸாந்த்3 ரோத்3யமபி
 வஹதாம் விந்த3தாம் வந்தி3தும் நோ ।
மந்தா3 கின்யாம மந்த3: புலினப்4ருதி
 ம்ருதுர்3 மந்த3ரே மந்தி3ராபே4 ,
மந்தா3ரை: மண்டிதாரம் த3த4த3ரி தி3 நக்ருத்ஸ்யந்த3ந:
 ஸ்தான் முதே3 வ: ॥ 70 ॥

மந்தர பர்வதம் ஒரு நகரத்தைப் போல் திகழ்கிறது. அங்கே ஸூர்யரதம் மெதுவாகச் செல்கிறது. ஆனால் தேவகங்கை யான மந்தாகினீ மணல் நிறைந்திருந்தாலும், அதில் ரதம் வேகமாக ஓடுகிறது. தேர்ச் சக்கரத்தின் ஆரங்கள் மந்தாரை மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. தேவர்கள் ஸூர்யதேவனை வணங்குவதற்காக தங்கள் விமானங்களில் அணிவகுத்து மிகுந்த ஆவலுடன் காத்திருக் கிறார்கள். அவர்கள் கண் கொட்டாமல் நீண்டநேரம் காத்திருந்தாலும் (சிலருக்கு) ஸூர்யதேவனை (அருகில்) தரிசிப்பதற்கு பேறு கிட்டுவதில்லை. இப்படிப்பட்ட மகிமைகளைக் கொண்ட ஸூர்யதேவனின் ரதம் உங்களுக்கு இன்பத்தை நல்கட்டும்!

**71. கடவுளர்கள் போற்றும் ஸூர்யரதத்தின் பாகங்கள்!**

चक्री चक्रार-पङ्क्तिं हरिरपि च हरीन् धूर्जटि-र्ध्वजान्ता-
 नक्षं नक्षत्रनाथोऽरुणमपि वरुण: कूबराग्रं कुबेर: ।
रंह: संघ: सुराणां जगदुपकृतये नित्ययुक्तस्य यस्य
 स्तौति प्रीतिप्रसन्नोऽन्वहमहिमरुचे: सोऽवतात्स्यन्दनो व: ॥
 ७१ ॥

சக்ரீ சக்ராரபங்க்திம் ஹரிரபி ச
ஹரீன் துா4ர்ஜடிர்துா4ர் த்4வஜாந்தான்,
அக்ஷம் நக்ஷத்ர நாத2: அருணமபி
வருண: கூப3ராக்3ரம் குபே3ர: ।
ரம்ஹ: ஸங்4க: ஸுராணாம்
ஜக3து3பக்ருதயே நித்யயுக்தஸ்ய யஸ்ய,
ஸ்தௌதி ப்ரீதி ப்ரஸந்நோ (அ)ந்வஹ
மஹிமருசே: ஸோ(அ)வதாத் ஸ்யந்த3நோ வ: ॥ 71 ॥

ஸூர்யதேவன் தினந்தோறும் உலகின் நன்மைக்காக ஈடுபட்டு செயல்பட்டு வருகிறார். அதனால் அனைத்து கடவுள்களும் ப்ரீதியின்பத்துடன் ஸூர்யரதத்தின் அவயவங்களைத் தனித்தனியாக, தங்களுக்குப் பிடித்தமான பாகங்களை ஸ்தோத்திரம் செய்கிறார்கள். சக்ராயுதத்தை ஏந்திய மஹாவிஷ்ணு சக்கரத்தின் ஆரங்களின் வரிசையைப் போற்றுகிறார். ஹரி என்ற ஒரு பெயருடைய தேவேந்திரன் ஹரி எனப்படும் குதிரைகளைப் போற்றுகிறான். பரமசிவன், ரதத்தின் நுகத்தடியின் நுனியில் கட்டப்பட்டிருக்கும் கொடிகளைப் பாராட்டுகிறார். நக்ஷத்திரங்களின் அதிபதியான சந்திரன் தேரின் அச்சுக்கட்டை (இருசை) துதிக்கிறான். வருணதேவன், ஸாரதி அருணதேவனைப் புகழ்கிறான். குபேரன் ஏர்க்காலின் நுனி பாகத்தைப் பாராட்டுகிறான். தேவகணங்கள் ரதத்தின் வேகத்தைப் போற்றுகிறார்கள். இத்தகைய பெருமைகளைக் கொண்ட ஸூர்யரதம் உங்களைக் காப்பதாக!

**72. ஸூர்ய ரதமோ, அல்லது மந்தர பர்வதமோ!**

नेत्राहीनेन मूले विहित-परिकर: सिद्धसाध्यै-र्मरुद्भि:
पादोपान्ते स्तुतोऽलं बलिहरिरभसाकर्षणाबद्धवेग: ।
भ्राम्य-न्व्योमाम्बुराशावशिशिरकिरणस्यन्दन: संततं वो
दिश्याल्लक्ष्मीमपारा-मतुलित-महिमेवापरो मन्दराद्रि: ॥ ७२ ॥

நேத்ராஹீனேன மூலே விஹிதபரிகர:
ஸித்$^{3}$த$^{4}$ ஸாத்$^{4}$ யைர் மருத்$^{3}$பி$^{4}$:,
பாதோ$^{3}$ பாந்தே ஸ்துதோ (அ)லம்
ப$^{3}$லிஹரிரப$^{4}$ ஸா கர்ஷணாப$^{3}$த்$^{3}$த$^{4}$ வேக$^{3}$: ।
ப்$^{4}$ராம்யன் வ்யோ மாம்பு$^{3}$ ராஶாவஶிஶிர
கிரண ஸ்யந்த$^{3}$ன: ஸந்ததம் வோ,
தி$^{3}$ஶ்யால் லக்ஷ்மீமபாராமதுலித
மஹிமேவா பரோ மந்த$^{3}$ ராத்$^{3}$ரி: ॥ 72 ॥

இந்த ச்லோகத்தில் சிலேடை அலங்கார உத்தியைக் கையாண்டு, ஸூர்யரதம் பலவிதத்திலும் மந்தர பர்வதத்தை ஒத்தது என்று கவி நிரூபணம் செய்கிறார். இரண்டையும் வர்ணனை செய்யும்போது, வார்த்தைகள் ஒன்றேதான், ஆனால் அவற்றின் பொருள் மாறுபட்டு தனித்தனியாக ஸூர்யரதத்தையும், மந்தர பர்வதத்தையும் வருணிக்கின்றன.

ஸூர்ய ரதத்தின் அடிப்பாகத்தில் உட்கார்ந்துகொண்டு அங்கஹீனனான (இடுப்புக்கீழ் அங்கங்கள் இல்லாதவனாக) அருணதேவன் ஸாரதியாக இயங்குகிறான். மந்தரபர்வதம், அடிப்பாகத்தில் நாகராஜனான வாஸுகியினால் சுற்றப்பட்டது (பாற்கடல் கடையப்பட்டபோது). ஸூர்யரதத்தின் சக்கரத்தின் அருகாமையில் ஸித்தர்கள், ஸாத்தியர்கள், மருத்கணங்கள் முதலானோர் வெகுவாக துதி செய்து நின்றிருக்கிறார்கள். மந்தர பர்வதத்தின் அடிவாரத்தில் ஸித்தர்கள், ஸாத்தியர்கள், மருத் கணங்கள் முதலானோர் ஸ்தோத்ரங்கள் செய்து நின்றிருக் கிறார்கள். ரதத்தை பலம் பொருந்திய குதிரைகள் இழுத்துச் செல்வதால் வேகம் அதிகமாகவே இருக்கிறது. மந்தர பர்வதத்தை பலி முதலான அசுரர்கள் தேவேந்திரன் போன்ற தேவர்கள் (பாற்கடலில் ஒரு மத்தாகக் கொண்டு) வெகு வேகமாக சுழற்றி னார்கள். ஸூர்யரதம் ஸமுத்திரம் போன்ற அகண்டாகாரமான

ஆகாசவெளியில் சுற்றி வருகிறது. மந்தர பர்வதம் ஆகாயம் போன்ற அகண்டாகாரமான ஸமுத்திரத்தில் வேகமாகச் சுழன்றது (மத்தாக). இப்படி பலவிதத்திலும் ஈடு இணையில்லாத மகிமைகளைக் கொண்ட ஸூர்யதேவனின் ரதம், இன்னொரு மந்தரபர்வதமோ என்று நினைக்கும்படிச் செய்கிறது. அந்த ரதம், அளவற்ற செல்வங்களை உங்களுக்கு அருளட்டும்.

**ப்ரத்யேக பலச்ருதி**

ஸ்ரீலக்ஷ்மீகடாக்ஷம் பெற்று ஐசுவரியங்கள் பெருகும். **இந்த சுலோகத்துடன் ஸூர்யரத வர்ணனை நிறைவு பெறுகிறது.**

## V. ஸூர்ய மண்டல வர்ணனை (73-80)

**73. ஸூர்ய மண்டலத்தின் மகத்துவங்கள் !**

यज्ज्यायो बीजमह्ना-मपहत-तिमिरं चक्षुषामञ्जनं यद्-
द्वारं यन्मुक्तिभाजां यदखिल-भुवन-ज्योतिषामेकमोकः ।
यद्वृष्ट्यम्भोनिधानं धरणि-रससुधापानपात्रं महद्य-
द्दिश्यादीशस्य भासां तदविकलमलं मङ्गलं मण्डलं वः ॥ ७३ ॥

யஜ்ஜ்யாயோ பீ[3]ஜமஹ்னாம் அபஹத-
திமிரம் சக்ஷுஷா மஞ்ஜனம் யத்
த்[3]வாரம் யந்முக்தி ப[4]ாஜாம்
யத[3]கி[2]ல பு[4]வன ஜ்யோதிஷாமேக மோக: ।
யத்[3]வ்ருஷ்ட்யம் பே[4]ா நித[4]ானம் த[4]ரணிரஸ-
ஸுத[4]ா பானபாத்ரம் மஹத்[3]யத்[3]
தி[3]ஶ்யா தீ[3]ஶஸ்ய ப[4]ாஸாம் தத[3]விகலமலம்
மங்க[3]ளம் மண்டலம் வ: ॥ 73 ॥

இந்த 73-வது சுலோகம் தொடங்கி 80-வது சுலோகம் வரை ஸூர்ய மண்டலத்தின் வர்ணனைகள்.

ஸூர்ய மண்டலத்தின் மகத்துவங்கள் அநேகம். அதுவே பகல் என்ற பொழுதிற்கு பெருமை வாய்ந்த மூலகாரணம். கண்களுக்கு ஏற்படும் மாலைக்கண், கண்ணில் திரை (திமிரரோகம் என்று சொல்லப்படும் காட்ராக்ட் போன்றவைகள்) முதலான கண் நோய்களை அகற்றிடும் (சித்த வைத்தியம், ஆயுர் வேதம் முதலானவற்றில் கூறப்படும்) கண் மை, முக்தி அடையும் ஜீவர்களுக்கு இதுவே மோக்ஷத்வாரம். (இதுவே யோக சாஸ்திரங்களிலும், வேதங்களின் பல பகுதிகளிலும் அர்ச்சிராதி கமனம், உத்தராயண மார்க்கம் என்று கூறப்படுகிறது). அகிலத்தில் உள்ள அனைத்து சோதிகளுக்கும் (அக்னி, நக்ஷத்திரங்கள், க்ரஹங்கள் போன்றவைகள்) ஆகிய யாவற்றிற்கும் ஒன்றேயான உறைவிடம். மழை நீருக்கு அதுவே சேமிப்பிடம். பூமண்டலத்தின் அமுதமயமான, தூய நீருக்கு மிகப்பெரிய குடிநீர் பாத்திரம். ஒளிகளுக்கெல்லாம் ஈசன் ஸூர்ய தேவனே. அவருடைய தேஜோமண்டலம், குறைவற்றது, மாசற்றது. அப்படிப்பட்ட ஸூர்யமண்டலம் உங்களுக்கு அமோகமான மங்களங்களை அருளட்டும்.

**ப்ரத்யேக பலச்ருதி**

கண்ணில் பூ விழுதல், காட்ராக்ட், மாலைக்கண், முதலிய கண்நோய்கள் வைத்திய சிகிச்சைகள் மூலம் (பண்டைய காலத்தில் கண் மை உபயோகப்பட்டது) சீக்கிரம் குணம் அடையும். மோக்ஷ புருஷார்த்தத்தை விரும்புபவர்கள் தங்கள் இலக்கை அடைவர். உரிய காலத்தில் மழை வர்ஷிக்கும், குடிநீர்ப் பஞ்சம் ஏற்படாது. அனைத்து மங்களங்களும் கூடிப்பெருகும்.

**74. வஸந்த ருதுவின் திருமுகம் போன்று மனோகரமான ஸூர்யமண்டலம்!**

वेलावर्धिष्णु सिन्धोः पय इव खमिवार्धोद्गताग्र्यग्रहोडु
स्तोकाच्छिन्न-स्वचिह्नप्रसवमिव मधोरास्यमस्यन्मनांसि ।
प्रातः पूष्णोऽशुभानि प्रशमयतु शिरःशेखरीभूतमद्रेः
पौरस्त्यस्योद्गभस्ति-स्तिमिततम-तमः खण्डनं मण्डलं वः
॥ ७४ ॥

வேலாவர்தி[4]ஷ்ணு ஸிந்தே[4]ா: பய இவ
க[2]மிவார்தே[4]ா த்[3]க[3]தா க்[3]ரய க்[3]ரஹோடு,
ஸ்தோகோத்[3]பி[4]ந்ந ஸ்வ சிஹ்ந ப்ரஸவமிவ
மதே[4]ா ராஸ்ய-மஸ்யன் மனாம்ஸி ।
ப்ராத: பூஷ்ணோ (அ) ஶுப[4]ாநி ப்ரஶமயது
ஶிர:ஶேக[2]ரீபூ[4]தமத்[3]ரே:,
பௌரஸ்த்யஸ்யோத்[2] க[3] ப[4]ஸ்தி ஸ்திமித
தம தம:க[2]ண்டனம் மண்டலம் வ: ॥ 74 ॥

விடியற்காலையில் ஸூர்யமண்டலம் உதயகிரியின் சிகரத்தின் மீது திகழும் ஒரு சிரோபூஷணமாக விளங்கு கிறது. வஸந்தருதுவின் திருமுகம் போன்று மக்களின் மனத்தைக் கவர்வதாக இருக்கிறது. ஸமுத்திரத்தின் அலைகள் பொங்குவது போல காலம் என்ற அலைகளை (வினாடி, முகூர்த்தம், நாட்கள், மாதங்கள், வருஷங்கள் முதலானவற்றை) ஸூர்யதேவன் தோற்றுவித்து வளர வைக்கிறார். ஸூர்யன் உதயமாகும்போது, ஆகாயத்தில் ப்ரதானமான சிலக்ரஹங்களும், நக்ஷத்திரங்கள் மட்டும்தான் சிறிதளவேயான ப்ரகாசத்துடன் ஆகாயத்தில் ஒளிர்கின்றன. புஷ்பங்கள் கொஞ்சம் கொஞ்சமாக மலர்வதே ஸூர்யோதயத்தின் ஒரு அடையாளமாகும். கிழக்கு திசையில்

ஸூர்யமண்டலத்திலிருந்து மேல்நோக்கி கிளம்பும் கிரணங்களின் ஒளிவீச்சினால், இருள் திரள்கள் அழிந்து போகின்றன. இப்படிப்பட்ட வர்ணனைகளுக்குரிய உதய ஸூர்யனின் மண்டலம் உங்களுடைய அசுபங்களை அகற்றட்டும்!

**75. ஸூர்ய மண்டலம் அகில புவனத்திற்கும் பரிபூரண மான அலங்காரம்!**

प्रत्युप्तस्तप्तहेमोज्ज्वलरुचिरचल: पद्मरागेण येन
ज्याय: किंजल्कपुञ्जो यदलिकुलशितेरम्बरेन्दीवरस्य ।
कालव्यालस्य चिह्नं महिततममहोमूर्ध्नि रत्नं महद्य-
द्दीप्तांशो: प्रातरव्यात्तदविकलजगन्मण्डनं मण्डलं व: ॥ ७५ ॥

ப்ரத்யுப்தஸ் தப்த ஹேமோஜ்வல-
ருசிரசல: பத்[3]மராகே[3]ண யேன,
ஜ்யாய: கிஞ்ஜல்க புஞ்ஜோ யத[3]லிகுல
ஶிதேரம்ப[3]ரேந்தீ[3]வர ஸ்ய ॥
காலவ்யாலஸ்ய சிஹ்னம் மஹித
தம மஹோ மூர்த்[4]நி ரத்னம் மஹத்[3]யத்[3],
தீ[3]ப்தாம் ஶோ: ப்ராதரவ்யாத் தத[3]விகல
ஜக[3]ன் மண்டனம் மண்டலம் வ: ॥ 75 ॥

ஸூர்யோதய காலத்தில், உதயாசல பர்வதம் உருக்கிவிட்ட தங்கம் போல் தக,தகக்கிறது. அதன் மீது ஸூர்ய மண்டலம் செக்கச்செவேல் என்று தோன்றும்போது, அது உருக்கி விட்ட தங்கத்தின் நடுவில் பத்மராக மாணிக்கத்தைப் பதித்ததுபோல் காட்சி அளிக்கிறது. நீலவானம் கருவண்டுகளால் மொய்க்கப் பட்ட இந்தீவரபுஷ்பம் போல் (கருநெய்தல்) தோற்றம் அளிக்கிறது. அதன் மத்தியில் சிவப்பான மகரந்தத்தாள் எப்படி இருக்குமோ, அப்படி ஸூர்யமண்டலம் சிறப்பாகத் திகழ்கிறது.

காலம் என்ற பாம்பின் சிரஸ்ஸில் நாகரத்னம் போன்று ஸூர்யமண்டலம் ஒரு சின்னமாகத் திகழ்கிறது. பகல் என்பதின் மிக உயர்ந்த சிரோமணியாகவும் விளங்குகிறது. இந்த ஸூர்யமண்டலம் அகிலபுவனத்திற்கும் ஒரு பரிபூரணமான அலங்காரமாகத் திகழ்கிறது. இப்படிப்பட்ட பெருமைகள் படைத்த ஸூர்யமண்டலம் உங்களை பாதுகாக்கட்டும்.

**76. எல்லா கடவுளர்களையும் ஒளியிழக்கச்செய்யும் ஒளிவட்டம்!**

कस्त्राता तारकाणां पतति तनुरवश्यायबिन्दुर्यथेन्दु-
विंद्राणा दृक्स्मरारेरुरसि मुररिपोः कौस्तुभो नोद्गभस्तिः ।
वह्नेः सापह्नवेव द्युतिरुदयगते यत्र तन्मण्डलं वो
मार्तण्डीयं पुनीताद्दिवि भुवि च तमांसीव मुष्णन्महांसि ॥ ७६ ॥

கஸ்த்ராதா தாரகாணாம் பததி
தநுரவஶ்யாய பி[3]ந்து[3]ர்யதே[2]ந்து[3]ர்,
வித்[3]ராணா த்[3]ருக் ஸ்மராரேருரஸி முரரிபோ:
கௌஸ்துபே[4]ா நோத்[3]க[3] ப[4]ஸ்தி: ।
வஹ்நேஸ்ஸா பஹ்நவேவ த்[3]யுதிருத[3]ய-
க[2]தே யத்ர தன்மண்டலம் வோ,
மார்தண்டீ[3]யம் புநீதாத் தி[3]விபு[4]வி ச
தமாம் ஸீவ முஷ்ணன் மஹாம்ஸி ॥ 76 ॥

ஸூர்யமண்டலம் உதயகிரியின் மீது எழுந்தருளியவுடன் சந்திரன் பனித்திவிலைகள் போன்று மெலிந்துபோய் விடுகிறான். அப்படியிருக்கையில் நக்ஷத்திரங்களை யார் காப்பார்? (அரசனுக்கே அவலநிலை என்றால், சேவகனின் கதி என்ன ஆகும் என்பது கருத்து). பரமசிவன் தனது நெற்றிக்கண் தீச்சுடரால் மன்மதனை எரித்தார். ஆனால் அதே கண் (அக்னி

ரூபமானது) இப்பொழுது ஒளி குன்றிப் போய்விட்டது! மஹாவிஷ்ணுவின் கழுத்தில் பளீரென்று மின்னிக் கொண்டிருந்த கௌஸ்துப மணி தனது காந்தியை வெளிப்படுத்த முடியவில்லை. அக்னிதேவனை ஒரு திரை மறைத்துவிட்டது போல் அவன் பிரகாசிக்கவில்லை. ஸூர்யனின் ஒளிவட்டம் புவியிலும், விண்ணிலும் இருட்டை அபகரித்ததைப் போல, புகழ்படைத்த ஒளிப் பொருள்களின் ஒளியையும் அபகரித்துவிடுகிறது. (இருட்டு அறவே அழிந்துபோகிறது, மற்றைய ஒளிகள் யாவும் மங்கிப்போய் விடுகின்றன என்பது கருத்து). இப்படிப்பட்ட பெருமைகளைக் கொண்ட ஸூர்யனின் ஒளிவட்டம் உங்களை புனிதப்படுத்தட்டும்!

**77. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்யும் தெய்வம் ஸூர்யதேவன்.**

यत्प्राच्यां प्राक्चकास्ति प्रभवति च यतः प्राच्यसावुज्जिहाना-
दिद्धं मध्ये यदह्नो भवति ततरुचा येन चोत्पाद्यतेऽहः ।
यत्पर्यायेण लोकानवति च जगतां जीवितं यच्च तद्वो
विश्वानुग्राहि विश्वं सृजदपि च रवेर्मण्डलं मुक्तयेऽस्तु ॥ ७७ ॥

யத் ப்ராச்யாம் ப்ராக் சகாஸ்தி ப்ரப[4]வதி ச யத:
ப்ராச்யஸாவுஜ் ஜிஹாநாத்,
இத்[3]த[4]ம் மத்[4]யே யத[3]ஹ்நோ ப[4]வதி ததருசா
யேந சோத்பாத்[3]யதே(அ)ஹ: ।
யத் பர்யாயேண லோகான் அவதி ச
ஜகதாம் ஜீவிதம் யச்ச தத்[3]வோ,
விஶ்வாநுக்ராஹி விஶ்வம் ஸ்ரு ஜத[3]பி ச
ரவேர் மண்டலம் முக்தயே (அ)ஸ்து ॥ 77 ॥

ஸூர்ய மண்டலம் கிழக்கு திக்கில் உதயமாகி ப்ரகாசிக்கிறது. அப்படியானால் கிழக்கு திக்கு என்பது என்ன? எங்கே

ஸூர்யமண்டலம் பெருகிப்பெருகி உதயமாகிறதோ, அதுதான் கீழ்திசை. அதாவது கிழக்கு திக்கு என்பது ஸூர்யனிடமிருந்து தோன்றியது. அதுவே இன்னும் வளர்ந்த நிலையில் பகல் (பூர்ணமாக) தோன்றுகிறது. பகலை வெளிச்சம் கொண்டதாகச் செய்வதும் அந்த ஸூர்யதேவனே. அவரே அந்தந்த காலகட்டங்களில் முறைப்படி உலகங்களை ஸ்ருஷ்டிக்கிறார். அவற்றைக் காக்கிறார், மற்றும் முக்தியை அளித்து லயம் (ஸம்ஹாரம்) அடையச் செய்யவும் செய்கிறார். அவரேதான் உலகத்தின் உயிர்நாடி. அவரேதான் உலகங்களுக்கு அனுக்ரஹம் செய்கிறார். இப்படிப்பட்ட ஸூர்யதேவனின் ஒளிவட்டம் உங்களுக்கு மோக்ஷத்தை (ஸம்ஸார பந்த விடுதலையை) அளிக்கட்டும்!

**78. யுகங்களின் முடிவில் ஸூர்யதேவனின் உக்ரம்!**

शुष्यन्त्यूढानुकारा मकरवसतयो मारवीणां स्थलीनां
येनोत्तप्ताः स्फुटन्तस्तडिति तिलतुलां यान्त्यगेन्द्रा युगान्ते ।
तच्चण्डांशो-रकाण्ड-त्रिभुवन-दहनाशङ्कया धाम कृच्छ्रात्
संहृत्यालोकमात्रं प्रलघु विदधतः स्तान्मुदे मण्डलं वः ॥ ७८ ॥

ஶுஷ்யந்த்யூட[4]ானுகாரா மகர வஸதயோ
மாரவீணாம் ஸ்த[2]லீனாம்,
யேநோத்தப்தா: ஸ்பு[2]டந்தஸ்தடி[3]தி திலது-
லாம் யாந்த்யகே[3]ந்த்ரா யுகா[3]ந்தே ।
தச்சண்டா[3]ம் ஶோ ரகாண்ட[3] த்ரிபு[4]வன
த[3]ஹனா ஶங்கயா த[4]ாமக்ருச்ச[2]ராத்,
ஸம்ஹ்ருத்யா லோகமாத்ரம் ப்ரலகு[4]
வித[3]த[4]த: ஸ்தாந்முதே[3] மண்டலம் வ: ॥ 78 ॥

யுகங்களின் முடிவில் ஸூர்யதேவனின் உக்ரம் மிகக் கொடுமையானது. அப்பொழுது கடும் வெப்பம் காரணமாக

ஸமுத்ரங்கள் வற்றிப் போய் பாலைவனங்களைப் போல் ஆகிவிடுகின்றன. ஸூர்யதேவன் தனது வெப்பத்தினால் மலைகளைக் கொளுத்தி, அந்த கொதிப்பினால் அவைகள் வெடித்துச் சிதறி எள் குவியலைப்போல் ஆகிவிடுகின்றன. யுகாந்தத்தில் இவ்வளவு உக்ரம் கொண்ட ஸூர்யதேவன் மற்றைய காலங்களில் அனுக்ரக ரூபியாக இருக்கிறார். உலகங்கள் எரிந்து போய்விடாமல் இருக்கவேண்டுமே என்று அஞ்சி, தனது (இயல்பான) தீவிரத்தை மிகவும் சிரமப்பட்டு உள்ளடக்கிக் கொண்டு, ஜனங்கள் சிரமமில்லாமல் கண்ணால் பார்க்கும் அளவுக்கு தனது காந்தியைச் சுருக்கிக் கொள்கிறார். இப்படிப்பட்ட ஸூர்யதேவனின் திருமண்டலம் உங்களுக்கு சந்தோஷத்தை அருளட்டும்!

**79. விண்ணில் பூத்த தாமரை மலரோ, இந்த ஸூர்யவட்டம்!**

उद्यद्द्यूद्यानवाप्यां बहुलतमतमः पङ्कपूरं विदार्य
प्रोद्भिन्नं पत्रपार्श्वेष्वविरल-मरुणच्छायया विस्फुरन्त्या ।
कल्याणानि क्रियाद्वः कमलमिव महन्मण्डलं चण्डभानो-
रन्वीतं तृप्तिहेतोरसकृदलिकुलाकारिणा राहुणा यत् ॥ ७९ ॥

உத்[3]யத்[3]த்[3]யூத்[3]யானவாப்யாம் ப[3]ஹுல
தமதம: பங்கபூரம் விதா[3]ர்ய,
ப்ரோத்[3] பி[4]ந்நம் பத்ர பார்ஸ்வேஷ்வவி-
ரலமருண ச்ச[2]ாயயா விஸ்பு[4]ரந்த்யா ।
கல்யாணாநி க்ரியாத்[3] வ: கமலமிவ
மஹன்மண்டலம் சண்ட ப[4]ாநோ:,
அன்வீதம் த்ருப்தி ஹேதோ ரஸக்ருத்
அலிகுலாகாரிணா ராஹுணா யத் ॥ 79 ॥

தாமரை மலர் பூங்காவின் பொய்கையில் பூக்கிறது. சேற்றுப் படலத்தைப் பிளந்து கொண்டு, அதன் தண்டு மேலே கிளம்பி நீர் பரப்புக்கு வருகிறது. அதன் பக்கங்களில் தாமரை இலைகள் பரவி இருக்கின்றன. பூவின் மத்தியில் கருவண்டுகள் மொய்த்திருக்கின்றன. இத்தனை தன்மைகளையும் தானும் உடைத்து, விண்ணில் மலரும் தாமரையாக ஸூர்ய மண்டலம் திகழ்கிறது. இதற்கு எது பூங்காவனப் பொய்கை? அது விண் மண்டலம்தான். அதன் சேற்றுப்படலம் எது? அது இருள் திரள்கள் தான். அதன் செம்மை நிறம் எது? அது அருணனின் ஒளிதான். அதன் மீது மொய்த்திருக்கும் கருவண்டு எது? அது ராஹுக்ரஹம் தான்.

இப்படிப்பட்ட வினோதமான ஆகாயத்தாமரை (ஸூர்ய மண்டலம்) உங்களுக்கு மங்களங்களை விளைவிக்கட்டும்!

## 80. இயல்புக்கு மாறான குணவிசேஷங்களைக் கொண்ட ஒளிவட்டம்!

चक्षुर्दक्षद्विषो यन्न तु दहति पुरः पूरयत्येव कामं
नास्तं जुष्टं मरुद्भिर्यदिह नियमिनां यानपात्रं भवाब्धौ ।
यद्वीतश्रान्ति शश्वद्भ्रमदपि जगतां भ्रान्तिमभ्रान्ति हन्ति
ब्रध्नस्याव्याद्विरुद्ध-क्रियमथ च हिताधायि तन्मण्डलं वः ॥

८० ॥

சக்ஷுர்த³க்ஷத்³விஷோ யந்நது த³ஹதி புர:
பூரயத்யேவ காமம்,
நாஸ்தம் ஜுஷ்டம் மருத்³பி⁴ர்யதி³ஹ
நியமினாம் யான பாத்ரம் ப⁴வாப்³ தௌ⁴ ।

யத்[3]வீத ப்ஶ்ராந்தி ஶஶ்வத்[3] ப்[4]ரமத[3]பி ஜக[3]தாம்
ப்[4]ராந்திம ப்[4]ராந்தி ஹந்தி,
ப்ரத்[4]நஸ்யா வ்யாத் விருத்[3]த[4] க்ரியமத[2] ச
ஹிதாத[4]ாயி தன் மண்டலம் வ: ॥ 80 ॥

ஸூர்யதேவன் (அக்னி ரூபத்தில்) தக்ஷப்ரஜாபதியைக் கொன்ற பரமசிவனின் கண்ணாக இருக்கிறார். பரமசிவன் அந்த நெற்றிக் கண்ணினால் காமனை (மன்மதனை) எரித்தார். ஆனால், ஸூர்யனின் அம்சமாக இருக்கும் அதே கண் (ஸூர்ய மண்டலம்) மக்களின் காமங்களை (விருப்பங்களை) பூர்த்தி செய்கிறது. பெரும் காற்று (மருத்) வீசினால் எல்லாம் இல்லாமல் அழிந்து போய்விடும். ஆனால் இந்த ஸூர்யமண்டலத்துக்கு மருத் கணங்கள் (வாயுக்கள்) எந்த அழிவையும் ஏற்படுத்த முடியாது. ஸம்ஸாரம் என்ற கடலை ஜீவர்களால் கடக்க முடியாது. ஆனால் இந்திரியங்களை அடக்கிய யோகியர்களுக்கு அந்தக் கடலைக் கடக்கும் சாதனமாக, படகாக இது இருக்கிறது. எப்பொழுதும் சுற்றிக்கொண்டிருப்போருக்கு (பயணம் செய்துகொண்டே இருப்போருக்கு) களைப்பு ஏற்படும். ஆனால் எப்பொழுதும் உலகங்களைச் சுற்றிக் கொண்டு பயணம் செய்து கொண்டே இருக்கும் ஸூர்யனுக்கு களைப்பு என்பதே கிடையாது. ப்ராந்தி என்ற அஜ்ஞானத்தை அப்ராந்தியாக (ப்ராந்தி இல்லாததாக) செய்யும் சக்தி இந்த ஸூர்யதேவனுக்கு உண்டு. இவ்வாறெல்லாம் இயல்புக்கு விரோதமான குண விசேஷங்களைக் கொண்ட ஸூர்யதேவனின் தேஜோ மண்டலம் உங்களை ரக்ஷிக்கட்டும்!

இத்துடன் ஸூர்ய மண்டல வர்ணனைகள் நிறைவு பெறுகிறது.

## VI. ஸூர்யபகவானின் நேரிடை வர்ணனை (81-100)

**81. பல்வேறு தேவகணங்களால் பல்வேறுவிதமாக ஆராதிக்கப்பட்ட ஸ்ரீ ஸூர்ய பகவான்!**

सिद्धैः सिद्धान्तमिश्रं श्रितविधि विबुधैश्चारणैश्चाटुगर्भ
गीत्या गन्धर्वमुख्यैर्मुहुरहिपतिभिर्यातुधानैर्यतात्म ।
सार्थ साध्यैर्मुनीन्द्रैर्मुदिततममनो मोक्षिभिः पक्षपाता-
त्प्रातः प्रारभ्यमाणस्तुतिरवतु रविर्विश्ववन्द्योदयो वः ॥ ८१ ॥

ஸித்3தை4: ஸித்3த4ாந்தமிஶ்ரம் ஶ்ரிதவித4
விபு3தை4 ஶ்சாரணை: சாடுக3ர்ப4ம்,
கீ3த்யா க3ந்த4ர்வ முக்2யை: முஹுரஹிபதிபி4:
யாது த4ானைர்யதாத்ம ।
ஸாத4ம் ஸாத்4யை: முநீந்த்3ரை:
முதி3ததம மனோ மோக்ஷிபி4: பக்ஷபாதாத்,
ப்ராத: ப்ராரப்4ய மாண: ஸ்துதி ரவது
ரவிர் விஶ்வ வந்த்3யோத3 யோ வ: ॥ 81 ॥

இந்த சுலோகம் தொடங்கி 100வது சுலோகம் வரை ஸ்ரீ ஸூர்ய பகவானின் நேரிடை வர்ணனைகள் அமைகின்றன.

ஸ்ரீ ஸூர்ய பகவானை பலவகை தேவயோனிகணங்கள் தங்கள் தங்களுடைய ப்ரத்யேகமான முறையில் ஆராதிக்கிறார்கள். ஸித்தர்கள் என்ற கணத்தைச் சார்ந்தவர்கள் ஸித்தாந்த, வேதாந்த க்ரந்தங்களில் கூறிய முறைப்படி ஆராதிக்கிறார்கள். தேவர்கள் ச்ருதி, ஸ்ம்ருதி விதிமுறைகளின்படி வழிபடுகிறார்கள். சாரணர்கள் அழகான சொற்களால் (கவிதைகளால்) வணங்குகிறார்கள். விச்வாவஸு போன்ற கந்தர்வர்கள் கானம் இசைத்து துதிக்கிறார்கள். நாகச்ரேஷ்டர்கள், யாதுதானர்கள், மனதை

அடக்கிய ஸாத்யர்கள் பூஜாவிதிகளினால் உபசரிக்கிறார்கள். முனீச்வரர்கள் தங்கள் உள்ளத்து தியானங்களினாலும் பகவான் ஆத்மஸ்வரூபமே என்று உணர்ந்த மோக்ஷார்த்திகளாலும் அவர் ஆராதிக்கப்படுகிறார். காலையில் ஸூர்யோதய காலத்தில், அகிலங்களில் இருக்கும் அனைவராலும் ப்ராத: காலத்திலிருந்தே தொடங்கி ஸ்தோத்ரம் செய்யப்படும் ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களை ரக்ஷிக்கட்டும்!

## 82. பொற்கொல்லனைப் போன்று தங்கமலையை பரிசோதிக்கும் ஸூர்யன்!

भासामासन्न-भावादधिकतर-पटोश्चक्रवालस्य तापा-
च्छेदादच्छिन्न-गच्छत्तुरग-खुरपुटन्यास-निःशङ्क-टङ्कैः ।
निःसङ्गस्यन्दनाङ्ग-भ्रमण-निकषणात्पातु वस्त्रिप्रकारं
तप्तांशुस्तत्परीक्षापर इव परितः पर्यटन्हाटकाद्रिम् ॥ ८२ ॥

ப[4]ாஸாமாஸந்ந ப[4]ாவாத[3]தி[4]கதர படோச்
சக்ரவாலஸ்ய தாபாத்,
ச்சே[2]தா[3]த[3]ச் சி[2]ன்ன க[3]ச்ச[2] த்துரக[3]
கு[2]ரபுட் ந்யாஸ நிஶ்ஶங்க டங்கை: ।
நிஸ்ஸங்க[3] ஸ்யந்த[3]னாங்க[3] ப்[4]ரமண
நிகஷணாத் பாது வஸ்த்ரிப்ரகாரம்,
தப்தாம்ஶுஸ்தத்பரீக்ஷாபர இவ
பரித: பர்யடன் ஹாடகாத்[3]ரிம் ॥ 82 ॥

பொற்கொல்லர்கள் தூயதங்கமா என்று பரிசோதிக்க மூன்று விதமாக சோதிப்பார்கள். தீயில் உலையில் தங்கத்தை வைத்து அதை உருக்கி அதன் தூய்மையைப் பரிசோதித்தல் ஒருவகை, தங்கம் என்று சொல்லப்பட்ட பொருளை உளியினால் வெட்டி, துண்டாக்கிப் பார்ப்பது இரண்டாவது வகை. சாணைக்கல் போன்ற உரைகல்லின் மீது உரசிப்பார்ப்பது மூன்றாம் வகை.

ஸ்ரீ ஸூர்ய பகவான் தங்கமலையான மேருபர்வதத்தை மூன்று விதங்களினாலும் பரிசோதிக்கிறாரோ என்று எண்ணும்படி அவருடைய செயல்பாடுகள் அமைகின்றன.

தன்னுடைய ஒளிக்கிரணங்களின் பெரும் சூட்டினால் தங்கமலையின் சில சிகரங்கள் உலையில் வைத்து தீயினால் உருக்கப்படுகிறது. குதிரைகளின் குளம்புகள் உளியைப் போன்று கூர்மையாக இருக்கின்றன. அவைகள் ஓடும்போது, அந்த குளம்புகள் மலையின் பாறைகளை உளியால் வெட்டுவதைப் போல் வெட்டிப்போடுகின்றன. இடையறாது ஓடிக்கொண்டிருக்கும் தேர்ச்சக்கரம் மலைத் தளத்தை கீறிக்கீறி உரைகல்லில் உரசுவதுபோல் செயல்படுகிறது. இவ்விதம் பொன்மலையை சுற்றிச்சுற்றி வலம்வந்து தங்கத்தின் தூய்மையை பரிசோதிக்கிறாரோ என்று எண்ணவைக்கும் ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களை ரக்ஷிக்கட்டும்!

## 83. உக்ரமான உஷ்ணம் கொண்ட ஸூர்யன் மென்மையாகவும் செயல்படுகிறார்.

नो शुष्कं नाकनद्या विकसित-कनकाम्भोजया भ्राजितं तु
प्लुष्टा नैवोपभोग्या भवति भृशतरं नन्दनोद्यान-लक्ष्मीः ।
नो शृङ्गाणि द्रुतानि द्रुतममरगिरेः कालधौतानि धौता-
नीद्धं धाम द्युमार्गे म्रदयति दयया यत्र सोऽर्कोऽवताद्वः ॥ ८३ ॥

நோ ஶுஷ்கம் நாகநத்[3]யா விகஸித
கனகாம்பே[4]ாஜயா ப்[4]ராஜிதம் து,
ப்லுஷ்டா நைவோபபே[4]ாக்[3]யா ப[3]வதி
ப்[4]ருஶதரம் நந்த[3]னோத்[3]யான லக்ஷ்மீ: ।
நோ ஶ்ருங்கா[3]ணி த்[3]ருதானி த்[3]ருதமமரகி[3]ரே:
காலதெ[4]ளதானி தெ[4]ளதா-

னீத்[3]த[4]ம் த[4]ாம த்[3]யுமார்கே[3] மரத[3]யதி த[3]யயா
யத்ர ஸோ(அ)ர்கோ (அ)வதாதத்[3] வ: ॥ 83 ॥

ஸுூர்யதேவன் அவ்வப்பொழுது, கருணையுள்ளம் கொண்டு மென்மையாகவும் செயல்படுகிறார். அதற்கு சில உதாரணங்கள். தேவகங்கை வெப்பத்தினால் வறண்டு, சுண்டிப்போகவில்லை. மாறாக அதில் பூத்திருக்கும் பொன் தாமரைகள் அன்றலர்ந்தபடியே திகழ்கின்றன. தேவர்களின் பூங்காவான நந்தனம் என்ற உத்யானவனம் வாடி, வதங்கிப் போகவில்லை. மாறாக, அதன் சோபை அதிகரித்து, அது மேலும் அதிகமாக உல்லாசப் பூங்காவாக ஆகிவிடுகிறது. தங்கமலையான மேருமலையில் சிகரங்கள் உஷ்ணம் தாங்காமல் உருகிப் போய்விடவில்லை. மாறாக அவைகள் புடம்போட்டு, மெருகு தீட்டினாற்போல் இன்னும் பளபளப்பாக்கப்படுகின்றன. இவ்விதம் ஆகாய வீதியில் ஜொலிக்கும் ஸுூர்யதேவன் மென்மை யுள்ளத்துடனும் செயல்படுகிறார். இப்படிப்பட்ட ஸ்ரீ ஸுூர்ய பகவான் உங்களை பாதுகாத்தருளட்டும்!

**84. ஒவ்வொரு காரியத்திலும் பலப்பல பலன்களை நல்கும் பகவான்.**

ध्वान्तस्यैवान्तहेतुर्न भवति मलिनैकात्मनः पाप्मनोऽपि
प्राक्पादोपान्तभाजां जनयति न परं पङ्कजानां प्रबोधम् ।
कर्ता निःश्रेयसानामपि न तु खलु यः केवलं वासराणां
सोऽव्यादेकोद्यमेच्छा-विहित-बहुबृह-द्विश्वकार्योऽर्यमा वः
॥ ८४ ॥

த்[4]வாந்த ஸ்யைவாந்த ஹேதுர் நப[4]வதி
மலிநைகாத்மன: பாப்மனோ(அ)பி,
ப்ராக் பாதோ[3] பாந்த ப[4]ாஜாம் ஜநயதி
ந பரம் பங்கஜானாம் ப்ரபோ[3]த[4]ம்।

கர்தா நி: ஶ்ரேய ஸானாமபி நது க²லு ய:
கேவலம் வாஸராணாம்,
ஸோ(அ)வ்யாதே³ கோத்³யமேச்ச²ா விஹித
ப³ஹுப்³ருஹத்³ விஶ்வகார்யோ (அ)ர்யமா வ: ॥ 84॥

ஸூர்ய பகவான் இருளை மட்டும் போக்கடிப்பவர் என்பதில்லை; அவர் தாழ்மையான உள்ளங்களைக் கொண்ட பாவிகளின் பாபங்களை அழிப்பவர் ஆவார். கீழ்த்திசை மலையடிவாரங்களில் இருக்கும் தாமரை மலர்களுக்கு மட்டும் மலர்ச்சியை (ப்ரபோதம்) செய்பவர் என்பதில்லை; தன் திருப்பாதங்களை அண்டின மோக்ஷார்த்திகளுக்கும் ஞான போதத்தை (ப்ரபோதம்) அளிக்கிறார்; அவர் வர்ஷங்களை மாத்திரம் தோற்றுவிப்பவர் என்பதில்லை; உத்க்ருஷ்டமான க்ஷேமங்களையும் அளிப்பவர். இவ்வாறு ஒவ்வொரு செயலிலும், பலப்பல பலன்களை அளித்து, மிகமிகப்பெரிய உலகியல் காரியங்களையும் சாதிக்கிறார். அப்படிப்பட்ட ஸூர்ய பகவான் உங்களை பரிபாலிக்கட்டும்!

## 85. ஸூர்யன் இல்லையேல் உயிரினங்களும் இல்லை!

लोटँल्लोष्टाविचेष्टः श्रितशयनतलो निःसहीभूतदेहः
संदेही प्राणितव्ये सपदि दश दिशः प्रेक्षमाणोऽन्धकाराः ।
निःश्वासायासनिष्ठः परमपरवशो जायते जीवलोकः
शोकेनेवान्यलोकानुदयकृति गते यत्र सोऽर्कोऽवताद्वः ॥८५॥

லோடன்லோஷ்டா விசேஷ்ட: ஶ்ரித
ஶயனதல: நி: ஸஹீபூ⁴த தே³ஹ:,
ஸந்தே³ஹீ ப்ராணிதவ்யே ஸபதி³
த³ஶதி³ஶ: ப்ரேக்ஷமாணோ(அ)ந்தகாரா: ।

நி: ய்வாஸாயாஸ நிஷ்ட[2]: பரம பரவஶ:

ஜாயதே ஜீவலோக:,

ஶோகேனே வான்யலோகா நுத[3]யக்ருதி

க[3]தே யத்ர ஸோ(அ)ர்கோ(அ)வதாத்[3] வ: ॥ 85 ॥

ஸூர்யதேவன் இந்த உலகில் உதயமாகாமல், வேறு ஏதோ உலகத்துக்குச் சென்றுவிட்டால் அப்பொழுது உயிரினங்கள் படும்பாடு எப்படி இருக்கும்? மண்ணாங்கட்டியைப் போன்று ஆகிவிடும். படுக்கையில் விழுந்து கிடந்து இப்புறம், அப்புறம் என்று புரண்டுகொண்டிருக்கும் உடல் உறுப்புகள் செயலற்று, மறத்துப்போய்விட்டிருக்கும். அப்பொழுது (கஷ்டங்கள் தாள முடியாத) இந்த வாழ்க்கை வாழ்வதில் என்ன பயன் என்ற சந்தேகமே ஏற்பட்டுவிடும். சுற்றுமுற்றும் அந்த ஜீவன் மிரள மிரள விழித்துப் பார்ப்பான்; ஆனால் எங்கும் இருட்டு இருட்டு என்பதைத்தான் காண்பான். பெருமூச்சுவிட்டுக் கொண்டு, களைப்பு மேலிட்டவனாய் இருப்பான். தன்வசத்தை இழந்து அல்லல்படுவான். இவ்விதம் உயிர்வாழும் அகில ஜீவலோகமும் துயரத்தில் உழன்றுகொண்டிருக்கும். இவ்விதம் தனது இன்றியமையாமையை உயிரினங்கள் அனைத்தும் உணரும்படி செய்யக்கூடிய தன்மை வாய்ந்த அருக்கக்கடவுள் உங்களை ரக்ஷிக்கட்டும்!

**86. தன் உருவத்திலும் செயலிலும் மாறுதல்கள் கொண்டவராயினும் லோகோபகாரம் செய்வதில் உறுதி கொண்டவர்.**

क्रामँल्लोलोऽपि लोकाँस्तदुपकृति-कृतावाश्रित: स्थैर्यकोटिं

नृणां दृष्टिं विजिह्मां विदधदपि करोत्यन्तरत्यन्तभद्राम् ।

यस्तापस्यापि हेतुर्भवति नियमिनामेकनिर्वाणदायी

भूयात्स प्रागवस्थाधिकतर-परिणामोदयोऽर्क: श्रिये व: ॥ ८६ ॥

க்ராமன் லோலோ (அ)பி லோகான்

தது$^{3}$பக்ருதி க்ருதா வாஸ்ரித: ஸ்தை$^{2}$ர்ய கோடிம்,

ந்ருணாம் த்$^{3}$ருஷ்டிம் விஜிஹ்மாம்

வித$^{3}$த$^{4}$பி கரோத்யந்த நத்யந்த ப$^{4}$த்$^{3}$ராம் ।

யஸ்தாபஸ்யாபி ஹேதுர்ப$^{4}$வதி

நியமினாமேக நிர்வாணதா$^{3}$யீ ,

பூ$^{4}$யாத்ஸ ப்ராக$^{3}$வஸ்த$^{2}$ாதி$^{4}$ கதர-

பரிணாமோத$^{3}$யோ (அ)ர்க: ஸ்ரியே வ: ॥ 86 ॥

ஸூர்யதேவன் உதயகாலத்தில் ஒருவகையாகவும் (சிவப்பு மண்டலம், இதமான வெயில்) மேலும் வளர வளர (மத்யாஹ்னத்தில் கண்ணைக்கூசும் தேஜஸ், தீவிர உஷ்ணம்), உக்ரமாகவும், ஸாயங்காலத்தில் உஷ்ணம் அடங்கி, (சிவப்பு மண்டலமாகவும்) பல பரிணாமங்களை மேற்கொள்கிறார். மேலும், ஓய்வு எதுவுமின்றி ஸஞ்சலமாக (ஸ்திரம் இல்லாமல், எப்பொழுதும் ஓடிக்கொண்டே) இருந்தாலும் தன் மனதில் எந்த ஸஞ்சலமும் இல்லாதவர். அதாவது லோகோபகாரத்தில் உறுதி கொண்டவர். உலகங்கள் யாவற்றிலும் கடந்து சென்று கொண்டிருந்தாலும் உலக க்ஷேமத்திற்காக, அவருடைய உள்ளம் உறுதிப்பாட்டின் எல்லையைத் தொட்டதாக இருக்கும். மனிதர்களுக்கு கண்ணைக்கூசும் சுடருடன் ஒளித்துக் கொண்டிருந்தாலும், உள்ளத்தில் உத்தமமான கல்யாண குணங்களை ஏற்படுத்துகிறார். அவர் இயல்பு தாபத்தை (உஷ்ணத்தை) உண்டுபண்ணும் காரணமாக இருந்தாலும், யோகியர்களுக்கு, (மூன்று விதமான) தாபங்கள் இல்லாத பேரானந்தப் பெருவாழ்வை (நிர்வாணம்) அளிக்கிறார். இப்படிப்பட்ட அருக்கக் கடவுள் உங்களுக்கு ஐசுவரியங்கள் கிட்டச் செய்யட்டும்!

**87. ஸ்ரீ ஸூர்ய பகவானின் தயவினால்தான் உலகியல் இயற்கை அத்துமீறாது இருக்கிறது.**

व्यापन्नर्तुर्न कालो व्यभिचरति फलं नौषधीर्वृष्टिरिष्टा
नेष्टैस्तृप्यन्ति देवा नहि वहति मरुन्निर्मलाभानि भानि ।
आशा: शान्ता न भिन्दत्यवधिमुदधयो बिभ्रति क्ष्माभृत: क्ष्मां
यस्मिंस्त्रैलोक्यमेवं न चलति तपति स्तात्स सूर्य: श्रिये व: ॥ ८७ ॥

வ்யாபந் நர்துர் ந காலோ வ்யபி[4]
சரதி ப[4]லம் நௌஷதீ[4]ர் வ்ருஷ்டிரிஷ்டா,
நேஷ்டைஸ்த்ருப்யந்தி
தே[3]வா நஹி வஹதி மருந்நிர்மலாப[4]ாநி ப[4]ாநி ।
ஆஶா: ஶாந்தா ந பி[4]ந்த[3]த்யவதி[4] முத[3]த[4]யோ
பி[3]ப்[4]ரதி க்ஷ்மாப்[4]ருத: க்ஷ்மாம்,
யஸ்மிம்ஸ்த்ரைலோக்ய மேவம் ந
சலதி தபதி ஸ்தாத் ஸ ஸூர்ய: ஶ்ரியே வ: ॥ 87 ॥

ஸ்ரீ ஸூர்ய பகவான் ஒளிப்பதனால்தான் இயற்கையின் பல அம்சங்கள் அத்துமீறாமல் இருக்கின்றன. அதற்கு சில உதாரணங்கள். வஸந்தம் போன்ற ருதுக்கள் காலாகாலத்தில் தோன்றத் தவறுவதில்லை. அந்தந்த காலங்களில் பழங்கள் கனியத் தவறுவதில்லை.. ஓஷதிவர்க்கம் (மரம், செடி, கொடிகள்) வளர்ந்து வரத் தவறுவதில்லை.. விருப்பமான காலங்களில் மாரி பொய்ப்பதில்லை. தேவர்கள் யாக, யஜ்ஞங்களினால் திருப்தி அடையாமல் போவதில்லை. காற்று தன் இயல்பை மீறி வீசிக்கொண்டிருக்காமல் இருப்பதில்லை. ஜ்யோதிர் கணங்கள் (நக்ஷத்திரங்கள்) ப்ரகாசிக்காமல் இருப்ப தில்லை. திசைகள் சாந்தமாக இல்லாமல் இருப்பதில்லை. கடல்கள் தங்கள் கரைகளைக் கடந்து மீறிப் போகாமல் இருக்கின்றன. மலைகள்

பூமண்டலத்தை தாங்காமல் போவதில்லை. மூன்று உலகங்களும் இயங்காமல் போவதில்லை. இவ்விதம் இயற்கை தன் இயல்புகளை அத்துமீறாமல் வழக்கம் போல் இயங்குவதற்கு ஸூர்ய பகவானே காரணம். இப்படிப்பட்ட ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களுக்கு ஸகல ஐசுவர்யங்களையும் நல்கட்டும்!

## 88. முப்பெரும் கடவுளர்களுக்கு ஓய்வு கொடுக்கும் பரமன்!

कैलासे कृत्तिवासा विहरति विरह-त्रास-देहोढकान्त:
श्रान्त: शेते महाहावधि-जलधि विना छद्मना पद्मनाभ: ॥
योगोद्योगैकतानो गमयति सकलं वासरं स्वं स्वयंभू-
र्भूरित्रैलोक्यचिन्ताभृति भुवनविभौ यत्र भास्वान्स वोऽव्यात्
॥ ८८ ॥

கைலாஸே க்ருத்திவாஸா விஹரதி
விரஹ த்ராஸ தே[3]ஹோட[4]காந்த:,
ஶ்ராந்த: ஶேதே மஹா ஹாவதி[4]
ஜலதி[4] விநா ச[2]த்[3]மனா பத்[3]மநாப: ।
யோகோ[3]த்[3]யோகை[3]கதானோ க[3]மயதி
ஸகலம் வாஸரம் ஸ்வம் ஸ்வயம் பூ[4]:,
பூ[4]ரி த்ரைலோக்ய சிந்தா ப்[4]ருதி பு[4]வன
விபெ[4]ள யத்ர ப[4]ாஸ்வான் ஸ வோ (அ)வ்யாத் ॥ 88 ॥

ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் ஆகிய த்ரிமூர்த்திகளின் ஸ்வரூபமாக ஸ்ரீ ஸூர்ய பகவான் திகழ்கிறார் என்று வேதங்களும், புராணங்களும் பறைசாற்றுகின்றன. இக்கருத்தை சிறிது மாற்றியமைத்து, இந்த முப்பெரும் கடவுளர்களின், ஸ்ருஷ்டி - ஸ்திதி - ஸம்ஹார காரியங்களை தாமே மேற்கொண்டு ஸ்ரீ ஸூர்ய பகவான் அவர்களுக்கு ஓய்வளிக்கிறார் என்று கவி சமத்காரமாக

விவரிக்கிறார். அவர்கள் ஓய்வை அனுபவிக்கும் விதம் எப்படி? கைலாச பர்வதத்தில் பரமசிவன் தனது அன்பு மனைவியை விட்டுப்பிரிய மனமில்லாததால் அவளை தனது சரீரத்திலேயே வைத்துக் கொண்டு (அர்த்தநாரீச்வரர் உருவத்தில்) இஷ்ட ப்ரகாரம் பொழுதைப் போக்குகிறார். மஹாவிஷ்ணு எந்த கவலையும் இல்லாமல் பாற்கடலில் தனது அரவுப்படுக்கையில் படுத்து களைப்பாறுகிறார். ப்ரஹ்மதேவன் யோகம், த்யானம் இவற்றில் ஆழ்ந்து நாளைப் போக்குகிறார். மூன்று உலகங்களையும் காப்பதிலேயே தனது மனதைச் செலுத்தி, அகிலங்களுக்கு அதிபதியான ஸ்ரீ ஸூர்ய பகவான் முத்தொழிலை தாமே ஏற்று பராமரிக்கிறார். இப்படிப்பட்ட புவனபதி ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களை ரக்ஷிக்கட்டும்.

**89. மூன்று வேதங்களின் ஸ்வரூபமே ஸ்ரீ ஸூர்ய பகவான்.**

एतद्यन्मण्डलं खे तपति दिनकृतस्ता ऋचोऽर्चींषि यानि
द्योतन्ते तानि सामान्ययमपि पुरुषो मण्डलेऽणुर्यजूंषि ।
एवं यं वेद वेदत्रितयमयमयं वेदवेदी समग्रो
वर्गः स्वर्गापवर्गप्रकृतिरविकृतिः सोऽस्तु सूर्यः श्रिये वः ॥ ८९ ॥

ஏதத்³யன் மண்டலம் தபதி தி³னக்ருத:
தா ருசோ (அ)ர்சீம்ஷி யானி,
த்³யோதந்தே தானி ஸாமான்யயமபி
புருஷோ மண்டலே (அ)ணுர் யஜூம்ஷி ।
ஏவம் யம் வேத வேத³த்ரிதய
மயம் வேத³ வேதீ³ ஸமக்ரோ,
வர்³க: ஸ்வர்கா³பவர்க³ ப்ரக்ருதி-
ரவிக்ருதி: ஸோ (அ)ஸ்து ஸூர்ய: ஶ்ரியே வ: ॥ 89 ॥

இதோ, நாம் காணும் தினபதியின் மண்டலம் பிரகாசித்து இருக்கிறதே, அது ருக்வேத ஸ்வரூபம். அவருடைய கிரணங்கள் ஒளிவீசிக் கொண்டிருக்கின்றனவே, அவைகள் அனைத்தும் ஸாமவேத ஸ்வரூபம். ஸூர்ய மண்டலத்தின் மத்தியில் அணுவாகத் திகழும் (பரம) புருஷன் யஜூர் வேத ஸ்வரூபம். வேதங்களைக் கற்றறிந்து அனைத்து வர்க்கத்தினர்களும், இந்த மூன்று வேதங்களின் ஸ்வரூபமான இந்த ஸூர்ய பகவானின் அம்சபூதர்களே. அவருக்கு (ஜீவர்களுக்கு இருப்பதுபோல்) எந்த மாற்றங்களும் இல்லை. அவரே ஸ்வர்க்கத்தையும், மோக்ஷத்தையும் அருள்பவர். இப்படிப்பட்ட ஸ்ரீ ஸூர்ய பகவான் ஸகல ஐசுவர்யங்களும் உங்களுக்கு கிடைக்க அருள்பவராக இருக்கட்டும்!

**விசேஷக் குறிப்பு**

மேலே கூறிய கருத்துக்கு தைத்திரீய ஆரண்யகம், மற்றும் எல்லா வேதங்களில் காணப்படும் பல மந்த்ரங்களே பிரமாணமாகும்.

**விசேஷ பலச்ருதி**

வேத புருஷனின் அனுக்ரஹம் சித்திக்கும். ஐசுவர்யங்கள் அனைத்தும் பெறப்படும்.

## 90. "ஆதித்யன்" என்ற சொல்லுக்கு ஏகபோக அதிகாரி ஸ்ரீ ஸூர்ய பகவான் மட்டுமே.

नाकौक:-प्रत्यनीक-क्षति-पटुमहसां वासवाग्रेसराणां
सर्वेषां साधु पातां जगदिदमदितेरात्मजत्वे समेऽपि ।
येनादित्याभिधानं निरतिशयगुणैरात्मनि न्यस्तमस्तु
स्तुत्यस्त्रैलोक्यवन्द्यैस्त्रिदशमुनिगणै: सोंऽशुमान् श्रेयसे व: ॥
९० ॥

நாகௌக: ப்ரத்யநீக க்ஷதிபடு மஹஸாம்
வாஸவாக்[3]ரேஸராணாம்,
ஸர்வேஷாம் ஸாது[4] பாதாம் ஜக[3]தி[3]த[3]மதி[3]தேராத்ம-
ஜத்வே ஸமே(அ)பி ।
யேநாதி[3]த்யாபி[4]த[4]ானம்
நிரதிஶயகு[3]ணைராத்மநி ந்யஸ்தமஸ்து,
ஸ்துத்யஸ்த்ரைலோக்ய வந்த்[3]யை:
த்ரித[3]சமுனிக[3]ணை: ஸோம்(அ)ஶுமான்
ஶ்ரேயஸே வ: ॥ 90 ॥

தேவர்கள் தங்கள் விரோதிகளான அசுரர்களை அழிக்கக் கூடிய வல்லமை பொருந்தியவர்கள். தங்கள் தலைவனான தேவேந்திரனை முன்னிட்டுக் கொண்டு எல்லா உலகங்களையும் செவ்வனே பரிபாலிக்கிறார்கள். இவர்கள் அனைவரும் அதிதி தேவியின் புதல்வர்கள். ஆகையால், இலக்கண ரீதியாக, இவர்கள் ''ஆதித்யர்கள்'' என்று அழைக்கப்படத் தகுதி படைத்தவர்கள். ஆனால் வேதங்களும், புராணங்களும் ''ஆதித்யன்'' என்ற சொல்லை இவர்களுக்கு வழங்கவில்லை. ''ஆதித்யன்'' என்ற சொல், அதிதியின் மகன் என்ற பொதுவான பொருளைக் கொண்டிருந்தாலும், அந்த சொல் ஸூர்ய பகவான் ஒருவரை மட்டுமே குறிப்பிடும். அதாவது, அந்த பெயருக்கு ஏகபோக உரிமை ஸூர்ய பகவான் ஒருவருக்கே உண்டு. (இவ்விதப் பெயர்களை ''ரூடி'' சப்தம் என்று கூறுவார்கள். உதாரணமாக, ''புருஷோத்தமன்'' என்ற சொல் விஷ்ணுவை மட்டிலும், மற்றும் ''ஈச்வரன்'' என்ற சொல் பரமசிவனை மட்டிலும் ''ரூடி''யாகக் குறிக்கின்றன என்று மஹாகவி காளிதாஸன் கூறுவான்.) அந்த ''ஆதித்யன்'' இணையில்லாத குணவிசேஷங்களைக் கொண்டவர். மூன்று உலகத்தார்களும் வணங்கும் யோகியர்கள், ரிஷிகள், ஞானியர்கள் மற்றும் தேவர்கள், முனிவர்கள் ஆகிய

யாவராலும் ஸ்தோத்ரம் செய்யப்பட்டவர். அப்படிப்பட்ட கதிரவக் கடவுள் உங்களுடைய ஐசுவர்யங்களுக்கு காரணகர்த்தாவாக இருக்கட்டும்!

## 91. பரமசிவனைப் போல் ஸ்ரீ ஸூர்ய பகவானும் "அஷ்டமூர்த்தி"

भूमिं धाम्नोऽभिवृष्ट्या जगति जलमयीं पावनीं संस्मृताव-
प्याग्नेयीं दाहशक्त्या मुहुरपि यजमानां यथाप्रार्थितार्थैः ।
लीनामाकाश एवामृतकरघटितां ध्वान्तपक्षस्य पर्व-
ण्येवं सूर्योऽष्टभेदां भव इव भवतः पातु बिभ्रत्स्वमूर्तिम् ॥ ९१ ॥

பூ⁴மிம் த⁴ாம்னோ(அ) ⁴பி வ்ருஷ்ட்யா
ஜக³தி ஜலமயீம் பாவனீம் ஸம்ஸ்ம்ருதாவ-
ப்யாக்³நேயீம் தா³ஹஶக்த்யா
முஹுரபி யஜமானாம் யத²ாப்ரார்தி²தார்தை²: ।
லீனாமாகாஶ ஏவாம்ருதகரக⁴டிதாம்
த்⁴வாந்த பக்ஷஸ்ய பர்வண்-
யேவம் ஸூர்யோ (அ)ஷ்டபே³தா³ம் ப²வ
இவ ப⁴வத: பாது பி³ப்⁴ரத் ஸ்வ மூர்திம் ॥ 91 ॥

பரமசிவனுக்கு "அஷ்டமூர்த்தி" என்ற ப்ரசித்தமான பெயர் உண்டு. ஏனெனில், அவர் பூமி, அக்னி, காற்று, ஜலம், ஆகாசம் என்ற பஞ்சபூதங்களோடு, ஸூர்யன், சந்திரன், யஜமானன் என்ற மூவர்களுடன் சேர்ந்து எட்டு அம்சங்களைக் கொண்ட திருவுருவைக் கொண்டவராக இருக்கிறார். அவரைப் போன்றே, ஸ்ரீ ஸூர்ய பகவானும் தன்னிடத்தில் இந்த எட்டு அம்சங்களையும் கொண்டிருக்கிறார் என்று மயூரகவி இந்த சுலோகத்தில் சாதிக்கிறார். தனது உஷ்ணத்தின் காரணமாக உலகத்தில் மழை

பெய்ய காரணபூதராய் இருப்பதால் ஜல தத்துவம் படைத்திருக்கிறார். நினைத்த மாத்திரத்திலேயே பரிசுத்தம் செய்யக் கூடிய சக்தியைப் படைத்திருப்பதால் (பாவனீ), அவர் ''பாவனன்'' என்ற வாயுவின் தத்துவத்தை உள்ளடக்கியிருக்கிறார். எரிக்கும் சக்தி கொண்டிருப்பதால் அக்னி தத்துவம் அவரிடம் அடங்கியிருக்கிறது. அடிக்கடி பக்தர்கள் வேண்டிய விருப்பங்களைப் பிரார்த்தித்துப் பெறுவதால் யஜமானன் என்ற தத்துவம் அவரிடம் குடிகொண்டிருக்கிறது. ஆகாசத்திலேயே ஒன்றியிருப்பதால் ஆகாச தத்துவம் அவரிடம் இருக்கிறது. க்ருஷ்ணபக்ஷத்தின் ஈற்றில், அதாவது அமாவாசையன்று சந்திரனுடன் கூடியிருப்பதால், ஸூர்யன், சந்திரன் என்ற இரண்டு தத்துவங்களும் அடக்கமாய் உள்ளன. இவ்விதம் எட்டு தத்துவங்களும் ஸூர்ய பகவானிடம் உள்ளடங்கியிருப்ப தால், அவரும் பரமசிவனுக்கு ஒப்பான ''அஷ்டமூர்த்தி'' யாவார். இப்படிப்பட்ட ஸூர்ய பகவான் உங்களை பரிபாலிக்கட்டும்.

**92. இன்னொரு ''விஷ்ணுமூர்த்தியாக'' ஸ்ரீ ஸூர்ய பகவான்!**

प्राक्कालोन्निद्र-पद्माकर-परिमलनाविर्भवत्पादशोभो

भक्त्या त्यक्तोरुखेदोद्गति दिवि विनतासूनुना नीयमानः ।

सप्ताश्वाप्तापरान्तान्यधिकमधरयन्यो जगन्ति स्तुतोऽलं

देवैर्देवः स पायादपर इव मुरारातिरह्नां पतिर्वः ॥ ९२ ॥

ப்ராக்காலோ ந்நித்[3]ர பத்[3]மாகர-

பரிமலனாவிர் ப[4]வத்பா[3]தஶோ பே[4]ா,

ப[4]க்த்யா த்யக்தோருகே[2] தோ[3]த்[3]கதி

தி[3]வி வினதா ஸூநுநா நீயமான: ।

ஸப்தாஸ்வாப்தாபராந்தான்யதி $^{4}$க-

மத$^{4}$ரயன்யோ ஜக$^{3}$ந்தி ஸ்துதோ(அ)லம்,

தே$^{3}$வைர்தே$^{3}$ வ: ஸபாயாத$^{3}$பர

இவ முராராதிர ஹ்னாம் பதிர் வ: ॥ 92 ॥

இந்த சுலோகத்தில் சிலேடை அணியைக் கைக்கொண்டு கவி, ஸூர்ய பகவான் இன்னொரு விஷ்ணுமூர்த்தியாகத் திகழ்கிறார் என்று சாதிக்கிறார். இருவருக்கும் பொருந்துமாறு மூல ச்லோகத்தின் வார்த்தைகள் (சொல் பிரயோகம்) அமைக்கப் பட்டிருக்கின்றன. ஆனால், விளக்கவுரையில் பொருள் விஷ்ணுவுக்குத் தனியாகவும் ஸூர்யனுக்குத் தனியாகவும் வேறுபட்டிருக்கும்.

விடியற்காலையிலே எழுந்து மஹாலக்ஷ்மீ, பரிமளம், நிறைந்த தனது கைகளினால் மஹாவிஷ்ணுவின் பாதங்களைப் பிடித்து விடுவதால் அவைகள் சோபையுடன் திகழ்கின்றன. ஸூர்யதேவன் விடியற்காலையில் உதயமாகி, பரிமளம் கொண்ட தாமரைப் பொய்கைகளை மலரச்செய்து, அதில் பிரதிபலிக்கும் கிரணங்கள் சோபையை அடைகின்றன.

மஹாவிஷ்ணுவைத் தாங்கி வினதாஸுதனான கருடதேவன் பெரிய சிரமம் ஏதுமின்றி உயரக்கிளம்பி, பரமபக்தியுடன் ஆகாயத்தில் அவரை அழைத்துச் செல்கிறான். அதே விதம் ஸூர்ய பகவானை இன்னொரு வினதாஸுதனான அருணதேவன் தொடைகள் இல்லாதவனாயினும் மேலே ரதத்தைச் செலுத்தி, ஸூர்ய பகவானை விண்ணில் அழைத்துச் செல்கிறான்.

மஹாவிஷ்ணு ஏழு உலகங்களையும் தாண்டி (திரிவிக்ரம அவதாரத்தில்) அவைகளைத் தனக்குக் கீழே இருக்கும்படி செய்த நிலையில் தேவர்களால் வெகுவாக பாராட்டப்பட்டார். (ஸூர்யதேவன் வானத்தின் உச்சியில் இருக்கும்போது) ஏழு உலகங்களையும் தனக்குக் கீழே இருக்கும்படிச் செய்கிறார்.

மேலும் ஏழு குதிரைகளைக் கொண்ட ரதத்தினால் மேற்கு திக்கை (அஸ்தமன காலத்தில்) அடைகிறார். அப்பொழுது தேவர்கள் பகவானை வெகுவாக ஸ்தோத்ரம் செய்கிறார்கள்.

இவ்வாறு இவர் இன்னொரு மஹாவிஷ்ணுவோ என்று எண்ணும்படி இருக்கும் ஸூர்யதேவன், பகலவன், உங்களை ரக்ஷிக்கட்டும்!

**93. இரண்டாவது ப்ரஹ்மதேவனோ என்று எண்ண வைக்கும் ஸூர்யன்.**

यः स्रष्टाऽपां पुरस्ता-दचलवर-समभ्युन्नतेर्हेतुरेको
लोकानां यस्त्रयाणां स्थित उपरि परं दुर्विलङ्घ्येन धाम्ना ।
सद्यः सिद्ध्यै प्रसन्नद्युतिशुभचतुराशामुखः स्ताद्विभक्तो
द्वेधा वेधा इवाविष्कृतकमलरुचिः सोऽर्चिषामाकरो वः ॥ ९३ ॥

ய: ஸ்ரஷ்டா (அ)பாம் புரஸ்தாத் அசல-
வர ஸமப்[4]யுன்னதேர் ஹேதுரேக:,
லோகானாம் ய: த்ரயாணாம் ஸ்தி[2]த
உபரி பரம் து[3]ர்விலங்க்[4]யேன த[4]ாம்னா।
ஸத்[3]ய: ஸித்[3]த்[4] யை ப்ரஸந்நத்[3]யுதி
ஶுப[4] சதுராஶாமுக[2]: ஸ்தாத்விப[4]க்தோ,
த்[3]வே த[4]ா வேத[4]ா இவாவிஷ்க்ருத-
கமலருசி: ஸோ(அ)ர்சிஷாமாகரோ வ: ॥ 93 ॥

முந்தைய சுலோகத்தைப் போல சிலேடை என்ற சப்த ஜாலத்தை பிரயோகம் செய்து கவி ஸூர்யதேவன் இரண்டாவது ப்ரஹ்மதேவனாக இருக்கிறாரோ என்று எண்ணவைக்கிறார். ப்ரஹ்மதேவனுக்கும், ஸூர்ய தேவனுக்கும் பொருந்தும்படி சொற்கட்டு அமைந்திருக்கிறது. ப்ரஹ்மதேவன் முதலில் நீரை ஸ்ருஷ்டித்தார். ஸூர்யதேவனும் நீரின் உற்பத்திக்கு (மழைக்குக்

காரணமாக இருப்பதால்) அதன் ஸ்ருஷ்டி கர்த்தாவாக இருக்கிறார். ப்ரஹ்மதேவன் மேருபர்வதத்தின் மீது எழுந்தருளியிருப்பதால், குலபர்வதங்களுக்குள் அது உன்னத ஸ்தானம் பெற்றது. அதே விதம் ஸூர்யதேவன் உதயாசல பர்வதத்தில் உதயமாவதால் அதற்கு குல பர்வதங்களுக்குள் ஒரு உன்னத ஸ்தானம் கிடைத்தது. ப்ரஹ்ம தேவன் ஸத்யலோகத்தில் மூன்று உலகங்களுக்கும் மேலே உயரமான ஸ்தானத்தில் வீற்றிருக்கிறார். ஸூர்யதேவனும் மூன்று உலகங்களுக்கும் மேலாக விண்ணில் இருக்கிறார். ப்ரஹ்மதேவன் அடங்கவொண்ணாத தேஜஸ்ஸுடன் இருக்கிறார். ஸூர்யதேவனும் அப்படியே. ப்ரஹ்மதேவன் சீக்கிரமாகவே ஸித்தி அளிக்கிறார். அப்பொழுது, நான்கு திக்குகளையும் நோக்கியுள்ள நான்கு திருமுகங்களும் ப்ரஸன்னமாக ஒளிபொருந்தியிருக்கும். அதே விதம் ஸூர்யதேவனும் சீக்கிரமாக ஸித்தியை அளிப்பதுடன், அவருடைய கிரணங்கள் எட்டு திக்குகளுக்கும் பரவி, அவருடைய திருமுகமும் ப்ரஸன்னமான ஜ்யோதி ஸ்வரூபமாக இருக்கும்.

ப்ரஹ்மதேவன் தன்னை இரண்டாக (ஸ்வாயம்புவமனு, சதரூபா என்ற தம்பதிகளாக) பிரித்துக் கொண்டார் என்று புராணங்கள் கூறும். அவ்விதமே ஸ்ரீ ஸூர்ய பகவானும் தன்னை இரண்டாகப் பிரித்துக் கொண்டு, ஒன்று ப்ரஹ்மதேவனாகவும், இன்னொன்று தனது சுயரூபமான ஸூர்யதேவனாகவும் பிரித்துக்கொண்டாரோ, என்னவோ!

ப்ரஹ்மதேவன் தாமரை மீது அமர்ந்து அதற்கு ஒளியூட்டுகிறார். ஸூர்யதேவன் தாமரையை மலரச் செய்து அதற்கு சோபையை ஏற்படுத்துகிறார்.

ஒளிகளுக்கெல்லாம் கருவூலமாக இருக்கும் ஸூர்யதேவன் உங்களுடைய (விருப்பங்களின்) ஸித்திக்காக அருள்புரியட்டும்!

**94. பன்னிரண்டு உருவங்களை ஏற்கும் ஸ்ரீ ஸூர்ய பகவான்!**

सादिर्द्यूर्वीनदीशा दिशति दश दिशो दर्शयन्प्राग्दृशो यः
सादृश्यं दृश्यते नो सदशशतदृशि त्रैदशे यस्य देशे ।
दीप्तांशुर्वः स दिश्यादशिवयुगदशादर्शितद्वादशात्मा
शं शास्त्यश्वांश्च यस्याशयविदतिशयाद्दन्दशूकाशनाद्यः ॥ ९४ ॥

ஸாத்³ரி த்³யூர்வீநதீ³ ஶா தி³ஶதி த³ஶ
தி³ஶோ த³ர்ஶயன் ப்ராக்³த்³ருஶோ ய:,
ஸாத்³ருஶ்யம் த்³ருஶ்யதே நோ ஸத³ஶ-
ஶத த்³ருஶி த்ரைத³ஶே யஸ்ய தே³ஶே।
தீ³ப்தாம்ஶுர்வ: ஸதி³ஶ்யாத ஶிவ
யுக³ த³ஶாத³ர்ஶிதத்³வாத³ஶாத்மா,
ஶம் ஶாஸ்த்யஶ்வாம்ஶ்ச யஸ்யாஶய
வித³திஶயாத்³த³ந்த ஶூகாசநாத்³ ய: ॥ 94 ॥

ஸ்ரீ ஸூர்ய பகவான் உதயமாகும்போது பத்து திக்குகளிலும் அவருடைய கிரணங்கள் பரவுவதால், அந்த பத்து திக்குகளையும் மலைகள், ஆகாசம், பூமி, ஸமுத்திரம் போன்றவைகளைக் காட்சிக்கு வெளிப்படுத்துகிறார். ஆயிரம் கண்கள் படைத்த தேவேந்திரன் அரசாளும் தேவலோகத்தில் கூட ஸூர்ய தேவனுக்கு இணையான தேவனைக் காண முடியாது. யுகாந்தத்தில் வரும் ப்ரளய காலத்தில் அவர் பன்னிரண்டு உருவங்களை ஏற்கிறார். பாம்புகளை உணவாகக் கொண்ட கருடதேவனின் மூத்த சகோதரனான அருணதேவன் ஸூர்ய பகவானின் விருப்பத் திற்கு இணங்க தேர்க்குதிரைகளை ஏவிச் செலுத்துகிறான். இப்படிப்பட்ட புகழ்வாய்ந்த கடுமையான கிரணங்களைக் கொண்ட ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களுக்கு மங்களங்களை நல்கட்டும்.

**விசேஷக் குறிப்பு**

"தர்ஶயன் த்ருஶோ ய:" கண்களுக்கு பார்க்கும் சக்தியை அளிப்பவர். இக்கருத்து வேதப்ரமாணத்தைக் கொண்டது. "அக்ஷி உபநிஷத்தில்" "ஓம் நமோ பகவதே ஸ்ரீஸூர்யாய ஆதித்யாய அக்ஷிதேஜஸே அஹோவாஹினி வாஹினி ஸ்வாஹா" என்ற மந்த்ரம் ஒரு பிரமாணம். "சக்ஷுர் நோ தேவ: ஸவிதா" என்று ஸூர்யோபநிஷத்தில் வரும் வாக்கியம் இன்னொரு பிரமாணம்.

"யுகத்தின் முடிவில் 12 உருவங்களை ஏற்கிறார்". இந்த கூற்றுக்கு ப்ரமாணம், "க்ருத்வா த்வாதஶாத்மானம், த்வாத ஶாதித்யதாம் கத:। ஸம்ஹ்ருத்யைகார்ணவம் ஸர்வம் த்வம் ஶோஷயஸி ரஶ்மிபி: ।।" என்ற ஒரு புராண சுலோகமும் "த்வாதஶாத்மன் நமோ (அ)ஸ்து தே" என்ற ஆதித்ய ஹ்ருதய சுலோகமும் பிரமாணம். விஷ்ணுபுராணத்தில் அந்த பன்னிரண்டு ஆதித்யர்களின் பெயர்கள் கூறப்படுகின்றன. அவைகளாவன - தாதா, அர்யமா, மித்ரன், வருணன், அம்ஶு, பகன், இந்த்ரன், விவஸ்வான், பூஷா, த்வஷ்டா, ஸவிதா, விஷ்ணு என்பதாகும்.

**விசேஷ பலச்ருதி**

கண் உபாதைகள் நீங்கும். கண்நோய்கள் விலகும். கண்பார்வை தீக்ஷண்யம் அடையும்.

## 95. ஸூர்யன் இல்லையேல் புண்யதீர்த்தங்களுக்கு மகிமை கிடையாது.

तीर्थानि व्यर्थकानि ह्रद-नद-सरसी-निर्झराम्भोजिनीनां
नोदन्वन्तो नुदन्ति प्रतिभय-मशुभ-श्वभ्र-पातानुबन्धि ।
आपो नाकापगाया अपि कलुषमुषो मज्जतां नैव यत्र
त्रातुं यातेऽन्यलोकान् स दिशतु दिवसस्यैकहेतुर्हितं वः ॥ ९५ ॥

தீர்த[2]ாநி வ்யர்த[2]கானி ஹ்ரத[3]நத[3]
ஸரஸீ நிர்ஜ[2]ராம்பே[4]ா ஜினீனாம்,
நோத[3] ன்வந்தோ நுத[3]ந்தி ப்ரதிப[4]ய-
மஶூப[4] ஶ்வப்[4]ரபாதாநுப[3]ந்தி[4] ।
ஆபோ நாகாபகா[3]யா அபி கலுஷ-
முஷோ மஜ்ஜதாம் நைவ யத்ர,
த்ராதும் யாதே(அ)ன்ய லோகான்
ஸதி[3]ஶது தி[3]வஸ ஸ்யைக ஹேதுர் ஹிதம் வ: ॥ 95 ॥

ஸ்ரீ ஸூர்ய பகவான் த்ரிலோகங்களை விட்டு, வேறு லோகங்களுக்குச் சென்றுவிட்டால் புணய தீர்த்தங்களுக்கு மகிமையே இல்லாமல் போய்விடும். அவைகள் வியர்த்தமாகவே இருக்கும். புனிதமான ஸரஸ்ஸுகள், நதிகள், மடுக்கள், நீர்வீழ்ச்சிகள், தாமரைத் தடாகங்கள் யாவும் வீணே இருக்கும். நரகங்களுக்குத் தள்ளிவிடும் பாபங்களைப் போக்க ஸமுத்ரங்கள் சக்தியற்றிருக்கும். அப்பொழுது தேவகங்கையில் ஸ்நானம் செய்தால் கூட பாபங்கள் நீங்கிப்போகா. ஸூர்ய பகவான் ஒருவரே பகலுக்குக் காரணமாக இருப்பவர். அப்படிப்பட்ட ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களுக்கு ஹிதமானவைகளை அருளட்டும்.

**விசேஷக் குறிப்பு**

பகலில் இல்லாமல் இரவில் புனித தீர்த்தங்களில் நீராடினால் புண்யம் ஏதுமில்லை என்பது ஒரு மரபுக்கருத்து.

**96. ஸூர்யன் இல்லாததால் இரவும் பிரளயத்திற்கு சமானமானதே!**

एतत्पाताल-पङ्कप्लुतमिव तमसैवैकमुद्गाढमासी-
दप्रज्ञाताप्रतर्क्यं निरवगति तथालक्षणं सुप्तमन्तः ।
यादृक्सृष्टेः पुरस्तान्निशि निशि सकलं जायते तादृगेव
त्रैलोक्यं यद्वियोगादवतु रविरसौ सर्गतुल्योदयो वः ॥ ९६ ॥

ஏதத் பாதால பங்க ப்லுதமிவ தமஸை-
வைக முத்³கா³ட⁴மாஸீத்,
அப்ரக்ஞாதா-ப்ரதர்க்யம்
நிரவக³தி தத²ா லக்ஷணம் ஸுப்தமந்த: ।
யாத்³ருக்ஸ்ருஷ்டே: புரஸ்தாந்நிஶி நிஶி ஸகலம்
ஜாயதே தாத்³ருகே³வ,
த்ரைலோக்யம் யத்³வி யோகா³த்³வது
ரவிரஸௌ ஸர்கதுல்யோத³யோ வ: ॥ 96 ॥

ப்ரளயம், ப்ரளயம் என்று கூறுகிறார்களே, அது எப்படி இருக்கும்? அதை நாம் எங்கும் தேட வேண்டாம்; ஒவ்வொரு நாள் இரவும் ஒரு பிரளயம் தான்! எப்படி?

எங்கும் கும்மிருட்டாக இருக்கும். உலகம் அதில் மூழ்கிப் போயிருக்கும், பாதாள லோகத்தில் சேற்றில் உலகம் புதைந்து போனதுபோல் இருக்கும். எதையும் ப்ரத்யக்ஷமாகப் பார்க்க முடியாது. எதையும் ஊஹித்தறியக்கூட முடியாது. எதுவும் புத்திக்குப் புலனாகாது. உலகமே ஆழ்ந்த நித்ரையில் உறங்கிக் கொண்டிருக்கும். இவைகள் யாவும் ப்ரளயத்தின் அடையாளங்கள். உலக ஸ்ருஷ்டிக்கு முன்னால், அதாவது ப்ரளயகாலத்தில் உலகம் எப்படி இருந்ததோ, அப்படியே ஒவ்வொரு நாள் இரவு காலத்திலும் உலகம் இருக்கும். ஸூர்யன் உதயமானதும் உலகமே புதிதாக ஸ்ருஷ்டி செய்யப்பட்டதைப் போலிருக்கும். இவ்விதம் ஸூர்யனைவிட்டுப் பிரிந்திருக்கும் முவ்வுலகங்களும் (அதாவது இரவு நேரத்தில்) ஒரு நித்திய பிரளயத்தில் ஆழ்ந்துவிடும். ஸூர்யோதயம் தான் அப்பொழுது நித்திய ஸ்ருஷ்டி. இத்தகைய மகிமையைக் கொண்ட ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களை பரிபாலிக்கட்டும்!

**97. தேசகாலங்களுக்கு உட்பட்டவர் அல்லர்; மாறாக அவற்றின் நியாமகர் ஸ்ரீ ஸூர்ய பகவான்.**

द्वीपे योऽस्ताचलोऽस्मिन्भवति खलु स एवापरत्रोदयाद्रि-
र्या यामिन्युज्ज्वलेन्दुद्युतिरिह दिवसोऽन्यत्र तीव्रातपःसः ।
यद्वश्यौ देशकालाविति नियमयतो नो तु यं देशकाला-
वव्यात्स स्वप्रभुत्वाहितभुवनहितो हेतुरह्नामिनो वः ॥ ९७ ॥

த்[2]வீபே யோ(அ)ஸ்தாசலோ(அ)ஸ்மின்
ப[4]வதி க[2]லு ஸ ஏவாப ரத்ரோத[3]யாத்[3]ரிர்,
யா யாமின் யுஜ்வலேந்து[3]த்யு[3]தி-
ரிஹ தி[3]வஸோ(அ)ன்யத்ர தீவ்ராதப: ஸ: ।
யத்[3]வஶ்யௌ தே[3]ஶகாலாவிதி நியமயதோ
நோது யம் தே[3]ஶகாலா-
வவ்யாத்ஸ ஸ்வப்ரபு[4]த்வாஹிதபு[4]வன
ஹிதோ ஹே துர ஹ்னாமிநோ வ: ॥ 97 ॥

பூமண்டலம் ஸப்தத்வீபங்களைக் கொண்டது. மேரு பர்வதம் அதன் கர்ணிகையாக இருக்கிறது. ஸூர்யதேவன் மேரு பர்வதத்தை தினந்தோறும் வலம் வருகிறார். அப்பொழுது பூமண்டலத்தின் ஒரு பாதியில் பகலாகவும், இன்னொரு பாதியில் இரவாகவும் இருக்கும். மேரு பர்வதமே, பூமண்டலத்தின் ஒரு பாதிக்கு உதயாசலமாகவும் மற்றொரு பாதிக்கு அஸ்தமன கிரியாகவும் இருக்கிறது. இந்த தத்துவத்தை இந்த ச்லோகம் விவரிக்கிறது.

பூமண்டலத்தின் ஒரு த்வீபத்தில் எது அஸ்தமன கிரியாக இருக்கிறதோ, அதே மலை இன்னொரு த்வீபத்திற்கு உதயாசலமாக இருக்கிறது. ஒரு த்வீபத்தில் நள்ளிரவாக

இருக்கும்போது அங்கே சந்திரன் உஜ்ஜ்வலமாகப் பிரகாசிக்கிறார்; அதே சமயம், (எதிர்திக்கில்) இன்னொரு த்வீபத்தில் ஸூர்யன் சுட்டெரிக்கும் வெயிலுடன் (நடுப்பகல்) பிரகாசிக்கிறார். ஸூர்யதேவனை தேசம், காலம் போன்றவைகள் கட்டுப்படுத்த மாட்டா. மாறாக அவற்றை நியாமகம் செய்வதே ஸூர்யதேவன் தான். வேறு விதத்தில் கூறுவதானால், ஸூர்யன் எங்கு உதிக்கிறாரோ அதுதான் கிழக்குத் திசை, அதுதான் பகலின் ஆரம்பம். அதே விதம் அவர் எங்கு அஸ்தமிக்கிறாரோ, அதுதான் மேற்கு, அதுதான் இரவின் தொடக்கம். இவ்வாறு அவர் தினம் என்ற பகல் - இரவுகளுக்கு காரணபூதர். அவர் தன்னுடைய மாட்சிமையின் மூலம் உலகங்களுக்கு க்ஷேமத்தை அளிக்கிறார். இப்படிப்பட்ட ஸூர்ய பகவான் உங்களைப் பரிபாலிக்கட்டும்.

**98. க்ரஹங்களுக்கு அதிபதி ஸ்ரீ ஸூர்ய பகவானே!**

व्यग्रैरग्र्यग्रहेन्दु-ग्रसनगुरु भरैर्नो समग्रैरुदग्रैः

प्रत्यग्रैरीषदुग्रैरुदयगिरिगतो गोगणैर्गौरयन् गाम् ।

उद्गाढार्चिर्विलीना-मरनगर-नग-ग्राव-गर्भामिवाह्ना-

मग्रे श्रेयो विधत्ते ग्लपयतु गहनं स ग्रहग्रामणीर्वः ॥ ९८ ॥

வ்யக்3ரைரக்3ர்ய க்3ரஹேந்துக்3ரஸன

3குரு ப4ரைர் நோ ஸமக்3ரைருதக்3ரை:,

ப்ரத்யக்3ரை ரீஷது3க்3ரைருத3ய கி3ரிக3

தோ கோ3க3ணைர் கௌ3ரயன் கா3ம்।

உத்3கா3ட4ார்சிர் விலீனாமர நக3ரநக3

க்3ராவக3ர்ப4ாமிவாஹ்னாம்,

அக்3ரே ஶ்ரேயோ வித4த்தே

க்3லபயது க3ஹனம் ஸக்3ரஹக்3ராமணீர் வ: ॥ 98 ॥

ஸூர்யதேவன் உதயகிரியை அடைந்தபோது (அதாவது உதயமானபோது) அவருடைய கிரணத்திரள்கள் பூமண்டலத்தை கௌரவப்படுத்துகின்றன. அந்த கிரணங்கள் வேகமாகப் பரவுகின்றன. கீழ்த்திசையில் காணப்படும் சந்திரனை உள்ளிட்ட உன்னத க்ரஹங்கள் அனைத்தையும் அந்த கிரணங்கள் விழுங்கிவிடுகின்றன. அவைகள் பூரணமாக இல்லாவிட்டாலும், மேல் நோக்கியே இருக்கின்றன. புத்தம்புதியனவாகவும் பொலிகின்றன. சிறிதளவேயான வெப்பத்தைக் கொண்டிருக் கின்றன. தேவலோகத்தில் இருக்கும் மலைகள், பாறைகள் ஒரு சமயம் காந்தி பொருந்தியவைகளாகவும் (அதாவது ஸூர்ய கிரணங்கள் பாயும்போது) இன்னொரு சமயம் காந்தியை இழந்தவைகளாகவும் (அதாவது ஸூர்ய வெளிச்சம் இல்லாத போது) இருக்கின்றன. உலகங்களுக்கு க்ஷேமத்தை அளிப்பவர் ஸூர்ய பகவான். அவரே எல்லா க்ரஹங்களுக்கும் அதிபதி. இத்தகைய பெருமைகளைக் கொண்ட ஸூர்ய பகவான் உங்கள் பாபங்களை அகற்றிவிடட்டும்!

**99. மற்றவர்களுக்கு இயற்பெயராக அமைந்த சொற்கள் அனைத்தும் ஸ்ரீ ஸூர்ய பகவானுக்கு காரணப் பெயராக (உரிச்சொற்களாக) அமையும்.**

योनिः साम्नां विधाता मधुरिपुर-जितो धूर्जटिः शंकरोऽसौ
मृत्युः कालोऽलकायाः पतिरपि धनदः पावको जातवेदाः ।
इत्थं संज्ञा डवित्थादिवदमृतभुजां या यदृच्छाप्रवृत्ता-
स्तासामेकोऽभिधेयस्तदनुगुणगुणैर्यः स सूर्योऽवताद्वः ॥ ९९ ॥

யோநி:ஸாம்னாம் வித[4]தா மது[4]ரிபு-
ரஜிதோ து[4]ர்ஜடி: ஶங்கரோ (அ)ஸௌ,
ம்ருத்யு: காலோ(அ)லகாயா: பதிரபி
த[4]நத[3]: பாவகோ ஜாதவேதா[3]:।

இத்த2ம் ஸம்க்ஞா ட3வித்த2ாதி3வத3ம்ருதபு4ஜாம்
யா யத்2ருச்ச2ா ப்ரவ்ருத்தா:,
தாஸாமேகோ(அ)பி4தே4 யஸ்
தத3நுகு3ணகு3ணைர்ய: ஸ ஸூர்யோ(அ)வதாத்3வ: ॥ 99 ॥

ப்ரஹ்மதேவனுக்கு விதாதா என்பது இயற்பெயர்; ஸாமங்களுக்கு (வேதங்களுக்கு) மூலகாரணர் என்பது விசேஷணப்பெயர். (காரணப்பெயர்). மது என்ற அரக்கனைக் கொன்றவர் என்பதனால் மதுரிபு என்று விஷ்ணுவுக்கு அஜிதன் (ஜெயிக்கப்பட முடியாதவர்) என்ற உரிச்சொல் பெயர். சங்கரன் (க்ஷேமத்தைச் செய்பவர்) என்றறியப்பட்ட பரமசிவனுக்கு தூர்ஜடி (கங்கையை சிரஸ்ஸில் கொண்டவர் அல்லது ஜடாமுடியைக் கொண்டவர்) என்று அடைமொழிப்பெயர். காலன் என்ற இயற்பெயர் கொண்ட யமனுக்கு ம்ருத்யு (பரலோகத்திற்கு அழைத்துச் செல்பவன்) என்ற அடைமொழிப் பெயர். அலகாபுரி அரசனான குபேரனுக்கு தனதன் (செல்வத்தை அளிப்பவன்) என்ற விசேஷணப்பெயர். பாவகன் என்ற அக்னிதேவனுக்கு ஜாதவேதஸ் என்ற உரிச்சொல் பெயர். இப்படி இதர கடவுளர், தேவர்களுக்கு ப்ரத்யேகமான உரிச்சொற்கள் அமைந்துவிட்டன. இது யதேச்சையாக அமைந்த பெயர்கள். டவித்தன், விவித்தன் என்ற சில பெயர்கள் யதேச்சையாக சிலருக்கு அமைந்துவிடு கின்றன. இப்படி ஒவ்வொரு தேவனை குறிப்பிடும் வகையில் இயற்பெயர்கள், காரணப்பெயர்கள் ப்ரத்யேகமாக அவரவர் களுக்கு அமைந்துவிட்டன. ஆனால் அத்தனை காரணப் பெயர்களும் ஸூர்யதேவன் ஒருவருக்கு மட்டுமே பொருந்துவ தாகும். அதாவது, ஸாமங்களுக்கு மூலகாரணம், அஜிதன், சங்கரன், ம்ருத்யு, தனதன், ஜாதவேதஸ் என்ற அனைத்து விசேஷணப்பெயர்களும் ஸ்ரீ ஸூர்ய பகவான் ஒருவரையே

சார்ந்திருக்கும். ஏனெனில் அந்தந்த விசேஷணப்பெயர்களுக்கு குணவிசேஷங்கள் அவர் ஒருவர்தான் கொண்டிருக்கிறார். அப்படிப்பட்ட ஸ்ரீ ஸூர்ய பகவான் உங்களைக் காப்பாற்றட்டும்.

**100. எல்லா காலத்திலும் எல்லாமாய் இருந்து எல்லா விதத்திலும் எல்லா உபகாரங்களையும் நல்குபவர்.**

देव: किं बान्धव: स्यात्प्रियसुहृदथवाऽऽचार्य आहोस्विदर्यो
रक्षा चक्षुर्नु दीपो गुरुरुत जनको जीवितं बीजमोज: ।
एवं निर्णीयते य: क इव न जगतां सर्वथा सर्वदाऽसौ
सर्वाकारोपकारी दिशतु दशशताभीषुरभ्यर्थितं व: ॥ १०० ॥

தே3வ: கிம் பா3ந்த4வ: ஸ்யாத் ப்ரிய
ஸுஹ்ருத3த2வா (ஆ)சார்ய ஆஹோ ஸ்வித3ர்யோ,
ரக்ஷா சக்ஷுர் நு தீ3போ
கு3ருருத ஜனகோ ஜீவிதம் பீ3ஜமோஜ: ।
ஏவம் நிர்ணீயதே ய: க இவ ந
ஜக3தாம் ஸர்வத2ா ஸர்வதா3 (அ)ஸௌ,
ஸர்வாகாரோபகாரீ தி3ஶது த3ஶஶதாபீ4ஷுரப்4
யர்தி2தம் வ: ॥ 100 ॥

அகில புவனங்களுக்கெல்லாம் எல்லாவிதத்திலும் எல்லா காலத்திலும் எல்லா தேவதா ஸ்வரூபங்களிலும் இருந்து நமக்கு எல்லா நலன்களையும் நல்கும் இந்த ஸ்ரீ ஸூர்ய பகவானை என்னவென்று அழைப்பது! அவர் தேவனா? நமது உறவினனா? மிகப்பிரியமான நண்பனா? அல்லது ஆசார்யரா? மரியாதைக்குரிய உயர்குலத் தோன்றலா? நமக்கு ரக்ஷையா? நமக்கு கண்ணே போன்றவரா? (வழிகாட்டும்) ஒளிவிளக்கா? குருவா? தந்தையா? நமது உயிரே போன்றவரா? மூல காரணப் பொருளா? பலமா?

இவ்விதம் அடுக்கடுக்கான கேள்விகளுக்கு யார்தான் விடை காணமுடியும்? வாஸ்தவத்தில் இவர் எல்லா கேள்விகளுக்கும் ''ஆம், ஆம்'' என்று சொல்லக்கூடிய ஆயிரக்கணக்கான கிரணங்களைக் கொண்ட ஸ்ரீஸூர்ய பகவானேயாவார். அவர் நீங்கள் வேண்டுவன அனைத்தையும் உங்களுக்கு அருள் புரியட்டும்!

## VII. ஸகல காரிய ஸித்திகளைக் கூறும் பலச்ருதி (101)

**101. ஸகல காரிய ஸித்திகளைக் கூறும் பலச்ருதி**

श्लोका लोकस्य भूत्यै शतमिति रचिताः श्रीमयूरेण भक्त्या
युक्तश्चैतान्पठेद्यः सकृदपि पुरुषः सर्वपापैर्विमुक्तः ।
आरोग्यं सत्कवित्वं मतिमतुलबलं कान्तिमायुःप्रकर्षं
विद्यामैश्वर्यमर्थं सुतमपि लभते सोऽत्र सूर्यप्रसादात् ॥ १०१ ॥

ஶ்லோகா லோகஸ்ய பூ⁴த்யை
ஶதமிதி ரசிதா: ஸ்ரீமயூரேண ப⁴க்த்யா,
யுக்த: ச ஏதான் படே²த்ய: ஸக்ருத³பி
புருஷ: ஸர்வ பாபைர் விமுக்த: ।
ஆரோக்யம் ஸத்கவித்வம் மதிமதுல-
ப³லம் காந்திமாயு: ப்ரகர்ஷம்,
வித்³யாமைஶ்வர்யமர்த²ம் ஸுத-
மபிலப⁴தே ஸோ(அ)த்ர ஸூர்ய ப்ரஸா³தா³த் ॥ 101 ॥

இவ்வாறாக மயூரகவி லோகக்ஷேமத்திற்காக நூறு ச்லோகங்களை இயற்றினார். இந்த படைப்பை எவனொருவன்

பக்தியுடன் ஒரு தடவையாவது படிக்கிறானோ, அவன் எல்லா பாபங்களிலிருந்தும் விடுபட்டவன் ஆகிறான். மேலும் திடமான தேக ஆரோக்யம், சிறந்த கவிதைகளை இயற்றும் ஆற்றல், நல்ல புத்தி, இணையற்ற தேஹபலம், தேஹகாந்தி, நீண்ட ஆயுள், இஹ-பர சுகங்களை நல்கும் வித்யை, ஐசுவரியம் (நீங்காத) செல்வம், ஸத்ஸந்தானம் ஆகிய அனைத்து நலன்களையும் ஸூர்ய பகவானின் அருளால் பெறுவான்!

''ஒரு தடவையாவது'' என்று கூறப்பட்டது, ஒரு ''ஔபசாரிக'' மான வார்த்தை. ஏனெனில், பக்தி ச்ரத்தையுடன் இதனைப்படித்து, பொருள் உணர்ந்தவன் எவனும் ''ஒரு தடவையில்'' திருப்தியடையமாட்டான், அவனுடைய ஆர்வம், மேலும் மேலும் பலதடவைகள் படித்துப் பயன் பெற அவனைத் தூண்டி விடும் என்பது கவியின் திண்ணமான அபிப்ராயம் எனக்கொள்ள வேண்டும். இவ்வித ஆர்வம் ''அனுஸ்மரணம்''. அனுபடனம்'' எனப்படுகிறது. உதாரணமாக, ''க்ருஷ்ண-அனுஸ்மரணம், ''கீர்த்தனை அனுபடனம்'' என்று வழங்கும் சொற்றொடர்கள் மூலம் அறியலாம்.

பெரும்பாலாக, எல்லா ''சதக''க்ரந்தங்களும், பெயருக்கேற்ப, 100 சுலோங்களுடன் முடிவு பெற்றுவிடுவது வழக்கம். ஆனால், மயூரகவி இந்நூலை 101 சுலோகங்களுடன் முடிக்கிறார். இதற்கு, இந்நூலைப் பொருத்தவரையில், யோக சாஸ்திர ரீதியாக, ஒரு அற்புதமான காரணம் புலப்படுகிறது. நமது இதயத்தில், முக்கியமான 101 நாடிகள் இருக்கின்றன என்றும், அவற்றின் பிரதான நாடியான 'ஸுஷும்னா' நாடி மூலமாக யோக ஸித்தி பெற்றவன் **ஸூர்ய மண்டலத்தை** அடைந்து, அதன் வழியாக ப்ரம்மலோகம் செல்கிறான் என்று வேதங்களும் யோக சாஸ்திரங்களும் கூறுகின்றன. இதன் காரணமாக 101 என்ற எண், இந்நூலைப் பொருத்தமட்டில், ஒரு தனி மகத்துவம் பெறுகிறது.

மேலும், ஓர் மணிமாலையின் மணிகளுடன் அதிகப்படியான ஒரு மணியைக் கோர்த்து அதனை ஒரு பதக்கம் (dollar or pendant) பயன்படுத்துவதுண்டு. அதே போல், இந்தப் "பாமாலை"நூலிற்கு, பலச்ருதியுடன் கூடிய இந்த சுலோகம் ஒரு பதக்கமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது போலும்!

**மயூரகவியின் ஸ்ரீ ஸூர்ய சதகம் நிறைவு பெறுகிறது.**





## என்னே! ஸ்ரீ ஸூர்யனின் மகத்துவம்!

**रथयैकं चक्रं भुजगनमिता: सप्त तुरगा:**
**निरालम्बो मार्ग: चरणविकलस्सारथिरपि ।**
**रविर्यात्येवान्तं प्रतिदिनमपारस्य नभस:**
**क्रियासिद्धि: सत्त्वे भवति महतां नोपकरणे ॥ - भोजप्रबन्ध:**

சாதனையாளர்களான மஹாபுருஷர்களின் வெற்றிக்குக் காரணம் அவர்களுடைய திறமை பலமேயன்றி, மற்றவர்கள் உதவி புரிவதிலோ, சாதனங்களிலோ அல்ல. ஸூர்யதேவன் தினந்தோறும் எல்லையில்லாத ஆகாயவீதியின் எல்லையைக் கடக்கிறார். அந்த பாதையோ ஆதாரம் ஏதும் இல்லாதது. வாகனமாக இருக்கும் ரதத்திற்கோ ஒரே ஒரு சக்ரம்தான். ஸாரதியோ (அருணன்) இடுப்பின்கீழ் கால்கள் இல்லாதவன். அதுவும் அவன் ஏழு குதிரைகளைச் சமாளிக்கவேண்டும். கடிவாளக் கயிறுகளோ பாம்புகள் உருவத்தில் இருக்கின்றன.

(இத்தனை பிரதிகூலங்கள் இருந்தும், ஸூர்யதேவனின் சாதனையை என்னே என்பது!)

- போஜப்ரபந்தம்

# Sri Surya Sathakam

ஓம்

துரியா தீதம் கண்டவர் தூய உலக இயல்பினர்
சூரியனின்றி வாழ்ந்திலர் துன்பமற்று வாழ்ந்திட நாம்
நேரிடையாகப் பணிந்திட நித்தம் போற்றிப் பணிந்திட
சூரிய சதகம் கேட்பதில் சுத்தமாய் கண்ணொளி பெற்றேன்.

26-10-1990 பித்துக்குளி




LIFCO PUBLISHERS PRIVATE LTD.
New No.36, North Road,
West C.I.T. Nagar, Chennai-600 035.
Phone: 044-2434 1538, 2433 6467
E-mail: info@lifcobooks.com